சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்
அருளிச்செய்த

# திருவாசகம்

எட்டாம் திருமுறை

தொகுதி – II

# THIRUVAACHAKAM

Sacred Utterances of
Saint Maanickavaachakar
Eighth Thirumurai
*Volume - II*

சமூக சமயச் சங்கம்
"அப்பர் இல்லம்", 21, ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராஜநகர், திருநெல்வேலி - 627 011
தமிழ்நாடு, இந்தியா.

**SOCIO RELIGIOUS GUILD**
"APPAR ILLAM", 21, FIFTH CROSS STREET,
MAHARAJANAGAR, TIRUNELVELI - 627 011
TAMILNADU, INDIA.

2004

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்
அருளிச்செய்த

# திருவாசகம்

எட்டாம் திருமுறை
தொகுதி – II

# THIRUVAACHAKAM

Sacred Utterances of
Saint Maanickavaachakar
Eighth Thirumurai
*Volume - II*


சமூக சமயச் சங்கம்
"அப்பர் இல்லம்", 21, ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராஜநகர், திருநெல்வேலி - 627 011
தமிழ்நாடு, இந்தியா.

**SOCIO RELIGIOUS GUILD**
"APPAR ILLAM", 21, FIFTH CROSS STREET,
MAHARAJANAGAR, TIRUNELVELI - 627 011
TAMILNADU, INDIA.

2004


சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

சிவ சிவ

## திருவாசகச் சிறப்பு

தொல்லை இரும்பிறவிச் சூழும் தளை நீக்கி
அல்லலறுத்து ஆனந்தம் ஆக்கியதே – எல்லை
மருவா நெறி அளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகம் என்னும் தேன்

## THE MERIT OF THIRUVAACHAKAM

Thiruvaachakam, the boundless pathway to God is the Ambrosia (Honey), which gets rid of "Bondage". As the Bondage, which is the Root cause for the cycle of birth and death, fades away, bliss settles down by chanting the Thiruvaachakam.

## மாணிக்கவாசகர் துதி

எழுதரு மறைகள் தேறா இறைவனை எல்லில் கங்குல்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுத கை தலைமேல் ஏறத் துளும்பு கண்ணீருள் மூழ்கி
அழுது அடி அடைந்த அன்பன் அடியவர்க்கு அடிமை செய்வாம்

– திருவிளையாடல் புராணம்

## SALUTATIONS

Lord Civan who could not be understood even by the hoary Vedas, was worshipped with deep devotion both day and night and on all days by Maanickavaachakar. Hands raised over his head and shedding tears he got immersed in his own tears. Thus he prayed for, and reached Lord Civan's holy feet. Let us offer our worshipful service to him and to his savants.

உ
திருச்சிற்றம்பலம்
சிவமயம்

## திருக்கைலாய பர்வதம் – Holy Mount Kailaas

காளை வாகனத்தில் ஸ்ரீகண்ட பரமசிவன் – பார்வதி – விநாயகர் – பாலமுருகன்

Lord Civa - Goddess Parvathi - Lord Vinayakar - Lord Murugan





திருக்கைலாய பரம்பரை தருமை ஆதீனம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
26-ஆவது குருமகா சந்நிதானம் அவர்களால் இந்நூல்
30-07-2004ல் சிதம்பரத்தில் வெளியிடப் பெற்றது.

THIRUK KAILAAYA PARAMBARAI DHARUMAI AADHEENAM
SRI-LA-SRI SHANMUGA DESIKA GNAANASAMBANDA PARAMAACHAARYA SWAMIGAL
RELEASED THIS BOOK IN CHIDAMBARAM
ON JULY 30, 2004.

உ
சிவமயம்

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்
அருளிய

# திருவாசகம்

(விளக்க உரை)
எட்டாம் திருமுறை

சிதம்பரம்
அருள்மிகு நடராசப் பெருமான்
அருள்தரும் சிவகாமி அம்பாள்

திருவடிகளில் சார்த்திப் பூசித்து,
தருமை ஆதீனம் 26ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களால்

தாரண வருடம் ஆடி மாதம் 15ஆம் நாள் வெள்ளிக்கிழமை
2004, ஜூலை மாதம் 30ஆம் தேதி அன்று
ஆயிரங்கால் மண்டபம் என வழங்கப்படும் இராஜ சபையில்
வெளியிடப்பெற்றது.

வெளியீடு:

**சமூக சமயச் சங்கம்,**
'அப்பர் இல்லம்', 21-ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராஜநகர், திருநெல்வேலி - 627 011
தமிழ் நாடு, இந்தியா
தொலைபேசி எண் 91 – 462 – 2574468
மின்மடல் (இ–மெயில்) apparva@yahoo.com

உ
SIVAMAYAM

# THIRUVAACHAKAM

Sacred Utterances of

## Saint Maanikkavaachakar

with detailed commentary

Released by the
26th Pontiff - Darumai Aadheenam Guru Mahaa Sannidhanam
**Sri-la-Sri Shanmuga Desiga Gnana Sambanda Paramacharya Swamigal Avergal**

on Friday, the 30th July 2004 in the

**Thousand Pillar Hall at Sri Nataraja Temple**

in Chidambaram, South India.

Publishers:

SOCIO RELIGIOUS GUILD

**'Appar Illam', 21-Fifth Cross Street,
Maharajanagar, Tirunelveli - 627 011
Tamil Nadu, South India.
Phone: 91 - 462 - 2574468
E-mail : apparva@yahoo.com**

உ
சிவ சிவ

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே"

தவத்திரு
குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

குன்றக்குடி – 630 206
சிவகங்கை மாவட்டம்
✆ 04577 – 264227; 264466

நாள் : 6 – 8 – 2004

## வாழ்த்துரை

திருவாசகம்! ஊற்று எழும் கண்ணீரால் இறைவனைத் தொழும் ஞானநூல்! பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட மணிவாசகப் பெருமான் கரைந்து உருகிய கனிந்த தெள்ளமுது! தான் கரைந்த மணிவாசகர் தந்த ஞானத்தேன்! ஊனும் உயிரும் இறைவனை உணர்வால் உணர்ந்து காட்டும்!

"கண்ணால் யானும் கண்டேன் காண்க!" மணிவாசகரின் கண்கள் கண்ட காட்சி ஞானக்கண்களை மலரச் செய்து திருவாசகம் என்ற சொல் ஓவியமாயிற்று!

அருஞ்சொற்பொருள்
விளக்க முடியாத
அமர கவிதை!
அமுது அமுது
உணர்ந்து உணர்ந்து
தெளிந்து தெளிந்து
தேட வேண்டிய
ஞானப் பாதை!
இறைமையைச் சுட்டிய இறைப்பொருள்!

நெல்லை சமூக சமயச் சங்கம் திருவாசக ஆராய்ச்சி நூலைத் தமிழ், ஆங்கிலம் மற்றும் மொழிப் பெயர்ச்சி (Transliteration) செய்து வெளியிடுவது மிகவும் போற்றுதலுக்குரியது. சமூக சமயச் சங்கம் இலவச வெளியீடாக வெளியிடுவது மற்றும் ஓர் தனிச் சிறப்பு. உயரிய ஞானப் பனுவலை வெளியிடும் சமூக சமயச் சங்கப் பணிகளைப் பாராட்டி வாழ்த்துகின்றோம்.

தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!
என்றும் வேண்டும் இன்ப அன்பு.

*பொன்னம்பல அடிகளார்*

திரு. V. ஆறுமுகம் அவர்கள்,
தலைவர், சமூக சமயச் சங்கம்,
'அப்பர் இல்லம்',
21, ஐந்தாவது குறுக்குத் தெரு,
மகாராஜநகர், திருநெல்வேலி – 627 011.

உ
சிவமயம்

✆ 0422 - 2341510

சைவசித்தாந்தப் பேராசிரியர்
Dr. *ர. வையாபுரி,* M.A., Ph.D.,
முன்னாள் முதல்வர், த. சா. அ. தமிழ்க்கல்லூரி, பேரூர்

76, தென்வடல் வீதி – 3
முத்துசாமி காலனி,
கோயம்புத்தூர் – 641 026

---

நாள் : 28 – 7 – 2004

பெருமதிப்பிற்குரிய சைவத்திரு வை. ஆறுமுகம்பிள்ளை அவர்களுக்கு,

வணக்கம். நலன். நலன் விழைவு.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய தேனினும் இனிய 'திருவாசகம்' (தமிழிலும் ஆங்கிலத்திலும்) நூல் வெளியீட்டு விழா அழைப்பிதழ் பெற்றேன். மிகவும் மகிழ்ந்தேன்.

தருமை ஆதீனம் 26–ஆவது குருமஹா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பராமாசாரிய சுவாமிகள் அவர்களால் சிதம்பரம் ஸ்ரீ நடராஜப் பெருமான் சந்நிதியில் தில்லை வாழ் அந்தணர்கள் முன்னிலையில் நூல் வெளியிடப் பெறுவது மிகவும் பொருத்தமும் சிறப்பும் உடையது.

சிதம்பரம் ஸ்ரீ நடராஜப் பெருமானே தமது திருக்கரத்தால் எழுதிக் கைச்சாத்திட்டுச் சிற்றம்பலத்தில் வாயிற்படியில் வைத்தருளிய நூலாயிற்றே. இதனை வெளியிடுவதற்கு இதனைக் காட்டிலும் சிறந்த இடம் வேறு உண்டோ!

தமிழில் அமைந்த உண்மை மூலமும் ஆங்கிலத்தில் அமைந்த எழுத்துப் பெயர்ப்பு மூலமும் தமிழிலும் ஆங்கிலத்திலும் அமைந்த பொழிப்புரைகளும் கொண்டு விளங்கும் இந்நூல் தமிழறிந்த அன்பர்களுக்கும் தமிழில் அறிவதை மறந்து போன தமிழன்பர்களுக்கும் தமிழ்ப் பக்தி நூல்களை அறிய விரும்பும் அமெரிக்க, ஐரோப்பியராதிய ஆர்வலர்களுக்கும் மிகவும் பயன்படும். அவ்வகையில் நம் தமிழகத்துக்குரிய தத்துவஞானமும் பத்தி நெறியும் வெளிநாடுகளிலும் பரவும் வாய்ப்பை இந்நூல் நல்கும்.

இத்தகைய அரிய பணியினை ஒரு குறிக்கோளாக எடுத்துக் கொண்டு அயராது உழைத்து உரிய காலத்தில் நிறைவு செய்த தங்களைப் பாராட்டுவதற்கு வார்த்தையில்லை. தங்களின் பணியினை முன் மாதிரியாகக் கொண்டு என்னைப் போன்றவர்கள் பணிசெய்ய முயல்வர். தங்களது ஆசியும் இறையருளும் முன்நிற்க வேண்டும்.

மேலும் இத்தகைய பணிகளைத் தாங்கள் செய்து நிகழ்கால உலகிற்கும் வருங்கால சந்ததியினர்க்கும் வழிகாட்டியாக விளங்கும் வகையில் தங்களுக்கு நீடிய நல்லாயுளும் நிறை செல்வமும் அரோக திடகாத்திரமும் அளித்தருள வேண்டும் என்று எனது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீகாமாட்சியம்பா சமேத ஏகாம்பரேசுவரர் திருவடியில் விண்ணப்பம் செய்து எனது மகிழ்வுரையை நிறைவு செய்கிறேன்.

வணக்கம்.

அன்பன்,
ர. வையாபுரி

உ
சிவ சிவ

# திருவாசகச் சிறப்பு

தொல்லை இரும்பிறவிச் சூழும் தளை நீக்கி
அல்லலறுத்து ஆனந்தம் ஆக்கியதே – எல்லை
மருவா நெறி அளிக்கும் வாதவூர் . எங்கோன்
திருவா சகம் என்னும் தேன்

## THE MERIT OF THIRUVAACHAKAM

Thiruvaachakam, the boundless pathway to God is the Ambrosia (Honey), which gets rid of "Bondage". As the Bondage, which is the Root cause for the cycle of birth and death, fades away, bliss settles down by chanting the Thiruvaachakam.

# மாணிக்கவாசகர் துதி

எழுதரு மறைகள் தேறா இறைவனை எல்லில் கங்குல்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுத கை தலைமேல் ஏறத் துளும்பு கண்ணீருள் மூழ்கி
அழுது அடி அடைந்த அன்பன் அடியவர்க்கு அடிமை செய்வாம்

– திருவிளையாடல் புராணம்

## SALUTATIONS

Lord Civan who could not be understood even by the hoary Vedas, was worshipped with deep devotion both day and night and on all days by Maanickàvaachakar. Hands raised over his head and shedding tears he got immersed in his own tears. Thus he prayed for, and reached Lord Civan's holy feet. Let us offer our worshipful service to him and to his savants.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **Thiruvaachakam**<br>**Volume I and II** |
| General Editor | : | Senthamil Sivaneri Chelvar<br>**V. Arumugam** |
| Content | : | Hymns in praise of Lord Civan |
| Language | : | Tamil and English |
| Edition | : | First |
| Year of Edition | : | July 2004 |
| Size of the Book | : | 11" X 8.5" |
| Paper | : | 80 GSM MAP LITHO |
| Binding | : | Hard Binding |
| Type | : | 12 Point |
| Total Pages | : | 896 + 332 |
| Copies | : | 1000 |
| Typesetting | : | Siva Computers,<br>12, Paranjudar Street,<br>Palayamkottai, Tirunelveli - 627 002<br>Tamil Nadu, India.<br>✆ 91 - 462 - 2579673 |
| Printed by | : | The Sudarsan Offset Printers,<br>153-A, Mundaga Nadar Street,<br>Sivakasi - 626 123.<br>Tamil Nadu, India.<br>✆ 91 - 4562 - 220780 |
| Publishers | : | SOCIO RELIGIOUS GUILD,<br>'APPAR ILLAM'<br>21- Fifth Cross Street,<br>Maharajanagar, Tirunelveli - 627 011.<br>Tamil Nadu, India.<br>✆ 91 - 462 - 2574468 |

உ
சிவ சிவ

## நால்வர் வயது

அப்பருக்கு எண்பத்தி ஒன்று அருள் வாதவூரருக்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம் – இப்புவியில்
சுந்தரருக்கு மூவாறு தொன் ஞான சம்பந்தருக்கு
அந்தம் பதினாறு அறி.

## AGE OF THE FOUR SAINTS

Saint Appar (Thirunaavukkarasu Swamigal) was blessed with eighty one years of life while Saint Maanickavaachaka Swamigal attained Para Mukthi at thirty two. Here in this earth Saint Sundaramoorthy Swamigal lived upto eighteen years, while Sage Thirugnana Sambandha Swamigal had a spell of life for sixteen years.

## நால்வர் குருபூசை நட்சத்திரங்கள்

சித்திரைச் சதயம் அப்பர் சிறந்த வைகாசி மூலம்
அத்தரைப் பணி சம்பந்தர் ஆனிமா மகத்தில் அந்த
முத்தமிழ் வாதவூரர் முதிய நல் ஆடி தன்னில்
சுத்தமாஞ் சோதி நாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்.

## STARS ON THE GURU POOJA DAY OF THE FOUR SAINTS

In the Tamil month of "Chitrai" the time of star "Sadayam"(சதயம் - 24$^{th}$ Star) Saint Appar Swamigal reached Lord Civan's Holy Feet;

In the Tamil month of "Vaikasi" with star Mulam (மூலம்-19$^{th}$ Star) Sage Thirugnana Sambandhar attained Moksha; In the Month of "Aani" with star "Magham" (மகம் - 10$^{th}$ Star) Saint Maanickavaachakar became one with Lord Nataraja at Chidambaram;

While in the Tamil Month of "Aadi" with star "Swaati" (சுவாதி - 15$^{th}$ Star) Saint Sundara Moorthy Swamigal reached Lord Civan's aboard in Mount Kailas.

# பொருளடக்கம் CONTENTS



ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

**SAINT MAANIKKAVAACHAKAR**

உ
சிவமயம்

# மாணிக்கவாசகர் வரலாறு

திருநெறிச்செம்மல், நல்லிசைப்புலவர்
வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்கள்
(பொறுப்பு முதல்வர், தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி)
எழுதி உதவியது

எழுதரு மறைகள்தேறா இறைவனை எல்லிற் கங்குல்
பொழுதறு காலத்து என்றும் பூசனை விடாது செய்து
தொழுத கை தலை மீது ஏறத் துளும்பு கண்ணீருள் மூழ்கி
அழுது அடி அடைந்த அன்பன் அடியவர்க்கு அடிமை செய்வாம்.

- திருவிளையாடற் புராணம்.

செந்தமிழ் மணமும் சிவமணமும் ஒருங்கே கமழும் திருநாடு தென்பாண்டி வள நாடு. இந்நாட்டை அணிசெய்வது, "புனல்யாறு அன்று இது பூம்புனல்யாறு" எனப் புலவர்களால் போற்றப்படும் வைகை ஆறு ஆகும். இந்நதி வரலாற்றுச் சிறப்பும், புராண இதிகாசச் சிறப்புகளும் உடையது.

## திரு அவதாரம்

வைகை ஆற்றங்கரையில் மதுரை மாநகரத்திலிருந்து ஏழு மைல் தொலைவில் திருவாதவூர் என்ற தலம் உள்ளது. இத்தலத்தில் இறைவன் வாதபுரீசுவரர் என்னும் திருநாமத்தோடு எழுந்தருளி உள்ளார். இத்தலம் வாயு பூசித்த காரணத்தால் வாதபுரம் என வழங்கப்பெறுகிறது. இந்நகரில் அமாத்திய அந்தணர் குலத்தில் சிவநெறி பிறழாச் சிந்தையாளராகிய அந்தணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் பெயர் சம்புபாதாசிருதர். அவர் மனைவியாரின் பெயர் சிவஞானவதி என்பதாகும்.

இவ்விருவரும் இல்லறம் வழுவாது ஒழுகிவரும் நாளில் தென்னாட்டில் புறச் சமயமாகிய பௌத்தம் மேலோங்கி இருந்தது. சைவ சமய வளர்ச்சி குன்றியிருந்தது. இறைவன் திருவருளால் இவ்விருவருக்கும் சைவம் தழைக்கவும், வேத சிவாகம நெறிகள் விளங்கவும் திருமகனார் ஒருவர்

திருஅவதாரம் செய்தருளினார். தாய் தந்தையர் மனம் மகிழ்ந்து அம்மகனார்க்கு "திருவாதவூரர்" என்னும் திருப்பெயர் சூட்டினர்.

## அமைச்சுரிமை ஏற்றல்

திருவாதவூரர்க்கு வயது ஏற ஏறக் கலைஞானங்களும் நிரம்பின. பதினாறு வயதளவில் வாதவூரர் கலைஞானங்கள் அனைத்தும் கைவரப் பெற்றார். இவரது கல்வித் திறத்தையும், நல்லொழுக்கத்தையும் கண்டு அனைவரும் வியந்தனர். அக்காலத்தில் பாண்டிய நாட்டை ஆண்டு வந்த மன்னன் **அரிமர்த்தன பாண்டியன்** என்பவன் ஆவான். திருவாதவூரரது அறிவுத்திறனைக் கேள்வியுற்ற அரிமர்த்தன பாண்டியன் அவரைத் தனது அவைக்கு அழைத்து அளவளாவி, அவரது அறிவு நலனைக் கண்டு வியந்து "தென்னவன் பிரமராயன்" என்னும் பட்டம் சூட்டித் தனது முதன் மந்திரியாக அமர்த்திக் கொண்டான். திருவாதவூரரும் இஃது இறைவனுடைய ஆணையென்று எண்ணி அதனை ஏற்றுக்கொண்டு அமைச்சுரிமைத் தொழிலை மிகக் கவனத்தோடு இயற்றி வந்தார். வாதவூரரது அமைச்சியலால் குடிமக்கள் மிக்க மகிழ்ச்சி அடைந்தனர். வாதவூரரும், அரிமர்த்தன பாண்டியனுக்குக் கண்ணும் கவசமுமாக விளங்கி வந்தார்.

## பதவியில் பற்றின்மை

வாதவூரர் தமக்குக் கிடைத்த அமைச்சுரிமைத் தகுதியால் உலக அனுபவ இன்பங்களில் மகிழ்ச்சி அடையவில்லை. உலக வாழ்வும், வாழ்வில் காணும் பெரும் போகமும் நிலையற்றவை என்று அறிந்தமையால், அப்பதவியில் அவர்க்கு உவர்ப்புத் தோன்றியது. "கூத்தினர் தன்மை வேறு கோலம் வேறு ஆகுமாறு போல" இவர் மேற்கொண்டிருந்த அமைச்சுரிமைக்கும், இவருக்கும் தொடர்பில்லாமல் இருந்தது. ஒரு சிறந்த குருநாதரைத் தேடும் வேட்கை இவருக்கு மிகுந்து வந்தது. பிறவிப் பெரும் பயனை அடைவதற்குரிய வழி என்ன என்பதிலேயே இவருடைய சிந்தனை சுழன்று கொண்டிருந்தது.

## குதிரைகள் வாங்கச் செல்லல்

ஒரு நாள் வாதவூரர் அரசவையில் அமைச்சராய் வீற்றிருந்தார். அப்போது அரசனுடைய குதிரைச் சேவகர்கள் வந்து 'அரசே! நமது குதிரைப்படைகள் குறைந்துவிட்டன. வயது முதிர்ந்த குதிரைகளும், நோய் நிறைந்த குதிரைகளுமே இப்போது உள்ளன. சிறந்த குதிரைகள் நம்மிடம்

இல்லை. ஆதலின் குதிரைப் படைகளைப் பலப்படுத்தவேண்டும் என்று நினைவுறுத்துவது எங்கள் கடமை' என்று வணங்கித் தெரிவித்துக் கொண்டார்கள். அப்போது அரசவையிலிருந்த சில தூதர்கள் கீழைக் கடற்கரையில் நல்ல குதிரைகள் வந்து இறங்கியிருக்கின்ற செய்தியை அரசனிடத்துத் தெரிவித்தார்கள். அரசன் அமைச்சர் பெருமானாகிய வாதவூரரைப் பார்த்து "நம்முடைய கருவூலத்திலிருந்து வேண்டும் பொருள்களைப் பணியாளர் மூலம் எடுத்துச் சென்று நல்ல குதிரைகளை வாங்கி வருக" என்று ஆணையிட்டான்.

வாதவூரரும் அக்கட்டளையை ஏற்றுப் பொற்பண்டாரத்தைத் திறந்து அளவிறந்த பொருள்களை ஒட்டகத்தின் மீதேற்றிக் கொண்டு, படைகளும் பரிசனங்களும் தன்னைச் சூழ்ந்துவர மதுரைச் சொக்கேசன் ஆலயத்திற்குச் சென்று வணங்கி மதுரையை விட்டுப் புறப்பட்டார். பல காதங்களைக் கடந்து திருப்பெருந்துறை என்னும் தலத்தை அடைந்தார். அவ்வூரை அணுக அணுக அவர் மேல் இருந்த ஏதோ ஒரு சுமை குறைந்து வருவது போலத் தோன்றியது. இத்தலமே இறைவன் தன்னை ஆட்கொள்ளும் இடம் போலும் என்ற உணர்வு தோன்றியது.

## குரு உபதேசம்

அவ்வேளையில் சிவநாம முழக்கம் எங்கிருந்தோ வருவது அவர் செவிகளுக்கு எட்டியது. அவ்வொலி வரும் திசை நோக்கி வாதவூரரும் விரைந்து சென்றார். ஓரிடத்தில் கல்லால மரம் போன்ற பெரியதொரு குருந்த மரத்தடியில் சீடர்கள் சிலரோடு ஞானமே வடிவாக ஒருவர் எழுந்தருளியிருந்தார். வேத சிவாகமங்களும், புராண இதிகாசச் சமய நூல்களும் ஆகிய பல நூல்களையும் கற்றுத் தெளிந்தவர்கள் போன்று சீடர்கள் பலர் அவர்முன் குழுமி இருந்தனர். அச்சீடர்களின் பாசமாம் பற்றறுக்கும் ஆசானாக அக்குருநாதர் வீற்றிருந்தார். அவரது வலத் திருக்கை சின் முத்திரையைக் காட்டிக் கொண்டிருந்தது. அவரது திருமுகம் ஒளி மண்டிலமாகத் திகழ்ந்தது. அவரது கண்கள் திருவருள் விளக்கத்தைச் செய்து கொண்டிருந்தன. இவ்வாறு வீற்றிருந்த குருநாதரைக் கண்ட வாதவூரர் தாம் பல நாட்களாக விரும்பியிருந்த குருநாதர் இவரே என்று எண்ணினார். காந்தம் கண்ட இரும்புபோல வாதவூரர் மனம் குருநாதர் வசமாயிற்று. இந்நிலையில் விரைந்து அருகில் சென்ற வாதவூரர் அடியற்ற மரம் போல அவரது திருவடியில் வீழ்ந்து பணிந்தார். 'ஐயனே! எளியேனை ஆட்கொண்டருளுக" என வேண்டி நின்றார். வாதவூரரின் பரிபாக நிலையைக் கண்ட குருநாதர் திருக்கண் நோக்கம், பரிசம் முதலிய தீட்சைகள்

செய்து திருவடி சூட்டித் திருஐந்தெழுத்தை அவருக்கு உபதேசம் செய்தருளினார். இவ்வாறு தம்மை ஆட்கொண்டருளிய பெருங்கருணைத் திறத்தை வியந்த வாதவூரர் அன்போடு குருநாதருடைய திருவடிகளை மீண்டும் வணங்கி எழுந்து நின்றார். ஞானாசிரியரது திருவருள் நோக்கால், ஞானத்தின் திருவுருவாக வாதவூரர் மாறினார். தமது குருநாதரின் திருவடிகளுக்குத் தம்மை ஆட்கொண்ட கருணையைக் குறித்துச் சொல்மாலைகள் பலவும் சூட்டினார்.

### மாணிக்கவாசகர்

ஞானாசிரியர் திருமுன் வாதவூரர் பாடிய தோத்திரங்கள் இனிமையோடும் கேட்போர் மனத்தை உருக்கும் அருள் விளக்கத்தோடும் இருந்த காரணத்தால் ஞானாசிரியர் வாதவூரரை நோக்கி "உனக்கு 'மாணிக்கவாசகன்' என்ற பெயர் தந்தோம்" என்று கூறி அவருக்கு அப்பெயரைத் தீட்சா நாமமாகச் சூட்டினார். அன்று முதல் வாதவூரர் என்ற திருப்பெயருடன் மாணிக்கவாசகர் என்ற பெயரும் அவருக்கு வழங்குவதாயிற்று.

### திருப்பெருந்துறைத் திருப்பணி

மாணிக்கவாசகர் குருநாதரை வணங்கி 'என்னை ஆட்கொண்ட போதே என்னுயிரும் உடைமையும் தங்கட்கு உரியவாயின. ஆதலால் அடியேன் கொண்டுவந்த பொருள்கள் அனைத்தையும் ஏற்றுக்கொண்டு அருளல் வேண்டும்' என்று குறையிரந்தார். குருநாதரும் 'அப்பொருளைக் கொண்டு சிவப்பணி செய்க' என்று அருளாணையிட்டார். அக்கட்டளையின்–படியே மாணிக்கவாசகர் அரசன் குதிரை வாங்குவதற்குத் தம்மிடம் அளித்த பொருள்கள் அனைத்தையும் சிவப்பணிகளுக்கே செலவிட்டார். நாட்கள் பல சென்றன. மாணிக்கவாசகர் அருளாரமுதத்தை உண்டு கொண்டே தெருளார் சிவானந்த போகத்துத் திளைத்திருந்தார். அமைச்சரின் வேறுபட்ட நிலையை உடன் வந்தவர்கள் கண்டு மாணிக்கவாசகரிடம் 'குதிரைகொண்டு மதுரை செல்ல வேண்டுமே' என்று தாங்கள் எண்ணி வந்த செயலை நினைவூட்டினர். மாணிக்கவாசகர் அவ்வுரைகளைக் கேளாதவராய் இறைவழிபாட்டில் ஈடுபட்டிருப்பதை அறிந்த பணியாளர்கள் மதுரை மாநகருக்குத் திரும்பிச் சென்று பாண்டிய மன்னனிடம் நிகழ்ந்தவற்றைத் தெரிவித்தனர்.

## பாண்டிய மன்னன் அழைப்பு

இச் செய்தியை அறிந்த பாண்டிய மன்னன் சினந்து திருமுகம் ஒன்று எழுதி அதை வாதவூரரிடம் சேர்ப்பித்து அவரை அழைத்து வருக என ஆணையிட்டுச் சிலரை ஏவினான். பணியாளரும் திருப்பெருந்துறையை அடைந்து அரசன் அளித்த திருமுகத்தை அமைச்சர் பிரானிடம் கொடுத்து அரசன் கட்டளையை அறிவித்து நின்றனர். அதைக்கேட்ட வாதவூரர் தம் குருநாதரிடம் சென்று நிகழ்ந்ததை விண்ணப்பித்து நின்றார். குருநாதர் புன்முறுவல் பூத்து "அஞ்சற்க, ஆவணி மூலத்தன்று குதிரைகள் வரும் என்று மன்னனிடம் அறிவித்து விலையுயர்ந்த மாணிக்கக் கல்லையும் கையுறையாகக் கொடுக்க" எனக் கூறி மாணிக்க மணியை அளித்து விடை கொடுத்து அனுப்பினார். வாதவூரரும் குருநாதரைப் பிரிய மனமில்லாதவராய்ப் பிரியா விடைபெற்று மதுரைக்கு எழுந்தருளினார்.

அரசவைக்கு வந்த மாணிக்கவாசகர் இறைவன் அருளிய மாணிக்க மணியை மன்னனிடம் கொடுத்து, 'வருகின்ற ஆவணிமூல நாளில் குதிரைகள் மதுரை வந்தடையும்' என்று கூறினார். அரசனும் சினம் மாறி மனம் மகிழ்ந்து அமைச்சரை அன்போடு வரவேற்று அருகிருத்தி அவரை மகிழ்வித்தான்.

## நரிகள் பரிகளாயின

வாதவூரருக்கு தாம் அளித்த வாக்கை நிறைவேற்ற, பெருமான் நரிகளையெல்லாம் குதிரைகளாக மாற்றி, தேவர்கள் குதிரைச் சேவகர்களாகப் புடைசூழ, தான் குதிரைத் தலைவன் போலத் திருக்கோலம் கொண்டு, வேதமாகிய குதிரையில் அமர்ந்து, மதுரையை நோக்கிப் புறப்பட்டான். குதிரைப் படைகள் மதுரை நோக்கி வருவதை ஒற்றர்கள் மூலம் மன்னன் அறிந்தான். அவன் மனம் மகிழ்ந்தது.

## பாண்டியன் பரிசு

கடல் அலைகள் போல் வந்த படைகளின் விரைந்த நடையால் எழுந்த புழுதிப் படலம் வானை மறைத்தது. குதிரைக் கூட்டம் மதுரை மாநகரை அடைந்தது. குதிரைத் தலைவனாக வந்த சிவபிரான் பாண்டியன் முன்னிலையில் குதிரைகள் அனைத்தையும் கொண்டு வந்து நிறுத்தினான். குதிரைகளைப் பல வகை நடைகளில் நடத்திக் காட்டியும், ஆடல்கள் புரியச் செய்தும் பாண்டியனை

மகிழ்வுறுத்தினான். பெருமகிழ்ச்சி அடைந்த பாண்டியன் குதிரைத் தலைவனுக்கு ஒரு பட்டாடையைப் பரிசாகக் கொடுத்தான். குதிரைத் தலைவனாக வந்த பெருமான் அப்பரிசைப் புன்னகையோடு தன் செண்டினால் வாங்கினான். தான் அளித்த பரிசை மரியாதைக் குறைவாகக் குதிரைத் தலைவன் பெறுவதைக் கண்ட மன்னன் வெகுண்டான். அருகிலிருந்த வாதவூரர் 'செண்டினால் பரிசு பெறுதல் அவர்கள் நாட்டு வழக்கு' என்று கூறி, மன்னன் சினத்தை மாற்றினார். பின்னர் குதிரை இலக்கணமறிந்த வல்லவர்கள் குதிரைகளையெல்லாம் ஆராய்ந்து, இவைகள் நல்ல நிறமும், நடையும், நல்ல சுழிகளும் பெற்றுள்ளன என்று பாராட்டினர். அரசனும் தானளித்த பொருளைவிடப் பலமடங்கு அதிகமான குதிரைகளைப் பெற்றதாக மகிழ்ந்து அவைகளைப் பந்தியில் சேர்க்குமாறு பணித்தனன். குதிரைத் தலைவன் குதிரைகளையெல்லாம் கயிறுமாறிக் கொடுக்கும்படி தன் உடன் வந்தவர்களிடம் கூறி அரசனிடம் விடைபெற்றுச் சென்றான்.

## பரிகள் நரிகளாயின

அன்று இரவு நடுநிசியில் குதிரைகளெல்லாம் நரிகளாக மாறின. பந்தியில் இருந்த பழைய குதிரைகளையும் கொன்று தின்று ஊர்மக்கள் அஞ்சும்படி மூலை முடுக்குகளில் எல்லாம் ஓடி மறைந்தன. காலையில் குதிரைச் சேவகர்கள் உள்ளம் பதறி, உடல் நடுங்கி, அரசனிடம் வந்து முறையிட்டனர். இச்செய்தியைக் கேட்ட மன்னன் சினம் பொங்கி அமைச்சர்களை அழைத்து வாதவூரர் செய்த வஞ்சனையைக் கூறிப் படைத் தலைவர்களை அழைத்து, வாதவூரரைச் சுடுவெயிலில் நிறுத்தித் தண்டனை அளித்து அவரிடத்தில் கொடுத்த பொருள்களையெல்லாம் திரும்பப் பெற்றுக்கொண்டு வருமாறு உத்தரவிட்டான். படைவீரர்கள் இவரை அழைத்துச் சென்று சுடுவெயிலில் நிறுத்தித் தலையிலே கல்லேற்றி ஒறுத்தார்கள். வாதவூரர் இறைவன் திருவருளை நினைந்து எனக்கு இத்தகைய துன்பங்கள் வருதல் முறையாகுமா ? என்று கூறி வருந்தி நின்றாா.

## வைகையில் வெள்ளம்

வாதவூரருடைய துன்பம் துடைக்க எண்ணிய பெருமான், வைகை ஆற்றில் வெள்ளம் பெருகுமாறு செய்தருளினார். வைகையில் தோன்றிய பெருவெள்ளம் மதுரைநகர் முழுவதும் விரைந்து பரவத் தொடங்கியது. பெரு வெள்ளத்தைக் கண்ட ஊர் மக்கள் ஊழிக்காலமே வந்துவிட்டது என்று அஞ்சி நின்றனர். பாண்டியனும் ஆற்று வெள்ளத்தைத் தணிக்க, பூ, பொன், பட்டு முதலிய அணிகலன்களை ஆற்றில் விட்டு வெள்ளம் தணியுமாறு ஆற்றைப் பணிந்தனன்.

வெள்ளம் மேலும் பெருகியதே அல்லாமல் சிறிதும் குறையாதது கண்டு அமைச்சர்களோடு கூடி ஆராய்ந்து மதுரை மக்களை எல்லாம் ஒருங்கு கூட்டி ஒவ்வொருவருக்கும் இவ்வளவு பங்கு என்று அளந்து கொடுத்து ஆற்றின் கரையை அடைக்கும்படி ஆணையிட்டான்.

## மண் சுமந்தது

அரசன் ஆணையைக் காவலர் ஊர் முழுவதும் முரசறைந்து அறிவித்தனர். அந்நகரில் பிட்டு விற்று வாழ்க்கை நடத்தும் வந்தி என்னும் மூதாட்டி தனக்கு அளவு செய்துவிட்ட ஆற்றின் பங்கை அடைக்க ஆள் கிடைக்காமல் வருந்தினாள். நாள்தோறும் ஆண்டவனிடம் அன்பு செலுத்தி வந்த அவ்வந்தியின் துன்பத்தைத் தவிர்க்க இறைவன் அவளிடம் கூலி ஆள் போலத் தோன்றினான். 'யாரேனும் கூலி கொடுத்து என் வேலை கொள்வார் உண்டோ ?' என்று கூவிய வண்ணம் தன்னை வந்தடைந்த அப்பணியாளனைக் கண்ட வந்தி மகிழ்ந்து, 'நீ எனக்குக் கூலியாளாக வரவேண்டும்; அவ்வாறு வந்து என் ஆற்றின் பங்கை அடைத்துத் தருவாயானால் நான் விற்கும் பிட்டைக் கூலியாகத் தருகிறேன்' என்று கூறினாள். அதற்கு இசைந்த அக்கூலியாள் அவள் கொடுத்த பிட்டை வாங்கி உண்டு, தாயே! என் பசி தீர்ந்தது; இனி நீ ஏவிய பணியை நான் செய்து முடிப்பேன் என்று அவள் பங்கை அறிந்து அதை அடைப்பதற்கு முற்பட்டான். வந்தி மேலும் அளித்த பிட்டை எடுத்துக் கொண்டு ஆற்றங்கரையை நோக்கிச் சென்றான்.

## பாண்டியன் பிரம்படி

வேலையைத் தொடங்கிய அவ் வந்தியின் ஆளாகிய சிவபெருமான் ஒரு சிறிது மண்ணை வெட்டித் தன் திருமுடியில் எடுத்துச் சென்று கரையில் கொட்டிவிட்டுக் களைப்படைந்தவன் போல ஓய்வு எடுத்துக்கொள்வதும், வந்தி அளித்த பிட்டை உண்பதும், ஆடுவதும் பாடுவதுமாக இருந்து, பொழுது போக்கினான். வேலை செய்து களைத்தவன் போலக் கூடையைத் தலையணையாக வைத்து உறங்கவும் செய்தான். ஆற்றின் கரை அடை பட்டதா என்பதைப் பார்வையிட வந்த மன்னனிடம் காவலர், ஊரில் உள்ளோர் ஒவ்வொருவரும் தத்தம் பங்கை அடைத்து முடித்தனர். பிட்டு விற்கும் வந்தி என்னும் கிழவியின் பங்கு மட்டும் அடைபடாமல் கிடக்கிறது. வந்திக்கு ஆளாய் வந்த ஒருவன் நாங்கள் கண்டித்தும் சரிவரத் தன் பணியைச் செய்யாமல் பொழுதைக் கழிக்கிறான்; அதனால் அப்பகுதி "நூற்றைக் கெடுத்தது குறுணி" என்பது போல, ஒருத்தி பங்கு ஊரார் பங்கையும் கரைக்கிறது என்று கூறினர். உடனே அப்பகுதியைப் பார்வையிட வந்த

பாண்டியன் அக்கூலியாளை அழைத்து வரச்செய்து தன்னுடைய கைப்பிரம்பால் முதுகில் அடித்தான். அடித்த அளவில் கூலியாளாக வந்த பெருமான் ஒருகூடை மண்ணை உடைப்பில் கொட்டி மறைந்தான். வெள்ளமும் வற்றியது. பாண்டியன் அடித்த அப்பிரம்படி அரசன், அரசி, அமைச்சர், காவலாளர்கள் முதலிய எல்லோர் மேலும் பட்டது. அண்ட சராசரப் பொருள் அனைத்தின் மேலும் பட்டது. அதுசமயம், ஓர் அசரீரி வெளிப்பட்டு அரசனும் ஏனையோரும் கேட்டனர் 'எமது அடியான் மாணிக்கவாசகன் பெருமையை உலகறியச் செய்யவே நாம் இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் செய்தோம். அவரைப் போற்றி நீ பெருவாழ்வு வாழ்வாயாக'. அப்போது வாதவூரர் இறைவன் தன் பொருட்டுக் கூலியாளாக வந்த திருவருளை எண்ணி வியந்தார். பாண்டிய மன்னன் வாதவூரர் பெருமையை நன்கறிந்து அவரை வணங்கி, 'நற்றவப் பெரியீர்! எனக்கு அமைச்சராய் அமர்ந்து எம் குல தெய்வத்தை என் கண்ணாரக்காட்டிக் குதிரைச் சேவகனாகவும், கூலியாளாகவும் வரச்செய்து என் பிறவி மாசை ஒழித்த பெரியவரே, ~~என்னை~~ மன்னித்தருளவேண்டும். தங்கள் பெருமையை இறைவன் எனக்கு நன்கு உணர்த்தினான். என் அரசுரிமையை இன்று முதல் தாங்கள் ஏற்றருளல் வேண்டும்' என்று வேண்டினான். வாதவூரர் பாண்டியனிடம் 'இறைவனுடைய திருவடித் தொண்டு செய்ய என்னை உரிமையாக்குவதே இவ்வுலக ஆட்சியை எனக்குத் தருவதற்கு ஒப்பாகும்' என்றார். மன்னனும் அதற்கு இசைந்து அவர் விரும்பியவாறு அவரைச் செல்ல விடுத்துத் திருவருள் உணர்வோடு தம் அரண்மனைக்குச் சென்றான். மாணிக்கவாசகருக்கு திருப்பணி செய்ய வேண்டும் பொருளைப் பண்டாரத்திலிருந்து கொடுக்கவும் ஆணையிட்டான்.

அமைச்சியலைத் துறந்து தவவேடம் தாங்கிய வாதவூரடிகள் இறைவன் திருவிளையாடல்—களை எண்ணி மகிழ்ந்தவராய், திருப்பெருந்துறையை அடைந்தார்.

குருநாதர் பிரிவு

மீண்டும் தன் குருநாதரை அடைந்த வாதவூரடிகள் அடியவர் கூட்டத்தோடு கலந்து மகிழ்ந்திருந்தார். ஞான தேசிகனாய் வந்த பெருமான் தாம் கயிலைக்குச் செல்ல வேண்டியதைச் சீடர்களுக்கு உணர்த்தி அவர்களை இன்புற்றிருக்குமாறு பணித்தார். அடியவர்கள் தம் குருநாதரைப் பிரிய மனம் இல்லாமல் பெரிதும் வருந்தினர். அதைக் கண்ட குருநாதர் இக் குருந்த மரத்தின் நிழலில் ஒரு தெய்வப்பீடம் அமைத்து அதில் நம்முடைய திருவடிகளை எழுப்பி வழிபாடு செய்து வருவீர்களானால் ஒருநாள் 'இக்கோயில் திருக்குளத்தில் தீப்பிழம்பு ஒன்று தோன்றும்;

அதில் அனைவரும் மூழ்கி எம்மை அடையலாம்' என்று திருவாய் மலர்ந்து தம்மைப் பின் தொடர்ந்து வந்த அடியார்களை 'நிற்க' எனக் கட்டளையிட்டுக் கயிலை சென்றார். வாதவூரடிகள் மட்டும் அவரைப் பின் தொடர்ந்து சென்று கொண்டிருந்தார். அவரைக் கண்ட குருநாதர், 'நீ எம்மைப் பின் தொடர்ந்து வருதல் வேண்டா; உத்தரகோசமங்கை என்னும் திருப்பதிக்குச் சென்று அங்கு எண்வகைச் சித்திகளையும் பெற்று, திருக்கழுக்குன்றம் முதலான தலங்களைத் தரிசித்துப் பின்னர் தில்லையை அடைவாயாக' என்று கூறிச் சென்றார். மாணிக்கவாசகரும் அவ்வாறே திருப்பெருந்–துறையில் குருந்த மரத்தின் கீழ் ஒரு தெய்விகப் பீடம் அமைத்து அதில் குருநாதரின் திருவடிகளை எழுந்தருளச் செய்து அடியார்களோடு தாமும் வழிபட்டு வரலாயினர்.

## தல யாத்திரை

மாணிக்கவாசகர் திருவருட்போகத்தில் திளைத்து வாழும் நாட்களில் நமச்சிவாய வாழ்க என்று தொடங்கும் சிவபுராணம், அற்புதப் பத்து, அதிசயப் பத்து, குழைத்த பத்து, சென்னிப் பத்து, ஆசைப் பத்து, வாழாப் பத்து, அடைக்கலப் பத்து, செத்திலாப் பத்து, புணர்ச்சிப் பத்து, அருட்பத்து, திருவார்த்தை, எண்ணப் பதிகம், திருவெண்பா, திருப்பள்ளியெழுச்சி, திருவேசறவு, ஆனந்த மாலை, உயிருண்ணிப் பத்து, பிரார்த்தனைப் பத்து, திருப்பாண்டிப் பதிகம் முதலிய பதிகங்களைத் திருவாய் மலர்ந்தருளி அடியார் கூட்டத்துடன் பலநாள் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருந்தார். ஒருநாள் திருக்குளத்தில் தீப்பிழம்பு தோன்றிற்று. அடியார்கள் அனைவரும் ஐந்தெழுத்தை ஓதிக்கொண்டு அதில் மூழ்கினர். பெருமான் அம்மையப்பராய் இடப வாகனத்தில் எழுந்தருளி அருட்காட்சி வழங்கியருளினான். அடியார்கள் அனைவரும் மூழ்கிச் சிவகணங்கள் ஆயினர். மாணிக்கவாசகர் இவ்வேளையில் கொன்றைமர நிழலில் சிவயோகத்தில் அமர்ந்திருந்தார். இந்நிகழ்ச்சியை யோகக் காட்சியில் அறிந்த அடிகள் அடியார்களின் பிரிவாற்றாது வருந்தி, குருந்த மரத்தினடியில் இருந்த குருநாதரின் திருவடிப் பீடத்தைப் பற்றிக் கொண்டு அழுதார். திருச்சதகம் என்னும் பாமாலையால் இறைவன் திருவருளைத் தோத்தரித்தார். பின்னர் குருநாதர் தனக்குப் பணித்த அருளாணையின் வண்ணம் திருவுத்தரகோசமங்கைக்குச் சென்று நீத்தல் விண்ணப்பம் என்னும் திருப்பதிகத்தால் தோத்திரம் செய்தார்.

அப்போது அத்தலத்தில் இறைவன் திருப்பெருந்துறையில் காட்டிய குருந்தமர் கோலத்தைக் காட்டியருளினான். அத்திருக்கோலத்தைக் கண்டு மகிழ்ந்த அடிகள், அங்கு அட்டமாசித்திகள் கைவரப் பெற்றார். பின்னர் பல திருப்பதிகளையும் வணங்கிக் கொண்டு பாண்டிய நாட்டைக்

கடந்து சோழவளநாட்டைச் சேர்ந்த திருவிடைமருதூரை வந்தடைந்தார். இடைமருதில் ஆனந்தத் தேனாக எழுந்தருளியுள்ள இறைவன் அருள் நலத்தை நுகர்ந்து திருவாரூரை அடைந்து புற்றிடம் கொண்ட பெருமானை வணங்கி, திருப்புலம்பல் என்னும் பதிகத்தை அருளிச் செய்தார். அதன் பின்னர்ச் சீர்காழியை அடைந்து தோணியப்பரைத் தரிசித்து பிடித்த பத்து என்னும் பதிகத்தை அருளிச் செய்தார். பின்னர் அங்கிருந்து புறப்பட்டு, சோழநாடு கடந்து நடுநாட்டை அடைந்து திருமுதுகுன்றம், திருவெண்ணெய்நல்லூர் முதலிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவண்ணாமலையை அடைந்தார். அங்கும் இறைவன் குருந்தமர் திருக்கோலம் காட்டி அருளினன். அக்காட்சியைக் கண்டு வணங்கிய அடிகள் அத்தலத்தில் பல நாட்கள் தங்கியிருந்தார்.

## திருவண்ணாமலையில்

அடிகள் அண்ணாமலையில் தங்கியிருந்த போது மார்கழி மாதம் வந்தது. திருவாதிரைக்கு முன் பத்து நாட்களில் கன்னிப் பெண்கள் விடியற்காலம் எழுந்து வீடுகள் தோறும் சென்று ஒருவரையொருவர் துயிலெழுப்பிக்கொண்டு நீராடி வழிபாடு செய்வதைக் கண்டு, அவர்கள் வாய் மொழியாகவே வைத்து திருவெம்பாவையையும், அவ்வூர்ப் பெண்கள் அம்மானையாடும் காட்சியைக் கண்டு அவர்கள் பாடுவதாக வைத்து திருவம்மானையையும் அருளிச் செய்தார்.

## சிதம்பர தரிசனம்

பின்னர் அண்ணாமலையை நீங்கிக் காஞ்சிபுரம் அடைந்து அவ்வூர் இறைவனைத் தரிசித்துத் திருக்கழுக்குன்றம் அடைந்து திருக்கழுக்குன்றப் பதிகம் பாடினார். அங்கே பெருமான் பெருந்துறையில் அவரை ஆட்கொண்ட குருநாதர் திருக்கோலத்தோடு காட்சி வழங்கினான். பின்னர் அங்கிருந்து புறப்பட்டுத் திருத்தில்லையின் எல்லையை அடைந்து அத்திருத்தலத்தைத் தரிசித்தார். தில்லை சிவலோகம் போலக் காட்சியளித்தது. அந்நகரை அடைந்த மாணிக்கவாசகர் திருவீதிகளைக் கடந்து கிழக்கு திருவாயில் வழியே திருக்கோவிலுக்குள் சென்றார். சிவகங்கையில் நீராடி வலமாகச் சிற்சபையில் எழுந்தருளியிருக்கும் ஆனந்த நடராசப் பெருமானை ஆரா அன்பினில் கண்டு கண்ணீர் வார உளம் நெகிழ்ந்து வணங்கினார். குருநாதராக எழுந்தருளி வந்து காட்சி கொடுத்த இறைவனைத் தில்லைச் சிற்றம்பலத்திலே கண்டு தரிசித்து பேரானந்தம் உற்று ஆனந்தக் கண்ணீர் பெருக கண்ட பத்து என்னும் பதிகம் பாடி வழிபட்டார். பின்னர்

தில்லையின் கீழ்த்திசையில் ஒரு தவச்சாலை அமைத்துப் பலநாட்கள் தங்கியிருந்து தினமும் அம்பலவாணனின் ஆனந்த நடனத்தைத் தரிசித்து வந்தார். அங்கிருந்து திருப்புலீச்சரம், திருநாகேச்சரம் முதலான தலங்களுக்குச் சென்று தரிசித்து மீண்டும் தில்லை வந்தடைந்தார். தில்லையில் அடிகள் அருளிச் செய்தவை குலாப்பத்து, கோயில் திருப்பதிகம், கோயில் மூத்த திருப்பதிகம், கீர்த்தித் திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித் திருவகவல், திருப்பொற்சுண்ணம், திருத்தெள்ளேணம், திருவுந்தியார், திருத்தோள் நோக்கம், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல், அன்னைப் பத்து, திருக்கோத்தும்பி, குயில் பத்து, திருத்தசாங்கம், அச்சப்பத்து, என்பனவாம்.

## புத்த மதத்தாரோடு சமய வாதம்

மாணிக்கவாசகர் தில்லையில் வாழ்ந்துவரும் நாட்களில் சிவனடியார் ஒருவர் சிதம்பரத்திலிருந்து ஈழநாட்டிற்குச் சென்றிருந்தார். அவ்வடியார் செம்பொன்னம்பலம், திருவம்பலம், திருச்சிற்றம்பலம் என்ற திருநாமங்களை இடைவிடாது சொல்லிக் கொண்டிருக்கும் இயல்பு உடையவர்.

அவர் ஈழம் சென்றிருந்த காலத்தில் ஈழநாட்டில் பௌத்த சமயம் மேலோங்கியிருந்தது. இவ்வடியாரின் இயல்பைக் கண்ட சிலர் அரசனிடம் சென்று அவரது செய்கைகளை உணர்த்தினர். அரசன் அச்சிவனடியாரைச் சபைக்கு அழைத்து வருமாறு செய்தான். அரசவைக்கு வந்த அடியவர் செம்பொன்னம்பலம், திருவம்பலம், திருச்சிற்றம்பலம் என்று சொல்லிக்கொண்டே தன் இருக்கையில் அமர்ந்தார். அரசன் வியந்து இதன் பொருள் யாது ? என்று அவரைக் கேட்டான். அவ்வடியவர் அதன் சிறப்புக்களை எடுத்துரைத்து ‘தீயவரும் உள்ளன்போடு இப்பெயரை ஒருமுறை கூறினால் 21,600 தடவை திருவைந்தெழுத்தைக் கூறியதனால் உண்டாகும் பயனை இது தரும்’ என்று கூறித் தில்லைப் பெருமானின் சிறப்பை எடுத்துரைத்தார். அங்கு இருந்த புத்தமத ஆசாரியன் சிவனடியார் கூறுவதைக் கேட்டுச் சினந்து ‘திரிபிடகம் அருளிய எங்கள் புத்தனைத் தவிர வேறு தெய்வம் உண்டோ ? ஆதலால் நான் தில்லைக்குச் சென்று சைவத்தை வென்று புத்தனே கடவுள் என்று நிலைநாட்டி வருவேன்’ என்று சூளுரைத்து எழுந்தான். ஈழத்தரசனும் தன் ஊமைப் பெண்ணையும் உடனழைத்துக் கொண்டு புத்தாசாரியனுடன் தில்லைக்குப் புறப்பட்டான். தில்லையை அடைந்த புத்தகுரு, அரசன் முதலானோர் திருக்கோவிலை அடைந்து அக்கோவில் மண்டபம் ஒன்றில் அமர்ந்தனர். கோவில் காப்பாளர் அவர்களை அணுகி புறச்சமயத்தார் இங்கு தங்குதல் கூடாது என்று கூறினர். அதைக் கேட்ட புத்தகுரு யாம் உங்கள் சமயத்தை வென்று

எங்கள் சமயத்தை இங்கு நிலைநாட்ட வந்துள்ளோம் என்று வாதிற்கு அறைகூவினான். அச்சூளுரை தில்லைவாழ் அந்தணர்களுக்கு எட்டியது. அவர்கள் சோழ மன்னனுக்கு இந்நிகழ்ச்சியை உடன் தெரிவித்தனர். அன்றிரவு தில்லைவாழ் அந்தணர்கள் அனைவரும் புத்தமத குருவை எவ்வாறு வெல்வது என்ற கவலையுடன் தில்லைச்சிற்றம்பலவனை எண்ணி வணங்கித் துயில் கொண்டனர். நடராசப் பெருமான் அவர்கள் கனவில் எழுந்தருளி 'தில்லையின் கீழ்பால் சிவயோகத்தில் அமர்ந்து தவமியற்றி வரும் நம் அடியவனாகிய மாணிக்கவாசகனை அழைத்து வந்து இப்புத்தகுருவோடு வாதிடச் செய்க; அவன் அவர்களை வெல்வான்; கவலற்க' என்று தெரிவித்தார். மறு நாள் தாம் கண்ட கனவை ஒவ்வொருவரும் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டு இறைவன் திருவருளை வியந்து அரசனிடம் தெரிவித்து மாணிக்கவாசகர் எழுந்தருளி உள்ள தவச்சாலையை அடைந்து மாணிக்கவாசகரிடம் "அடிகளே! நம் சைவ சமயத்தை அழித்து புத்த மதத்தை நிலை நாட்டும் எண்ணத்துடன் ஈழநாட்டு மன்னனும், புத்தமதகுருவும் வந்துள்ளனர். தாங்கள் வந்து அவர்களை வாதில் வென்று நம் சமயத்தை நிலை நிறுத்தல் வேண்டும்" என்று அழைத்து, தாங்கள் அனைவரும் கண்ட ஒரே மாதிரியான கனவையும் அரசனது விருப்பத்தையும் தெரிவித்தனர்.

## ஊமைப்பெண் பேசியது

மாணிக்கவாசகர் அதற்குச் சம்மதித்து, தில்லை மூவாயிரவருடன் திருக்கோவில் சென்று ஆனந்தக் கூத்தனை வணங்கி அவனருள் பெற்று புத்தமதகுரு இருந்த மண்டபத்தை அடைந்தார். தீயவர்களைக் காண்பது தீது என்றெண்ணி அவர்களுக்கெதிரே ஒரு திரையிடச் செய்து தான் மறு பக்கத்தில் அமர்ந்தார். சோழ மன்னனும் மறையோரும், புலவர்களும் அந்த அவையில் கூடியிருந்தனர். சோழன், மாணிக்க–வாசகரைப் பணிந்து, 'புத்தர்களை வாதில் வென்று நம் சமயத்தை நிலைபெறச் செய்வது தங்கள் கடமை. தோல்வியுற்ற புத்தர்களை முறை செய்வது என் கடமை' என்று வேண்டிக் கொண்டான். பின்னர் மாணிக்கவாசகர் புத்தகுருவை விளித்து 'வந்த காரியம் என்ன ?' என்று வாதத்தைத் தொடங்கினார். வாதம் தொடர்ந்து நடைபெற்றது. மாணிக்கவாசகர் எத்துணை உண்மைகளை எடுத்து உரைத்தாலும் அவை புத்தகுருவின் செவிகளில் ஏறவில்லை. மாணிக்கவாசகர் கூறிய வாதத்தை மறுக்கும் வழியின்றி, சிவநிந்தை செய்யத் தொடங்கினான். அதைக் கண்ட மாணிக்க–வாசகர் கலைமகளை வேண்டி சிவநிந்தை செய்யும் நாவில் நீ இருத்தல் பொருந்துமோ ? இவர்கள் நாவைவிட்டு அகல்வாயாக; இது இறைவன் ஆணை' என்று கூறினார். அவ்வளவில் புத்தகுருவும், அவருடன் வந்தவர்களும் ஊமைகளாயினர்.

இதைக் கண்டு வியப்புற்ற ஈழமன்னன் மாணிக்க–வாசகரை வணங்கி 'அடிகளே என் மகள், பிறவி முதல் ஊமையாக இருக்கின்றாள். அவளைப் பேசும்படிச் செய்தால் நான் தங்களுக்கு அடிமையாவேன்' என்று கூறினான். மாணிக்கவாசகர் அதற்கிசைந்து அப்பெண்ணை அவைக்கு வரவழைத்து அமர்த்தி, 'பெண்ணே! இப்புத்தன் கேட்ட கேள்விகளுக்கு விடை கூறு' என்று கூறினார். அப்பெண்ணும் அனைவரும் வியந்து மகிழும்படி, புத்தகுருவின் வினாக்களை மாணிக்கவாசகர் தாமே அப்பெண்ணிடம் கேட்க அப்பெண் அதற்கு விடையளித்தாள். அந்த வினா–விடைகளே 'திருச்சாழல்' என்ற திருப்பதிகமாக அமைந்தது. ஈழமன்னனும் அதைக்கண்டு மகிழ்ந்து மாணிக்கவாசகர் திருவடிகளிலே விழுந்து வணங்கி சைவம் சார்ந்தான். அவையோர் அனைவரும் மாணிக்கவாசகப் பெருமானைப் போற்றித் துதித்தார்கள். ஈழமன்னன் திருநீறும் கண்டிகையும் பூண்டு அடிகளைப் பணிந்து, புத்தகுருவும், மற்றவர்களும் பேசும் திறம்பெற அருள் செய்ய வேண்டும் என்று வேண்டினான். மாணிக்கவாசகர் அவர்கள்மீது திருவருட் பார்வையைச் செலுத்தினார். அவ்வளவில் அனைவரும் ஊமை நீங்கிப் பேசும் திறம் பெற்று மாணிக்கவாசகரை வணங்கித் தாங்கள் செய்த குற்றத்தை மன்னிக்கும்படி வேண்டிக் கொண்டனர். புத்தகுருவும் அவரைச் சூழவந்த அனைவரும் சைவர்களாக மாறினர். மாணிக்கவாசகரும் திருக்கோவிலுக்குள் சென்று சபாநாயகரை வணங்கித் தம் தவச்சாலைக்கு எழுந்தருளினார். இவ்வாறு தவச்சாலையில் தங்கியிருந்த காலத்தில் மாணிக்கவாசகர் திருப்படையாட்சி, திருப்படையெழுச்சி, அச்சோப் பதிகம், யாத்திரைப் பத்து என்ற பதிகங்களைப் பாடியருளினார்.

## இறைவன் திருவாசகம் கேட்டு எழுதியது

இவ்வாறு சிதம்பரத்தில் மாணிக்கவாசகர் வாழ்ந்துவரும் நாட்களில், ஒருநாள் அந்தணப் பெருமான் ஒருவர் அவரிடம் வந்து தான் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர் என்றும், சிவபிரான் மாணிக்கவாசகருக்காகச் செய்த அருட்செயல் உலகெங்கும் பரவியுள்ளது என்றும் வியந்து கூறி மாணிக்கவாசகர் பல தலங்களிலும் பாடிய பாடல்களை முறையாகச் சொல்லும்படி கேட்டுக் கொண்டார். மாணிக்கவாசகரும் அந்தணரை அருகில் இருத்தித் தாம் பாடிய திருவாசகப் பாடல்கள் அனைத்தையும் பலநாட்களாகச் சொல்லியருளினார். அந்தணரும் தம் திருக்கரத்தால் அவைகளை எழுதி முடித்து 'பாவைபாடிய தங்கள் திருவாயால் ஒரு கோவை பாடுக' என்று கேட்டுக் கொண்டார். அவ்வேண்டுகோளுக்கு இணங்கிய மாணிக்கவாசகர் இறைவனது திருவடிப் பேற்றை உட்கருத்தாகக் கொண்ட இனிய "கோவையார்" என்று நூலை அருளிச்செய்தார். அந்தணர் பெருமான் அந்த நூலையும் தம் திருக்கரத்தால் எழுதி முடித்தார். பின்னர் அந்தணர்

வடிவில் வந்த சிவபெருமான் மறைந்தான். அதைக் கண்ட மாணிக்கவாசகர் இப்படித் தன்னை ஆட்கொண்டவர் சிவபிரானே என்பதை அறிந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கித் திருவருளை எண்ணி வழுத்தினார்.

## திருவாசக உட்பொருள்

திருவாதவூரின் திருவாசகத்தையும், திருக்கோவையையும் தம் கையால் எழுதிய இறைவன் அந்நூல்களை உலகறியச் செய்ய வேண்டி, நூலின் முடிவில் மாணிக்கவாசகர் சொற்படி 'திருச்சிற்றம்பலமுடையான் கையெழுத்து' எனத் திருச்சாத்திட்டு தில்லைச் சிற்றம்பலத்தில் பஞ்சாக்கரப் படியில் வைத்திருந்தார். காலையில் கோவிலில் இறைவனைப் பூஜை செய்யவந்த அருச்சகர்கள் பஞ்சாக்கரப் படியில் நூல் ஒன்று இருப்பதைக் கண்டு வியந்து அதை எடுத்து ஆண்டவனால் இது தரப்பட்டதாகும் என்ற அன்புணர்வோடு பிரித்துப் பார்த்துப் படித்தார்கள். அந்த ஏடுகளின் முடிவில் "மாணிக்கவாசகர் சொற்படி திருச்சிற்றம்பலமுடையான் கையெழுத்து" என்றிருந்ததைக் கண்டு, உடல் சிலிர்த்து இறைவன் திருவருளைப் பெறுவதற்குரிய நூல்களில் இது தலையானது என்று புகழ்ந்து இந்நூலைப் பாடிய மாணிக்கவாசகரைச் சென்று கண்டு வணங்கினர். திருவாயிற்படியில் இந்நூல் இறைவனால் வைக்கப்பட்டிருந்த நிகழ்ச்சியை அவரிடம் தெரிவித்தார்கள். வாதவூரர் அதைக் கேட்டுத் திருவருளை எண்ணி வணங்கினார். முடிவில் அந்தணர் அனைவரும் இந்நூலின் பொருளைத் தாங்களே விளக்கம் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். அதற்கு மாணிக்கவாசகர் இதன் பொருளைத் தில்லைச் சிற்றம்பலத்தில் வந்து தெரிவிக்கின்றேன் என்று சொல்லி அவர்களோடு சிற்சபைக்கு எழுந்தருளினார். அங்கு வந்து "இந்நூற்பொருள் இச்சபையில் எழுந்தருளி உள்ள ஆனந்தக் கூத்தப்பெருமானே ஆவான்" என்று காட்டி, அச்சபையில் எல்லோரும் காண மறைந்தருளினார். இவ்வற்புத நிகழ்ச்சியைக் கண்ட அனைவரும் வியந்து மகிழ்ந்து தொழுது போற்றினர். நடராஜப் பெருமான் மாணிக்கவாசகருக்கு தம் திருவடிகளிலே இரண்டறக் கலக்கும் பேரின்பப் பேற்றைத் தந்து அவரை ஆட்கொண்டு அருளினார்.

### அடிகள் காலம்

மாணிக்கவாசகர் காலத்தைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் பல வேறு கருத்துக்களைக் கொண்டுள்ளனர். ஒவ்வொருவரும் தாங்கள் கருதிய கருத்துக்களை நிலைநாட்டுவதற்கு, பல்வேறு ஆதாரங்களைக் காட்டுகின்றனர். எல்லோருடைய ஆராய்ச்சியும் அடிகளார், கடைச் சங்க

காலத்திற்குப்பின் தொடங்கி 7–ஆம் நூற்றாண்டு வரை உள்ள காலங்களில் ஏதேனும் ஒருகாலம் மாணிக்கவாசகர் வாழ்ந்த காலம் என முடிவு செய்கின்றனர். இக்கால ஆராய்ச்சிகளைத் தொகுத்து ஆராய்ந்து மாணிக்கவாசகர் காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு என முடிவு செய்து தருமை ஆதீனத் திருவாசக நூல் வெளியீட்டில் மகாவித்துவான், திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். அவர்களுடைய கால ஆராய்ச்சித் தொகுப்பு உரையின் ஒரு பகுதியைச் சுருக்கித் தருகின்றோம்.

"திருமலைக்கொழுந்துப் பிள்ளை அவர்கள் முதல் நூற்றாண்டாகவும், பொன்னம்பலப் பிள்ளை அவர்கள் இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டாகவும், மறைமலையடிகளார் அவர்கள் மூன்றாம் நூற்றாண்டாகவும், வில்ஸன்வுட் என்பவர் ஏழாம் நூற்றாண்டு என்றும், ஜி.யூ.போப் ஏழு, எட்டு அல்லது 9–ஆம் நூற்றாண்டு என்றும், சூலின் வின்ஸன் ஒன்பது அல்லது 10–ஆம் நூற்றாண்டு என்றும், திரு. கௌடி எட்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டுக்குள் என்றும், டாக்டர் ரோஸட்டு பதின்மூன்று அல்லது பதினான்காம் நூற்றாண்டு என்றும், நெல்சன் ஒன்பதாம் நூற்றாண்டு என்றும், கே.ஜி. சேஷய்யர் மூன்று அல்லது நான்காம் நூற்றாண்டு என்றும், சீனிவாசப் பிள்ளை ஒன்பதாம் நூற்றாண்டு என்றும், சி.கே. சுப்பிரமணிய முதலியார் மூவர்க்கும் முந்தியவர் என்றும் கூறுகின்றனர்".

மூவர்க்கு முந்தியவர் மாணிக்கவாசகர் என்ற கருத்தே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. மாணிக்கவாசகர் காலத்தில் நம் நாட்டில் தலையெடுத்திருந்த புறச்சமயம், பௌத்தம் ஒன்றே எனத் தெரிகிறது. மூவர் காலத்தில் பௌத்தம் ஓரளவிலும் சமணம் சிறப்புற்றும் இருந்தன. மாணிக்கவாசகர் வாக்கில் சமண சமயக் குறிப்பேதும் காணப்பெறவில்லை. திருவாசகத்தில் விநாயகரைப் பற்றிய குறிப்பு ஏதுவும் காணப் பெறவில்லை. இன்ன பல காரணங்களால் மாணிக்கவாசகர் மூவர்க்கும் முந்தியவர் என்று கொள்ளலாம்.

திருச்சிற்றம்பலம்

# THE LIFE HISTORY OF SAINT MAANIKKAVAACHAKAR

Paandya Nadu is the land that lies in the southernmost part of India, stretching between the Western Ghats and the Eastern Coast. When this land was ruled by the Pandyan Kings, the language was Tamil and the religion was Saivism; both were flourishing hand in hand. The historic river Vaigai, celebrated in the classics flows across Paandya Nadu.

## BIRTH

*Vaadhavoor* (வாதவூர்) is a village situated seven miles away from Madurai, the capital of Pandya Nadu. *Vaadhu* or *Vaayu*, the God of Wind worshipped Lord Civan, the *Eeswarar*, here. The village is, therefore, also known as Vaadhapuram, and in the village Temple, Lord Civan is worshipped as *Vaadhapureeswarar*. Here, an *Amaadhya* Brahmin named *Sambupaadhaa Sirudhar* (சம்புபாதாசிருதர்) lived with his devoted wife *Sivagnaanavathi* (சிவஞானவதி). Both were ardent devotees of Lord Civan.

At this point of history, Buddhism was slowly creeping from North into South India, trying to dominate Saivism. God felt the need to revive *Saivite* creed. So He blessed *Sambupaadhar* couple in *Vaadhavoor* (வாதவூர்) to beget a divine child. The child was named *Vaadhavoorar* (வாதவூரர்).

*Vaadhavoorar*, as he was growing, acquired knowledge in all fields. By the time he reached sixteen years, he had become a master of all arts. His erudition, expository powers, and intellectual knowledge won him the admiration of the Pandyan King.

## CHIEF MINISTERSHIP

King *Arimarthana Paandyan* (அரிமர்த்தன பாண்டியன்) who was then ruling the Paandyan Kingdom invited *Vaadhavoorar* to his court and conferred the title "*Thennavan Brahmaraayan*" (தென்னவன் பிரமராயன்) on him. He then appointed him as his Chief Minister. Vaadhavoorar bowed to the will of God and accepted this honour. He served the king and the subjects so well that the people were pleased with him. The King was properly counselled and his powers strengthened.

## DETACHMENT

However, the ministerial powers and the benefits that followed, failed to interest Vaadhavoorar. He was well aware of the transitoriness of the worldly life and its pleasures. The Minister's post was sitting on him like water on a duck's back; his main desire being to seek a Guru who could guide him to attain Salvation.

## PURCHASE OF HORSES

Once, the Cavalrymen of the court submitted to the king, that the Royal Cavalry needed reinforcements. Some messengers in the court also submitted to the king that horses of good quality imported from other countries were available in the Eastern sea coast. The king, then ordered Vaadhavoorar to take sufficient gold and other treasures from the Royal Treasury and to proceed to the Eastern Coast to buy horses.

Vaadhavoorar, obeying the king, offered prayers to Lord *Chokkanaathar* (சொக்கநாதர்) (the other Name of Lord Civan) and left Madurai for the Eastern Coast. He was followed by soldiers, servants, horses and camels loaded with treasures. They travelled many miles and reached "*Thirupperunthurai*" (திருப்பெருந்துறை) on the Eastern Coast. Even as they were nearing *Thirupperunthurai*, Vaadhavoorar felt as though he was shedding off his bad karma from his physical body, and his longing to seek a Guru is nearing fulfillment. At that moment he heard some congregation chanting the name of Civan which attracted him towards that place. There he saw a Venerable Saint sitting under a "*Kuruntha*" tree (குருந்த மரம்) along with His disciples. Spontaneously *Vaadhavoorar* surrendered himself, prostrated and pleaded for His Grace.

## INITIATION

Lord Civan who was seated in the guise of a Guru accepted him as His disciple. Through the glowing rays emanating from His eyes, by touching him with His hands and imparting the mystic five letter 'Mantra' and also by placing His Holy Feet on his head, He gave him the

'*Theeksha*' name (தீட்சா நாமம்) as '*Maanikkavaachakar*' (மாணிக்கவாசகர்) (Maanikkam = Ruby, Vaachakam = words; Maanikkavaachakar = one whose words are like Ruby).

From this time onwards Vaadhavoorar came to be known as *Maanikkavaachakar*. He now offered to his Guru all the treasures he had brought with him to buy horses. Surrendering himself completely to his Guru, he said that himself and everything he had brought belong to God. The Guru bade him to use all that he had brought in the service of God. Thereafter Maanikkavaachakar built a small abode for Lord Civan at Thirupperunthurai. (This later on became the Sanctum Sanctorum of the modern Temple built by later kings). By this and other related activities he exhausted almost all the treasures he had brought for buying horses.

**THE SUMMONS**

Days rolled on. Maanikkavaachakar was completely transmuted and immersed in the Lord's Service. However, his attendants reminded him of their unfulfilled task of buying horses. Maanikkavaachakar's mind was so engrossed in Lord Civan, that his mind could not perceive the attendant's remarks. Thereafter the king's men returned to Madurai and reported the matter to the king. On hearing the news, the king sent a messenger with a message summoning Maanikkavaachakar to come to Madurai immediately. On receipt of the King's message only, Maanikkavaachakar realised the purpose of his mission. Not knowing what to do, he prayed to his Guru for guidance. The Guru advised Maanikkavaachakar to assure the king that the horses will reach Madurai on the day of *Aavani Moolam* (ஆவணி மூலம்) (Aavani falls during August - September, Moolam = One of the 27 stars). Also He gave a ruby to be given as a gift to the king. Maanikkavaachakar then left *Thirupperunthurai* for Madurai. Reaching Madurai, he met the king and offered the ruby, promising that the horses will come on the day of "Aavani Moolam". The king was pleased by his reply.

**TRANSFORMATION OF FOXES**

The time had come for Civan to keep his assurance. He transformed the foxes in the forest as horses. He made the celestials to become horsemen. He Himself mounted on a horse as the Chief horseman. They all galloped towards Madurai. Learning the imminent arrival of the horses the king was happy.

The horses were galloping forward in such large numbers that the dust raised by them appeared to cover the earth like a second sky. Lord Civan brought the entire herd before the king and paraded the horses up and down. The horses were also made to perform different kinds of steps. The king, well pleased, honoured the Chief horseman by presenting a silk shawl to Him. The Chief horseman (Lord Civan) received the gift at the tip of His horsewhip. This disrespectful act made the king unhappy. The king was pacified immediately by Maanikkavaachakar explaining that in the land of the Chief horseman, this was the custom. The experts, who knew all about the horses testified to the king that the horses were of good colour and gait. The king's men then led the horses to the Royal stables.

In the same night the horses took their original form as foxes, killed all the other real horses in the stables, and escaped, creating panic in Madurai city. The stable men became terrified and reported the scary event to the king. The king was upset. He summoned his ministers and others and discussed the event. He then gave orders that Maanikkavaachakar be punished and the treasures taken from the treasury be recovered from him. As per the king's orders Maanikkavaachakar was made to stand under the hot sun with a brick on his head. Maanikkavaachakar, suffering thus, prayed to Lord Civan.

**THE DELUGE**

To make the king realize the greatness of Maanikkavaachakar, Civan created immediately a deluge in the river Vaigai followed by heavy rain. Water rose in the river breaching its bank and entered into the city. The people got alarmed and hurried to the King for relief. The king prayed to the river goddess and offered flowers and gold to appease her. However, the floods did not recede. The king held urgent discussions with his ministers, and ordered that all the citizens of Madurai should join hands to close the breaches on the banks of river Vaigai.

**CIVAN BECOMES A LABOURER TO VANDHI**

There was an old lady called '*Vandhi*' (வந்தி) in Madurai, who earned her livelihood by selling 'puttu' (புட்டு) (steamed and sweetened rice flour). She had none to help her to carry out her portion of the task in filling the bank of river Vaigai. Civan, in the guise of a labourer, came

near Vandhi and called out loudly "can any one pay me and keep me as a helping hand?" Vandhi was delighted and asked Him to work for her in filling her portion of work. She promised to give '*puttu*' as wages. He agreed, ate some '*puttu*' and then proceeded to do His work.

Vandhi's labourer carried sand on His head and started dumping sand on the breach. However, He availed frequent breaks, during which He danced, sang and relaxed. When the king came to see the progress of the relief work, his men complained to the king, that everyone in the city were doing their share of duty in closing the breaches, except Vandhi's labourer despite their command.

The king ordered that the hired labourer be brought before him. When Vandhi's labourer appeared before the king, he beat Him with a cane. Lo! The lash of the cane was felt on the back of the king, the queen, the ministers, the guards and indeed on the back of everyone in the universe! Lo! By then Vandhi's man dumped a basketful of sand on the breach and vanished. The flood receded! The king then realised that it was Lord Civan who created the deluge! Realizing the greatness of Maanikkavaachakar, the king beseeched him to forgive and bowed before him and said, "Great Soul! I am Blessed! Because of you only, I was able to see with my own eyes Lord Civan in the form of a Horseman, and also as a Labourer. Forgive me; absolve me of all my natal sins; I pray you, to take over the rule of my kingdom from me".

## DIVINE MISSION

Maanikkavaachakar expressed his desire to the king that allowing him to serve God is more blessed than to rule the Pandyan Kingdom. As desired by Maanikkavaachakar the king relieved him from his ministership and asked him to take any amount he wanted from the Treasury to serve Lord Civan in any manner he wanted. Maanikkavaachakar then moved from Madurai to Thirupperunthurai. From there, he proceeded to the temple in *Thiru-Uthara-Kosa-Mangai,* (திரு உத்தர கோச மங்கை) where Lord Civan conferred on him '*Ashtamaa Siddhi*' (அஷ்டமா சித்தி) (eight occult powers). He continued his pilgrimage to '*Thirukkazhukkundram*' (திருக்கழுக்குன்றம்) and various other Holy places, finally reaching Chidambaram.

**During his sojourn he outpoured his love of God in the following poems.**

Civapuraanam (சிவபுராணம்), which begins with "*Namachchivaaya Vaazhha*" (நமச்சிவாய வாழ்க), Arupudhap Paththu (அற்புதப் பத்து), Adhisayap Paththu (அதிசயப் பத்து), Kuzhaitha Paththu (குழைத்த பத்து), Sennip Paththu (சென்னிப் பத்து), Aasaip Paththu (ஆசைப் பத்து), Vaazhaap Paththu (வாழாப் பத்து), Adaikkalap Paththu (அடைக்கலப் பத்து), Chethilaap Paththu (செத்திலாப் பத்து), Punarchip Paththu (புணர்ச்சிப் பத்து), Arul Paththu (அருட் பத்து), Thiruvaarthai (திருவார்த்தை), Ennappathigam (எண்ணப் பதிகம்), Thiruvenbaa (திருவெண்பா), Thiruppalli Ezhuchi (திருப்பள்ளியெழுச்சி), Thiruvesaravu (திருவேசறவு), Aanandamaalai (ஆனந்த மாலை), Uyirunnip Paththu (உயிருண்ணிப் பத்து), Prarthanaip Paththu (பிரார்த்தனைப் பத்து), Thiruppaandippathigam (திருப்பாண்டிப் பதிகம்), Thiruchchathakam (திருச்சதகம்), Neethal Vinnappam (நீத்தல் விண்ணப்பம்), Thiruppulambal (திருப்புலம்பல்), Piditha Paththu (பிடித்த பத்து).

On his way to Chidambaram, he stopped in *Thiruvannaamalai* (திருவண்ணாமலை). In that place during the month of "Maargazhi" (மார்கழி) (December - January), he observed young maidens, getting up at dawn and going from door to door waking up other maidens for a bath. This joyous scene has been brought forth in Thiruvembaavai (திருவெம்பாவை). He, by seeing the maidens playing an indoor game called 'Ammaanai' (அம்மானை), composed Thiruammaanai. In Thiruk-kazhuk-kundram he composed the Thirukkazhukundrap Pathigam (திருக்கழுக்குன்றப் பதிகம்).

In Chidambaram, he entered the temple through the Eastern gate and had a holy dip in the Sivaganga (சிவகங்கை) tank. Thereafter, he reached the Sanctum Sanctorum and offered worship to Lord Civan in cosmic dance posture known as *Nataraajaa* (நடராஜா). With loving tears he sang in praise of Lord Nataraajaa as found in Kanda Paththu (கண்ட பத்து). From Thillai he proceeded to Naageshwaram and Thiruppullicharam and offered worship. After that Maanikkavaachakar settled down finally in Chidambaram.

Maanikkavaachakar sang the following songs in Chidambaram – Kulaap Paththu (குலாப் பத்து), Koil Thirup-padhigam (கோயில் திருப்பதிகம்), Koil Mootha Thirup Padhigam (கோயில் மூத்த திருப்பதிகம்), Keerthith Thiruagaval (கீர்த்தித் திருஅகவல்), Thiru Aandappaguthi (திருவண்டப் பகுதி), Potrith Thiruagaval (போற்றித் திருஅகவல்), Thirup Porchunnam (திருப்பொற்கண்ணம்), Thiruththellenam (திருத்தெள்ளேணம்), Thiru Vundhiyaar (திருவுந்தியார்), Thiruththonokkam (திருத்தோணோக்கம்), Thiruppoovalli (திருப்பூவல்லி), Thirupponnoosal (திருப்பொன்னூசல்), Annaip Paththu (அன்னைப் பத்து), Thirukkothumbi (திருக்கோத்தும்பி), Kuyil Paththu (குயில் பத்து), Thiruththasaangam (திருத்தசாங்கம்), Achchap Paththu (அச்சப் பத்து).

**EELAM BUDDHIST KING EMBRACES SAIVISM**

A devotee of Lord Civan had gone to Eelam (North Sri Lanka) whose habit was to chant continuously the mystic words "*Chemponnambalam*" (செம்பொன்னம்பலம்), "*Thiruambalam*" (திரு அம்பலம்) "*Thiruchitrambalam*" (திருச்சிற்றம்பலம்). This reached the ears of the Buddhist king who was then ruling Sri Lanka. He summoned the devotee to his court. The devotee, even while occupying his seat, was muttering '*Chemponnambalam*', '*Thiruvambalam*', '*Thiruchitrambalam*'. The king asked him to explain the significance of what he was saying. The devotee explained all about the mystic words and also about the greatness of Saivism, which flourishes from its epicenter, Chidambaram. He further asserted that if anyone sincerely utters these mystic words even once, they will receive the benefit arising out of saying '*Namachchivaaya*' (நமச்சிவாய) 21,600 times, (This figure represents the total number of breaths one normally makes in 24 hours).

A Buddhist priest, who was present at the Court, was provoked by this assertion. He claimed that there was no God greater than Lord Buddha who gave the world the "*Thirupedagam*" (திருபிடகம்). He also challenged that he will go to Chidambaram soon and establish the greatness of Buddhism over Saivism. The king took this challenge to himself and journeyed to Chidambaram with his followers and his daughter. The king's daughter was born deaf and dumb. They settled themselves in the Temple Hall in Thillai. The guards objected to their stay in the Temple premises. The Buddhist priests said that they had come to challenge

Saivism and to establish the greatness of their own religion. The priests in Chidambaram brought this to the notice of the Chola king. The king was concerned over these events. That night Lord Natarajaa appeared in the dream of all the Temple priests and conveyed to them to request Maanikkavaachakar to face the challenge thrown by the Buddhists.

Next morning all the priests shared their dream experience and in consultation with the King approached Maanikkavaachakar. They explained to him the situation and the dream they had on the previous night and requested him to challenge the threat of Buddhists. He agreed and reached the temple accompanied by the three thousand resident priests. Maanikkavaachakar worshipped, implored the Grace of Lord Civan and then reached the Temple Hall to face the Buddhists. The Chola King, scholars and poets have also assembled in the same Hall. Maanikkavaachakar arranged a curtain to be hung between him and the Buddhist priests. Maanikkavaachakar opened the debate and it went on and on. The Buddhist priest refused to see the truth in the arguments and continued to insist on their own views. In a trice the Buddhist priest and other followers with him lost their power of speech. The king of Eelam was perplexed. He then requested Maanikkavaachakar to grant the power of speech to his daughter, promising to embrace Saivism if his daughter could be made to speak.

Maanikkavaachakar directed the king's daughter to answer all the questions thrown by the Buddhist priests, which was repeated by him. Immediately the girl started speaking by replying the questions. The questions and answers formed the verse Thiruchchaazhal (திருச்சாழல்). Elated by the events, the Eelam king prostrated at the feet of Maanikkavaachakar and embraced Saivism. The king later requested Maanikkavaachakar to restore the power of speech to his followers also. Maanikkavaachakar graced them and their speech was restored. Asking forgiveness they all too embraced Saivism.

Maanikkavaachakar continued to remain in Chidambaram and sang more verses such as Thiruppadaiaatchi (திருப்படையாட்சி), Thiruppadai Ezhuchi (திருப்படை எழுச்சி), Achchap Paththu (அச்சப்பத்து), and Yaathiraip Paththu (யாத்திரைப் பத்து), Pandaaya Naanmarai (பண்டாய நான்மறை) etc.

One day Lord Civan in the guise of an elderly learned man came to Chidambaram and requested Maanikkavaachakar to repeat all the poems he had sung so far to enable him to put them in writing on Palm Leaves. He obliged and repeated all the poems. After writing all these poems in Palm Leaves, the Old Man requested Maanikkavaachakar to bring out a treatise on 'Kovai' (கோவை). This he did and the same was recorded. These four hundred poems are known as "Thirukkovaiyar" (திருக்கோவையார்). After writing these two great works for a few days, the Old Man suddenly disappeared! Maanikkavaachakar then only realised that the Old Man who wrote his poems was none other than Lord Civan Himself! Maanikkavaachakar was deeply moved by Civan's grace.

Next morning the priests who came to the Chidambaram Temple saw a big Palm Leaf Bundle on the steps leading to the Sanctum Sanctorum. The Temple Priests were astounded and amazed to find a Palm Leaf Bundle in the inner steps leading to the Sanctum Sanctorum enclosed by another room, which was locked by them in the previous night. On opening the Palm Leaf Bundle, they found a number of poems written on it, and at the end found the following words; "Retold by Maanikkavaachakar and written by the Lord of Thiruchchitrambalam" (மாணிக்கவாசகன் சொல்ல திருச்சிற்றம்பலம் உடையான் கைச்சாத்திட்டது).

The Priests approached Maanikkavaachakar and learned from him that it was Lord Civan Himself in the guise of an Old Man had been to Maanikkavaachakar, wrote all these poems as narrated by him and disappeared instantly. The Priests then realised that Lord Civan alone must have placed it on the inner steps of the temple.

The priests then requested Maanikkavaachakar to explain the inner meaning of these poems. He agreed and came to the Temple. Standing in front of Lord Natarajaa, Maanikkavaachakar said, "The Sum and Substance of his entire poems is nothing else than the Supreme Lord Natarajaa Himself". Saying thus, Maanikkavaachakar disappeared and merged with the Supreme in front of the king, ministers, priests and many others

THIRUCHCHITRAMBALAM

# திருவாசகத்துள் வந்துள்ள கதைகள்

## 1. அடிமுடி தேடியது

படைப்புக் கடவுளாகிய பிரமனுடைய நாட்கள் ஒவ்வொன்றும், தேவர்கள் ஆண்டில் 12,000 ஆண்டுகள் கொண்ட பகற்பொழுதும், அதே அளவுள்ள இராப்பொழுதும் கொண்டதாகும். தேவர்கள் ஆண்டு 12,000 என்பது, மண்ணுலக ஆண்டு 4,320,000,000க்குச் சமமாகும். பிரமனுடைய இராப் பொழுதில், எவ்வகைச் செயலும், எவ்வகைத் தோற்றமும் அற்று, எல்லா உலகமும் உயிரும் ஒடுங்கி, ஏற்றத் தாழ்வு இல்லாத ஒரே அமைதியே நிலவும்; இதை, யாவும் அழிந்த ஊழி எனக் கூறுவர். இத்தகைய இரவு ஒன்றில், பிரமன், அண்டங்களுக்கு எல்லாம் முதல்வனும் உயிருமாகி ஆயிரங் கண்களுடன், நீர் உருவம் பெறாத நீர் மேல் ஆயிரம் படங்களையுடைய அனந்தன் என்னும் உயர் வெள்ளையணையில் நாராயணன் கண் வளர்வதைக் கண்டு, பெருவியப்பும் மகிழ்வும் உடையவனாய், என்றும் உள்ள அப்பொருளைக் கையினால் தொட்டு 'நீ யார்? சொல்' என்றான். செந்தாமரைக் கண்ணன், அனந்தலொடு கடைக்கண் சாத்தி, புன்னகை பூத்து "மகனே வருக" எனலும், பிரமன் வெகுண்டு "எண்ணிறந்த உலகங்களைத் தோற்றியழித்து யாவைக்கும் மூலமும் உயிருமாய் விளங்கும் என்னை, 'மகன்' என அழைக்கும் மடமை ஏன் கொண்டாய்?" எனக் கூறினான். திருமால் "உலகங்களை எல்லாம் படைத்துக் காத்து அழிக்கும் நாராயணன் நான் என்பது அறிந்திலையா? நான் அன்றோ 'பரம்பொருள்'; நீ என் அழியாத் திருமேனியிலிருந்து தோன்றினவன் அன்றோ" எனக் கூற, இருவருக்கும் 'யார் பரம்பொருள்' என்பதில் பூசல் தோன்றிப் போராகப் பெருகியது. அப்பொழுது, அண்டங்களை எல்லாம் அழிக்க எழுந்தது போல் முதல், நடு, ஈறு இல்லாத ஒரு பேரழற் பிழம்பு தோன்றவே, இருவரும் திகைத்து நின்றனர். அண்டம் அனைத்தும் கடந்து நின்ற பேரொளித் தூணமாகிய அனற்பிழம்பின் அடியையும் முடியையும் காணும் முயற்சியில் இருவரும் ஈடுபட்டு, காவதக்கணக்கான நீளமும் அதற்கேற்ற பருமனும் கொண்ட நீலமணிக் குன்று போன்ற பன்றி உருவில், நிலத்தை அகழ்ந்து அடியைக் காண திருமாலும், திசையனைத்தும் விரிந்த சிறகுகளுடன் தூய வெண்மையான அன்னத்தின் உருவில், விரைந்து பறந்து முடியைக் காண பிரமனும் சென்றனர். ஆயிரக்கணக்கான ஆண்டுகள் உழன்றும் காணவியலாது களைத்துக் கையற்றுத் தங்கள் ஆணவம் ஒடுங்கப் பெற்றனர். இந்த நிலையில், முன்தோன்றிய அனற்பிழம்பு, சிவலிங்க உருவில் காட்சியளித்து இருவருக்கும் அருள் செய்தது. தம் பேதமையால் 'பரமம் யாம் பரமம்' என்ற பிரமன் அரி இருவரும், தம் பதைப்பு ஒடுங்கி, பரம்பொருள் சிவபெருமானே என உணர்ந்து வழிபட்டார்கள். பிரமன்,

முடியைக் கண்டதாகப் பொய் கூறியபடியால், சிவபெருமான், அவனுடைய ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளி எறிந்து, அவனை நான்முகனாக நிலைக்க அருளினார்.

## 2. அத்தி உரித்து அது போர்த்தது

முன்னொரு காலத்தில் யானை வடிவம் கொண்ட கயாசுரன் என்னும் ஓர் அசுரன், நான்முகனை நோக்கித் தவம் செய்து அழியாத வலிமை, வாழ்நாள், செல்வம் முதலிய பல வரங்களைப் பெற்று மூன்று உலகங்களிலும் சுற்றித் திரிந்து எல்லோருக்கும் துன்பம் செய்து வந்தான். திசைக் காவலர்களை வெருட்டினான்; இந்திரன் ஏறிச் செல்லும் ஐராவதத்தின் வாலைப் பிடித்துச் சுழற்றி எறிந்து, இந்திரனும் தேவர்களும் புறங்கொடுத்து ஓடச் செய்தான். தேவர்களும், முனிவர்களும், மற்றுமுள்ளோரும், பெருநடுக்கம் கொண்டு, சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் காசிப்பதியில் அடைக்கலம் புகுந்தார்கள். கயாசுரன், தான் பெற்ற வரங்கள் எல்லாம் சிவபெருமான் முன்னம் நில்லாது என்பதை அறவே மறந்தும், தன் வெற்றியிலும் வலிமையிலும் செருக்குற்றும், சிவபெருமான் கோயில் கொண்டிருக்கும் திருப்பதியில் அடைக்கலம் புகுந்தவர்களையும் கொன்று சிதைக்கும் கொடிய நோக்கத்துடன் யானையின் வடிவு கொண்டு, திருக்கோயிலின் முன்பு சீற்றத்துடன் சென்று இடிபோலப் பெருமுழக்கம் செய்தான். அடியவர்களுக்கு அரணாகிய சிவபெருமான், கண்டார் நடுங்கும் தோற்றத்துடன், கயாசுரன் முன் தோன்றினார். முடிவு நெருங்கியபடியால் சிவபெருமானுடனும் போர் செய்வதற்காகத் துடித்து ஓடினான். சிவபெருமான் திருவடியால் உதைக்கப் பெற்றுப் பதைபதைத்துக் கீழே விழுந்தான். அவ்வாறு விழுந்த கயாசுரனாகிய யானையின் தலையை ஒரு திருவடியாலும், தொடையை மற்றொரு திருவடியாலும் மிதித்துக்கொண்டு திருக்கைகளின் நகங்களால் முதுகில் கிழித்து நான்கு கால்களும் பக்கங்களில் பொருந்தும் படி தோலை உரித்தார். இதைக் கண்டு உமையம்மையும் நடுங்கினார். பெருமானின் உக்கிரத் திருமேனியின் பேரொளியில் உயிர்களின் கண்கள் பார்வையை இழந்தன. ஒளியின் கொடுமையைக் குறைத்து, உயிர்களின் கண்ணொளி மயக்கத்தைப் போக்கத் திருவுளங்கொண்டு உரித்த யானைத் தோலைத் திருப்புயத்தின் மேல்போர்த்துத் தன் கடுவொளியை மாற்றினார். கயாசுரன் அழிந்தது கண்டு மூவுலகும் பெருமகிழ்ச்சியடைந்து சிவபெருமான் திருவருளைப் போற்றி வாழ்த்தின.

"எண் திசையோர் அஞ்சிடுவகை கார்சேர் வரையென்னக் கொண்டெழு கோலமுகில் போல்
பெரிய கரிதன்னைப் பண்டுரி செய்தோன்"

(தேவாரம் 1053)

"வேழம் உரித்து உமை அஞ்சக்கண்டு ஒண் திருமணிவாய் விள்ளச் சிரித்தருள் செய்தார்"

(தேவாரம் 4870)

"உரித்துவிட்டாய் உமையாள் நடுக்கெய்த ஓர் குஞ்சரத்தை"

(தேவாரம் 4994)

"உமையவளை அஞ்சநோக்கிக் கலித்து ஆங்கு இரும்பிடி மேல்
கைவைத்து ஓடும் களிறு உரித்த கங்காளா"

(தேவாரம் 6715)

## 3. அத்திக்கு அருளியது

துருவாச முனிவர், சிவபெருமானை முறைப்படி வழிபாடு செய்யும் பொழுது பெருமான் திருமுடியிலிருந்து நறுமணம் மிக்க பொன்னிறத் தாமரை மலர் ஒன்று முனிவர் கையகத்து விழுந்தது; அதைப் பன்முறையும் வணங்கிக் கையில் ஏந்திக்கொண்டு பொன்னுலகுக்குச் சென்றார்; அங்கு, இந்திரன், பேரார்வத்துடன் தேவர்களும் முனிவர்களும் பல்லாண்டு இசைக்கவும், அரமகளிர் ஆடிப்பாடி சூழ்ந்து வரவும், இன்னியம் பல ஒலிக்கவும், சாமரைகள் இரட்டவும், வெண்கொற்றக்குடை நிழற்றவும், ஐராவதத்தின் மேல் அமர்ந்து, உலா வருவதைக் கண்ணுற்றார். உலாப்போந்த வாசவனை வணங்கி வானவர்கள் பல கையுறை வழங்கினர்; முனிவரும் தன் கையகத்திருந்த பொன்மலரைக் கையுறையாகக் கொடுத்தார். அத் தெய்வமலரின் மாட்சியறிய மாட்டாத புரந்தரன், அதைப் பொருட்படுத்தாமல் ஒரு கையால் வாங்கித் தான் ஊர்ந்து வந்த ஐராவதத்தின் முடியில் வைத்தான்; அந்த வெள்ளையானை, களிப்பு மிகுதியால், அம்மலரைக் கீழே தள்ளிக் காலால் தேய்த்து விட்டது. தான் கையுறையாகக் கொடுத்த சிவபெருமான் திருமுடிமேல் சாத்தப் பெற்ற பொற்றாமரைக்கு நேர்ந்த இழிவையும், ஆகண்டலன் (இந்திரன்) ஆணவத்தையும், நான்கு கொம்பு யானையின் செருக்கையும் கண்டு மனங்கொதிப்பேறிய முனிவர், இந்திரனை நோக்கி "ஆயிரங் கண்ணோய்!

வண்டுளருந் தண்டுளாய் மாயோன் இறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தேள் இறுமாப்பும்
அண்டர் தொழ வாழ் உன் இறுமாப்பும் ஆலாலம்
உண்டவனைப் பூசித்த பேறென்றுணர்ந்திலையால்

உன் முடி, மண்ணுலக மன்னன் பாண்டியன் ஒருவனால் சிதறக்கடவது, இந்த வெள்ளையானையும் மண்ணுலகத்தில் காட்டானையாகப் பிறந்து அலைந்து உழலக்கடவது'' எனச் சாபமிட்டார். ஈரிறு மருப்பின் சீரிய யானையும் கரியாக மண்ணுலகிற் பிறந்து யானைக் கூட்டங்களுடன் காடுகளிலும் மலைகளிலும் அலைந்து கொண்டிருக்கலாயிற்று. இவ்வாறு திரிந்து கொண்டிருக்கும் பொழுது, ஒரு நாள், கடம்பவனத்துள் நுழைந்து அங்கிருந்த தாமரைக் குளத்தில் நீராடியது. முனிவர் சுடுசொல் விடுதலையாகும் காலம் வந்துற்றபடியால் காட்டானை உருவம் நீங்கி, பண்டைய வடிவும் அறிவும் பெற்றது. அங்கு சொக்கலிங்க மூர்த்தியாகக் காட்சியளித்த சிவபெருமானை வணங்கி, தாமரைப் பொய்கையிலிருந்து, தன் துதிக்கையால் நன்னீர் கொண்டு வந்து இறைவன் திருமேனிக்குத் திருமஞ்சனம் செய்து, தாமரை மலர்களைச் சாத்தி வழிபட்டது. வெள்ளை யானையின் பூசைக்குத் திருவுளம் மலர்ந்த சிவபெருமான், வேண்டிய வரங்களைத் தந்து, வானவர் உலகில் முன்புபோலச் சீரும் சிறப்பும் பெற்று வானவர் தலைவர் ஊர்தியாகத் திகழும் வண்ணம் திருவருள் செய்தார்.

4. அந்தகனை மாயா வடுச் செய்தது

அந்தகன் என்னும் அசுரன் ஒருவன் சிவபெருமானை எதிர்த்து அவரது சூலப்படையினால் அழிவுற்றான் என்னும் பழஞ்செய்தி

"காளமேகந்நிறக் காலனோடு அந்தகன் கருடனும்
நீளமாய் நின்று எய்த காமனும் பட்டன நினைவுறின்
நாளுநாதன் அமர்கின்ற நாகேச்சர நண்ணுவார்
கோளு நாளுந் தீயவேனும் நன்காங் குறிக்கொண்மினே''

(தேவாரம் 2763)

"நஞ்சினை உண்டு இருள் கண்டர் பண்டு அந்தகனைச் செற்ற
வெஞ்சின மூவிலைச் சூலத்தர் வீழிமிழலையார்...''

(தேவாரம் 2891)

"............. தண்வயல் கண்டியூர் உறை வீரட்டன்
... ... ... அமரரானவர் ஏத்த அந்தகன் தன்னைச் சூலத்தில் ஆய்ந்ததே''

(தேவாரம் 3209)

எனத் திருமுறைகளில் காணப்படுகின்றது. 'அந்தகன்' என்பதற்கு 'யமன்' என்றும், 'சனி' என்றும் பொருள் கூறுவாரும் உண்டு.

5. அந்தணன் ஆகி ஆண்டு கொண்டது

திருவாதவூரடிகளுக்குச் சிவபெருமான் ஞான குரவனாகத் தோன்றி ஆட்கொண்டதைக் குறிப்பிடுகின்றது.

6. அந்தரத்து இழிந்து பாலையுள் அமர்ந்தது

இச்செய்தி, திருப்பெருந்துறையில் சிவபெருமான் எழுந்தருளியதைக் குறிப்பிடுவதாகச் சிலர் கொண்டு "தென்பாலைத் திருப்பெருந்துறை" (550) என அடிகளார் குறிப்பிடுவதைத் துணையாகக் கூறுவர். சிலர், 'அழகனே கழிப்பாலை எம் அண்ணலே' (தேவாரம் 5627)

"அத்தனை அணியார் கழிப்பாலைஎம்
சித்தனைச் சென்று சேருமா செப்புமே"

(தேவாரம் 5632)

"ஐயனே அழகே அனலேந்திய
கையனே கறைசேர்தரு கண்டனே
மையுலாம் பொழில் சூழ் கழிப்பாலை எம்
ஐயனே விதியே அருள் என்னுமே"

(தேவாரம் 5631)

என்னும் திருமுறைப் பகுதிகளைத் தொடர்புபடுத்தி, 'பாலை' என்பது "கழிப்பாலை" என்னும் திருப்பதியைக் குறிப்பிடுகிறது என்றும், "அணியார்", "அழகன்", "அழகு" என வருவன 'அழகமர் பாலை', "சுந்தர வேடம்" என்பனவற்றோடு இயைபுடையன எனவுங் கூறுவர். சிலர், அடிகளார் காலத்தில் வழக்கிலிருந்த நான்கு கயிலாயங்களுள், மேற்குக் கயிலாயத்தை இத்தொடர் குறிப்பிடுகின்றதென்றும், அங்கு, வானத்திலிருந்து இழிந்தருளிய சிவலிங்கம் ஒன்று நிலைபெற்றுப் பல சமயத்தாராலும் வணங்கப்பெற்று வந்ததென்றும், அத் தெய்வநிலை, இப்போது அரபிய நாட்டில் தெய்வச் சிறப்புற்றுத் திகழும் 'மெக்கம்' என்னும் திருப்பதியாக இருக்கக்கூடும் என்றும்,

'அந்தரத்து இழிந்து வந்து அழகமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைந்து இருந்தருளியும்'

என்பன, எல்லா வழியாலும் தங்கள் கொள்கையையே வலியுறுத்துகிறது என்றும், "தன்மை" என்பது "தொன்மை" என இருந்திருக்க வேண்டும் என்றும், ஆழ்ந்த ஆராய்ச்சிக்கு உரிய கருத்துக்களைக் கூறுகின்றனர்.

**7. அயன் தலை கொண்டு செண்டாடியது**

**60–ஆவது கதை பார்க்க.**

**8. அயனை மாயா வடுச் செய்தது**

பிரமனை ஐந்து தலைகளில் ஒன்றைச் சிவபெருமான் கிள்ளி எறிந்ததாகப் பல கதைகள் கூறப்படுகின்றன. 'அடிமுடிதேடிய' கதையுள் ஒன்று கூறப்பெற்றது. சிவபெருமானினும் தான் உயர்ந்தவனாக எண்ணிப் பிதற்றியமையால், பெருமான் அவ்வாறு பிதற்றிய ஐந்தாவது தலையைக் கொய்து எறிந்தார் என்றும்; பிரமன் காமக்குறும்புடன், தன்னிடமிருந்து தோன்றிய ஒரு பெண்ணின் அழகைப் பார்த்தமையால், சிவபெருமான், அவ்வாறு பார்த்த கண்களையுடைய ஐந்தாவது தலையைத் துணித்தனர் என்றும்; சிவனை, தனக்கு மகனாகப்பிறக்க வேண்டும் என்று பிரமன் வரம் கேட்ட போது, அப்பெருமான் இட்ட சாபத்தால், ஐந்தாவது தலை வெடித்து உதிர்ந்தது என்றும்; பழங்கதைகளில் காணப்பெறுகின்றது.

**9. அரக்கன் தோள் நெரித்தது**

வானினும் நீரினும் செல்லவல்லவர்களும் பல மாயங்களும் கற்றுக் கைதேர்ந்தவர்களுமாகிய அரக்கர்களுக்குத் தலைவனாக, இலங்கையைத் தலைமையிடமாக வைத்து மூவுலகங்களையும் ஆட்சி செய்துவந்த இராவணன் என்னும் அரக்கன், சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்து பல வரங்களையும் பெற்றுத் தேவர்களும் மூவர்களும் அடிபணியவும் இருசுடரும் ஐம்பெரும்பூதமும் ஏவல் கேட்கவும் தனக்கு மிக்காரும் ஒத்தாரும் எவ்வுலகத்திலும் இல்லை என இறுமாப்புக் கொண்டு திரிந்து வந்தான். ஒரு நாள் அவன் வான் வழியாக விமானத்தில் செல்லும்போது, சிவபெருமான் கயிலைக் குன்றம் எதிர்ப்பட்டது; பாகன், விமானத்தை நிறுத்தி, கயிலைக்குன்றத்தை வணங்கி வலம் செய்து செல்வதே முறை எனக் கூறினான். ஆணவம் தலைக்கேறிய அரக்கன், தான் பெற்ற பேறு அனைத்தும் சிவபெருமான் அளித்தவையே என்பதை அறவே மறந்து, ஒரு சிறிதும் பணிவு இன்றி, விமானத்தைக் கயிலைக்குன்றுக்கு மேலே செலுத்துமாறு கட்டளையிட்டான்; விமானம் மேற்செல்லும் ஆற்றலின்றி நின்றுவிடவே, கடுஞ்சினங்கொண்டு, குறுக்கே நின்ற கயிலாய மலையையே எடுத்து எறிந்து விடுவதாக விமானத்தினின்றும் இறங்கித் தன் வீரத்தோள்களால் மலையைப் பெயர்க்கத் தொடங்கினான். மலையும் சிறிது அசைவுற்றது: கயிலையில் இறைவனோடு வீற்றிருந்த உமையம்மையும் துணுக்குற்றனர். சிவபெருமான் தன்

திருவடியின் சிறு விரலைச் சிறிது அழுத்தினார். ஒரு மலையைத் தூக்கி எழும் மற்றொரு மலைபோல் கயிலையைத் தோள்கொடுத்துத் தூக்கிய அரக்கனது முடியும் தோளும் நெடுநெடு என நெரிபட்டு அரக்கனும் யானைக் காலில் அகப்பட்ட அத்திப்பழம்போல் நசுக்குண்டு கதறினான். பல காலம், மலையடியிற் கிடந்த வண்ணமாகவே சிவபெருமானைப் பணிந்து பல இனிய சாம கானப் பாடல்களைப் பாடி, விடுதலையடைந்து சிவபெருமான் திருவருளையும், மேலும் பல வரங்களையும் பெற்று இலங்கைக்குத் திரும்பினான்.

**10. அரியொடு பிரமற்கு அளவறியாமை**

1–ஆவது கதை பார்க்க. அனற் பிழம்பாக நின்ற சிவபெருமான் அடியையும் முடியையும் அரியும் பிரமனும் அளந்து காணவியலாது நின்றதைக் குறிப்பிடுவது.

**11. அருக்கன் எயிறு பறித்தது**

60–ஆவது கதை பார்க்க.

**12. அலரவனும் மாலவனும் அறியாத அழல் உருவம்**

1–ஆவது கதை பார்க்க. அலரவன் – தாமரை மலரிலுள்ள பிரமன். மால் = திருமால்.

**13. அலைகடல் மீமிசை நடந்தது**

14–ஆவது 99–ஆவது கதைகள் பார்க்க.

**14. அலைகடல்வாய் மீன் விசிறியது**

முன்பு ஒரு காலத்தில், சிவபெருமான், வேதங்களின் உண்மைகளை, உமையம்மைக்குச் சொல்லிக் கொண்டிருந்தார். அம்மை, அவ்வுண்மைகளை உளம்பற்றிக் கேளாது பராமுகமாக இருந்தார். சிவபெருமான் வெகுண்டு “நீ உண்மைப் பொருளை உணர்ந்து கொள்வதில் நாட்டமில்லாது இருந்தமையால், மண்ணுலகத்தில் வலைச்சேரியில் வலைஞர் மகளாகத் தோன்றக் கடவாய்” எனச் சபித்தனர். அம்மை, நடு நடுங்கி “இறைவனே ஒரு கணமேனும் பிரியாது உடன் உறையும் யான் எவ்வாறு பிரிந்திருப்பேன்” என அழுதார்; இறைவன் உளமிரங்கி, “என் செய்வது ?

இனிச் சாபத்தை மாற்ற முடியாது; ஆனால், நீ, வலைஞர் குலப் பெண்ணாக வளரும் நாட்களில், நாமே நின்பால் எழுந்தருளித் திருமணம் செய்து சாபத்தை நீக்குவோம்'' என ஆறுதல் கூறி அனுப்பி விட்டார். அன்னைக்கு நேர்ந்த அலக்கணைக் கேள்வியுற்ற பிள்ளைகள் இருவரும், இவ்வளவும் இந்த வேதங்களாலன்றோ நிகழ்ந்தது என வெகுண்டு, சிவபெருமான் இருப்பிடம் சென்று அருகிருந்த வேதங்களைப் பறித்துக் கடலில் வீசி எறிந்து விட்டார்கள். இச்செயல் கண்டு கடுஞ்சினம் கொண்ட கறைமிடற்று அண்ணல், குறும்பு செய்த தன் மக்களைச் சபிக்க முடியாமல், இவர்களை உள்ளே விட்ட வாயிற் காவலனான நந்தி தேவரைச் சினந்து "நீ சுறாமீனாகப் பிறந்து கடலில் எறியப்பட்ட வேதங்களைச் சுமந்து திரிவாயாக'' எனச் சபித்தனர்.

சாபம் பெற்ற அம்மையார், பாண்டிய நாட்டில், ஒரு பரதவர் சேரியில், அக்குல மன்னனின் மகளாகவும், நந்திதேவர் அச்சேரியை அடுத்த கடலில், உச்சியில் வேதமும் உள்ளத்தில் சிவபெருமான் திருவடியும் வீற்றிருக்கும் சுறாமீனாகவும் வாழ்ந்து வந்தார்கள். கடலில் மீன் பிடிக்கும் பரதவர்களுக்கு, புதிதாக வந்த சுறா பல இடுக்கண்களைச் செய்து, கடற் பரப்பில் படகோ நாவாயோ ஓடாதபடி அச்சம் விளைவித்து வந்தது. வலைவளம் குன்றி, பரதவர்குடி வாட்டம் உறுவதாயிற்று. பரதவர் மன்னனும், அச்சுறுத்தும் அச்சுறாவினைப் பிடிக்கப் பலவாறு முயன்றும் பயன்படாது போயிற்று. வாட்டமுற்ற வலைஞர் பெருமகன் ஒன்றும் தோன்றாமல், இக்கடலைக் கலக்கித் திரியும் குன்றம் போன்ற சுறாவினைப் பிடிப்பவனுக்கே தன் மகளை மணஞ்செய்து கொடுப்பதென உறுதி கொண்டிருந்தான். அப்பொழுது, சிவபெருமானே வலிய வலைமகன் உருக்கொண்டு பரதவர் சேரியை அணுகி, அவர்கள் வேண்டிய வண்ணம், கடலினுள் சென்று வலை வீசி, எவர்க்கும் பிடிபடாத சுறாமீனைப் பிடித்து வலைவாழ்நர் இடுக்கணைப் போக்கினார். பரதவர் மன்னனும் தான் உறுதிகொண்டபடியே, தன் மகளை சுறாவினை ஒரே வீச்சில் பிடித்த இளைஞனுக்கு மணம் செய்து கொடுத்தான். உடனே அம்மையப்பனாகச் சிவபெருமான் வலைஞர் கோவிற்குக் காட்சி கொடுத்து, உமையும் நந்தியும் பெற்ற சாபத்தை விலக்கியருளி முன் நிலையிலே இருக்கத் திருவருள் செய்தார்.

### 15. அலைநீர் விடம் உண்டது

முன் ஒரு காலத்தில், தேவர்கள் வலிமை குன்றியும் அசுரர்கள் வலிமை மிக்கும் இருந்தார்கள். வலிமை மிக்க அசுரர்கள் தேவர்களைப் பல வழியிலும் துன்புறுத்தி அவர்களுடைய உடைமைகளை எல்லாம் சிறுகச் சிறுகக் கவர்ந்து கொண்டார்கள். இந்த நிலை தொடருமானால்

# SOCIO RELIGIOUS GUILD
# COMMITTEE MEMBERS




**From Left to Right**

**K. SOMASUNDARAM, R.V.P. GOPALAKRISHNAN**

**N. VENKATACHALAM, V. ARUMUGAM**

**P.N. NAYAGAM, K.S. VADIVALAGIA NAMBI, P.J. VICTOR**

**Standing**

**K. SIVAMURUGAN, G. PARTHASARATHY**
**(SIVA COMPUTERS)**

தேவர்கள் அறவே ஒழிந்துவிடுவார்கள் என்ற அச்சம் பிறந்தது. தேவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து நான்முகனைச் சரண் அடைந்து தாங்கள் வாழ்வதற்கான வழியை வகுத்தருள வேண்டினார்கள். பிரமதேவன், எல்லாத் தேவர்களையும் அழைத்துக் கொண்டு திருப்பாற்கடலின் வடகரை வழியாகச் சென்று அரவணையில் கண் துயிலும் பெருமானாகிய திருமாலிடம் தேவர்கள் குறையைத் தெளிவாகக் கூறி யாவரையும் காத்தருள வேண்டினான். கமலக் கண்ணன் கருணை பொழியும் திருமுகம் மலர்ந்து கடைக்கணித்து "தேவர்களே உங்கள் அனைவரையும் காப்பாற்றி வலிமையுடையவராக்கி அசுரர்களைப் புறங்கொடுத்து ஓடச்செய்வன். திருப்பாற்கடலிலுள்ள அமிர்தத்தைக் கடைந்து எடுத்து உண்பீர்களானால் மரணமின்மையையும், பல செல்வங்களையும் வலிமையையும் பெறுவீர்கள். பாற்கடலிலிருந்து அமுதம் பெறுவதற்கு, மத்தாக மந்திர மலையை நாட்டி நாணாக வாசுகியைப் பூட்டித் தக்க வலிமையுடன் இருபுறமும் நின்று கடையவேண்டும். ஆனால், இப்போது, தேவர்களாகிய நீவிர் அனைவரும் வலிமையின்றி வாடுகின்றீர்கள்; நீங்கள் அனைவரும் கூடினால் ஒரு புறம் தான் நிற்க முடியும், மற்றொரு புறத்திற்கு அசுரர்களை ஆசைகாட்டிச் சேர்த்துக்கொள்வீர்களானால், அவர்கள் உழைப்பைப் பெற்றுக்கொண்டு கிடைக்கும் பொருள்களில் பங்கில்லாமல் ஏமாற்றிவிடலாம், எல்லா வழியிலும் நான் முன் நின்று உங்களைக் காத்து அமிழ்தம் ஈவேன்" என உறுதி கூறினார். தேவர்கள் வாசுகியின் வாற்புறமும், அசுரர்கள் தலைப்புறமுமாக நின்று கடைந்தார்கள். வாசுகி வலி பொறுக்காமல் நஞ்சைக் கக்கியது; கடலினின்று கொடிய நஞ்சும் வெளிவந்தது; இரண்டும் கூடி ஆலாலமாகி அண்டங்களை எல்லாம் அழிப்பது போல் பரந்தது. திருமாலும், பிரமனும், தேவர்களும், அசுரர்களும் அஞ்சி, ஓடோடிச் சென்று சிவபெருமானைச் சரண் அடைந்தார்கள். சிவபெருமான் கொடிய ஆலகாலவிடத்தைத் தினையளவாகச் சுருக்கி அமுது செய்தருளி வானவரையும் தானவரையும் அழியாமற் காத்தார். இறைவன் நஞ்சு உண்டு வானவரை அமுதுண்ணச் செய்த பேரருளை, அந்நஞ்சு, இறைவன் திருமிடற்றில் நீலமணிபோல் நின்று உலகுக்குக் காட்டுகின்றது.

"நாகந்தான் கயிறாக நளிர்வரை அதற்கு மத்தாகப்
பாகந் தேவரோடு அசுரர் படுகடல் அளறு எழக்கடைய
வேகநஞ்சு எழ ஆங்கே வெருவொடும் இரிந்து எங்கும் ஓட
ஆகம் தன்னில் வைத்து அமிர்தம் ஆக்குவித்தான் மறைக்காடே"

(தேவாரம் 2459)

**16. ஆகமம் வாங்கியது**

14–ஆவது கதையிற் கண்டபடி உமையம்மையார் சிவபெருமானை மணந்து, தான் ஆகமங்களைக் கருத்தூன்றிக் கேளாமையால் வந்த விளைவு என்பதை உணர்ந்து, இறைவனை வேண்டி ஆகமங்களின் உண்மையை இறைவன் உரைப்ப அவர் கேட்டுத் தெளிந்தமையையும், கடலில் எறியப்பெற்ற ஆகமங்களை நந்திதேவர் சுறாவடிவில் சுமந்து கொண்டிருப்ப, அத்தேவர் சிவபெருமான் வீசிய வலையில் பிடிபட்ட போது ஆகமங்களும் அவருடன் வலையிற்பட்டு மீண்டும் நிலவுலகுக்கு வரச் செய்ததையும் குறிப்பிடுகின்றது.

**17. ஆட்டின் தலையை விதிக்குக் கூட்டியது**

60–ஆவது கதையைப் பார்க்க. விதி என்பது பிரமனுடைய பெயர்களுள் ஒன்று. துணைப் பிரமர்களில் ஒருவனாகிய 'தக்கன்' சிறு விதி எனப் பெறுவான். இங்கு விதி என்பது துணைப்பிரமர்களுள் ஒருவனாகிய தக்கனுக்கே வழங்கப்பெற்றுள்ளது.

**18. ஆலாலம் உண்டது**

15–ஆவது கதையைப் பார்க்க.

**19. ஆலின் கீழ் அறம் உரைத்தது**

சநகர், சநந்தனர், சநாதனர், சநற்குமாரர் என்னும் நான்கு முனிவர்களுக்கும் சிவபெருமான் ஞானாசிரியனாகக் கல்லாலின் கீழ் வீற்றிருந்து, சரியை, கிரியை, யோகம் என்னும் முதல் மூன்று பகுதிகளை விளக்கிக் கூறி, நான்காவதாகிய ஞானத்தை, இருந்தபடி இருந்து, மோன முத்திரையினால் அருளிச்செய்தார் என்பது பெருவழக்கிலுள்ள வரலாறு. சிவபெருமான், இந்தத் திருக்கோலத்தில் தக்ஷிணாமூர்த்தி அல்லது தென்முகக்கடவுள் எனப் போற்றப் பெறுவர்.

கல்லாலின் புடையமர்ந்து நான்மறை ஆறு அங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கு அப்பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை நினையாமல் நினைந்து பவத் தொடக்கை வெல்வாம்

– திருவிளையாடற்புராணம்.

சிவபெருமான் திருவுருவத்தையே ஐம்புலன்களாலும் துய்த்து மனம் இறந்த மாண்பினராய் எவ்வுயிர்க்கும் தண்மையே பூண்டு ஒழுகும் அறவோர்க்கு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கின் உண்மைகளையும், முக்கண்ணான், திருவாய் மலர்ந்தருளினான் என்றும், ஐந்தவிந்தடங்கிய ஆன்றோர் காட்சியிற்கண்ட உண்மைகள் பொதிந்த முதல் நூல்களின் வழி நின்று இறைவன் தாளினை அடைய முயன்றார்க்கு, அவன் திருவருள் காட்டிய நெறியே, ஆலின் நிழலில் அருமறையாகச் சொல்லப்பெற்றதென்றும், அறநெறிகளைக் கிளரும் நான்கு வேதங்களை ஆலின் கீழ் அமர்ந்து நிமலன் அருளினான் என்றும், நேர்மையான நான்கு மறைகளின் பொருளை உரைத்ததோடு திருவருட் பிரகாசமாகிய பேரொளியைச் சேரும் சிறந்த வழிகளையும் அருளினான் என்றும், ஆளுடைய பிள்ளையார் கூறுகின்றார். (575. 515. 1411) திருவாதவூரடிகள், ஆலின் கீழ் உரைத்த அறம் முதல் நான்கால் அருந்தவர் உலகியற்கையைத் தெரிந்தனர் எனக் கூறுகின்றனர். ஆலடி அமர்ந்த தென்முகக் கடவுளை முன்னிலைப் படுத்தித் தாயுமானவர் பாடியுள்ள 'சின்மயானந்தகுரு' என்னும் பகுதி படித்துப் பயன் கொளற்பாலது.

## 20. இத்திதன்னில் இருமூவர்க்கு அருளியது

முன்பு ஒரு காலத்தில், திருக்கயிலாயமலையில், உமையவள் உடனிருப்ப, சிவபெருமான் போக குருமூர்த்தியாய் எழுந்தருளி, சிவகணத் தலைவர்களுக்கும் முனிவர்களுக்கும், அரிய மறைப்பொருளை இனிமையாகச் சொல்லிக் கொண்டிருக்கும் போது, முருகக் கடவுளுக்குப் பால் கொடுத்த கார்த்திகைப் பெண்களான இயக்கமாதர் அறுவரும், எம்பெருமான் திருவடிக் கமலங்களை வணங்கித் தங்களுக்கு அட்டமா சித்தியை உபதேசித்தருள வேண்டினார்கள். இறைவன் கருணை கொண்டு உபதேசம் செய்து, உடனிருக்கும் உமையைச் சுட்டிக் காட்டி, "இந்த அம்மையை இடைவிடாது வழிபட்டுச் சிந்திப்பீர்களாயின் இச்சித்திகள் அனைத்தும் நிலைக்கப் பெறுவீர்கள்" என்று கூறினார். வினை வயத்தால் இயக்கமாதர் உமை வழிபாட்டை மறந்து சித்திகளும் கைவரப் பெறாமல் போயினர். அவர்கள் மறந்த குற்றத்திற்காக, சிவபெருமான் சாபத்திற்கு ஆளாகி, பாண்டி நாட்டில் பட்டமங்கை என்னும் பதியில் ஒரு ஆலமரத்தின் (இத்தி என்றும் பேசப்படுகிறது) கீழ், கற்பாறைகளாகக் கிடக்க வேண்டியதாயிற்று. பல ஆயிரம் ஆண்டுகள் கழித்து, மதுரையில் எழுந்தருளியுள்ள திருக்கோலத்தில் சிவபெருமான், பாறையாகக் கிடந்த இயக்கமாதர் முன் தோன்றி, சாபத்தை விடுதலை செய்து மீண்டும் அட்டமாசித்திகளை

அவர்களுக்கு உபதேசித்தார். இயக்கமாதரும் உபதேசப்படி பயின்று உமையம்மையை வழிபட்டு வான்வழியாகக் கயிலையை அடைந்தார்கள்.

## 21. இந்திர ஞாலம் காட்டிய இயல்பு

வாதவூரடிகளுக்குச் சிவபெருமான் ஞானாசிரியனாகத் தோன்றி இவ்வுலக வாழ்வு நிலையாதது என உணர்த்தியதைக் குறிப்பதாகும். இக் கருத்தையே "இந்திர ஞால இடர்ப் பிறவித்துயர்" என 635ஆம் செய்யுளிலும் குறிப்பிடுகின்றார். இந்திரசாலம், கனா, கழுதிரம் (கானல் நீர்) என்பன உலக நிலையாமைக்கு எடுத்துக்காட்டுகளாக நூலோர் கொண்டனவாகும். இந்திரசாலம் தோன்றும் பொழுதே இல்லையாய் வேறாதற்கும், கனா, முற்றும் நிகழ்ச்சியின்றி இடையில் மாறுதலுக்கும், கானனீர், ஒரு காரணங்காட்டி அழிவெய்தலுக்கும் உவமையாவன. 'இந்திரஞாலம் காட்டிய இயல்பு' என்பதற்கு இறைவன் நரிகளைப் பரிகளாகச் செய்த மாயத்தைக் குறிப்பிடுவதாகவும் சிலர் கூறினர்.

## 22. இந்திரனைத் தோள் நெரித்தது

60–ஆவது கதை பார்க்க.

## 23. இயக்கிமாரை எண்குணம் செய்தது

அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், கந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பிசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசியர், போகபூமியர் என்னும், பதினெண் கணத்துள் இயக்கர் என்பர் ஒரு பகுதியினர். அப்பகுதியைச் சேர்ந்த பெண்பாலர் அறுபத்து நால்வர் சிவபெருமானை நோக்கித் தவம் செய்து, தன் வயத்தர் ஆதல், தூய உடம்பினர் ஆதல், இயற்கை உணர்வினர் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கல், பேரருள் உடைமை, வரம்பு இல் இன்பம் உடைமை என்னும் எட்டு வகையான பேறுகளையும் பெற்ற ஒரு பழஞ் செய்தியைக் குறிப்பிடுகின்றது. இந்த வரலாறு ஆந்திரம், கன்னடம், தென்மராடம் முதலிய நாடுகளில் சில சிற்றூர்களில் வழங்கி வருகிறதென்றும், சில கோயில்களில் கற்சிலைகளும் காணப்பெறுகின்றது என்றும் கூறுவர்.

குறிப்பு: அட்டமாசித்திகளைப்பற்றி வேறு விளக்கங்களும் உள்ளன. கதை 71–ஐப் பார்க்கவும்.

## 24. இராவணன் பரிசு அழிந்தது

9–ஆவது கதையைப் பார்க்க.

## 25. இலங்கையில் பந்தணை விரலாட்கு அருளியது

திருவுத்தரகோசமங்கையில், முன்பு ஒரு காலத்தில், இலந்தையம்பொதுவில் சிவபெருமான் அருட்டிருமுன், ஆயிரம் முனிவர், நின்று ஆகமப் பொருளைக் கேட்டுக் கொண்டிருந்தனர். அப்போது இலங்கைவேந்தன் இராவணனது கற்பிற்சிறந்த மனைவி மண்டோதரியின் பூசனைக்கு அருள் செய்யவேண்டி, சிவபெருமான் இம்முனிவர்களுக்கு உபதேசம் செய்வதை நிறுத்திவிட்டு, இலங்கை மன்னன் மனைவிக்கு அவள் வேண்டியபடி குழந்தை உருவத்தில் காட்சியளித்து அருள் செய்தார். சிவ வழிபாட்டில் சிறந்தவனாகிய இராவணனும், குழந்தை உருவிற் காட்சியளித்த சிவபெருமானைத் தன் மனைவி மண்டோதரியின் கைகளில் இருந்து தூக்கி எடுத்து உச்சிமோந்து பேரானந்தம் கொண்டான். மண்டோதரி, தன் கணவனுக்குச் சிவபெருமானைத் தொட்டு எடுத்து மார்பில் அணைத்துக்கொள்ளும் நற்பேறு கிடைக்க வேண்டுமென்றே, குழந்தை உருவில் காட்சியளிக்க வேண்டினள் போலும். பந்தணை விரலாள் = மண்டோதரி.

## 26. எச்சன் தலையை அரிந்தது

60–ஆவது கதையைப் பார்க்க

## 27. எரி மூன்று தேவர்க்கு அருளியது

மண்ணகத்தில் அந்தணர் ஓம்பும் வேள்வித்தீயின் வகையாகிய ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி, என்னும் மூன்று எரி(தீ)யையும் தேவர், பிதிரர், முதலியோர் அடையுமாறு வகுத்த இறைவனது பேரருள் குறிப்பிடப்பட்டது.

## 28. எரியைக் கரம் தூய்மை செய்தது

60–ஆவது கதையைப் பார்க்க.

## 29. ஏகம்பத்தில் இயல்பாய் இருந்தது

முன்பு ஒரு காலத்தில் சிவபெருமானும் உமையம்மையும் தலைவன் தலைவி முறையில் மகிழ்பொங்க விளையாடிக் கொண்டிருக்கும்போது, அம்மை, இறைவன் கண்களை தன் இரு கைவிரல்களால் மூடினார். இரு கண்களும் இரு சுடர்களானபடியால் (சூரியன், சந்திரன்) கண்கள் அம்மை திருக்கரத்தால் புதைபட்டவுடன் உலகம் எங்கும் இருள் பரவியது. உயிர்கள் எல்லாம் நடுக்குற்றன. யாவும் மயங்கின. இறைவி கரம் நீத்தவுடன் மீண்டும் ஒளி பரவியது. உலகத்தில் ஒளியை மறைத்து இருளைப் பரவச் செய்தல் தீய செயலானபடியால், அத்தீமையினின்றும் தீர்வு பெறுதற்கு, அம்மை, காஞ்சிநகரை அடைந்து முறைப்படி முப்பத்திரண்டு அறங்களையும் செய்து சிவ பூசையை நியமம் தவறாது செய்து கொண்டுவர வேண்டும் என இறைவன் பணித்தார். அம்மையாரும் காஞ்சியை அடைந்து எண்நான்கு அறங்களையும் எழில் பெறச் செய்து,

"ஆனுடைப் பாற்குடம் கோடி அருஞ்சுவை நெய்க்குடம் கோடி
தேனுடைப் பொற்குடம் கோடி செழுங்கரும்பு அட்டதண்சாறு
தானிறை பொற்குடம் கோடி தயிருடைப் பொற்குடம் கோடி
வானமிழ்தக் குடம் கோடி"

ஒரு சார் சேடியர் கொணரவும், பல்வகைப்பட்டும் ஒருசாரர் கைஏந்தி நிற்கவும் பல்வகைத் தீபமும் ஒரு சாரர் ஏந்தி நிற்கவும்.

"வழுவறு தோற்றமாதி வழுக்கிய பாவத்தீமை
கழுவநின் பூசை இந்நாட் கடைப்பிடித்து அருளால் செய்கேன்"

என்று சங்கற்பம் செய்து கொண்டு சிவபூசை செய்து வருநாளில், கம்பையாறு பெருகிக் கடல் புரண்டாற்போல் பரந்து வந்தது. தான் பூசை செய்துவரும் சிவலிங்கத் திருவுருவுக்கு என்ன நேருமோ என்ற அச்சத்தால் நடுநடுங்கி வேதியின் மேல் தன் வலமுழந்தாளை ஊன்றி இரு திருக்கரங்களாலும் சிவலிங்கத்தை இறுகத் தழுவிக் கொண்டார். ஊடனே "சுந்தரம் திகழ்சுடர் ஒளி இலிங்கத்தினின்று, முந்து தோன்றினர் மூவருக்கு அறிவருமுதல்வர்" (மூவராலும் அறிவதற்கு அருமையான சிவபெருமான் உமையம்மை கட்டித் தழுவிய இலிங்கத்தினின்று வெளிப்பட்டார்). பின்னர் இறைவனும் இறைவியும் திருமணக் கோலத்துடன் அடியவர்க்குக் காட்சியளித்து மறைந்தனர். இதன்கண் இயல்பான பல நிகழ்ச்சிகள் பொதிந்துள்ளமை காண்க.

## 30. ஏனக்குருளைக்கு அருளியது

முன்னொரு காலத்தில் வேளாளர் குலத்திற் பிறந்த சேனைத்தலைவன் ஒருவனுக்குப் பன்னிரண்டு பிள்ளைகள் பிறந்து சிறப்புற வளர்ந்து வரும்போது, சேனைத்தலைவனும் அவன் மனைவியும் இறப்ப, பன்னிரு பிள்ளைகளும் போற்றுவாரின்றி, நாட்டைவிட்டு வேற்று நாட்டுக்குச் சென்று காடுகளைத் திருத்தி வயிறு வளர்த்து வந்தார்கள். ஒரு நாள், அந்தக் காட்டில் தவம் செய்துவந்த ஒரு முனிவனைப் பார்த்துச் சிரித்து ஏளனம் செய்தார்கள். முனிவன் சீற்றம் கொண்டு "நீவிர் பன்னிருவரும் பன்றிக்குட்டிகளாகப் பிறந்து, தாயை இழந்து இன்னலுறுவீர்களாக " என சுடுமொழி கூறினான். தங்கள் குற்றத்தை உணர்ந்து முனிவனைப் பணிந்து, சுடுமொழியை விடுவிக்க மன்றாடிக் கேட்டனர். முனிவனும் இரங்கி "சோமசுந்தரக் கடவுள், உங்களுக்கு நற்கதி அளிப்பார்" எனப் பகர்ந்தான். அவ்வாறே பன்னிருவரும் பன்றிக்குட்டிகளாகப் பிறந்தனர்; தாய்ப் பன்றியை, அங்கு வேட்டையாடி வந்த அரசன் எய்து கொல்லவே, அக்குட்டிகள் பால் இல்லாமல் துயருற்று அழுங்குவனவாயின. இத்துயர் கண்டு உலகுக்கு எல்லாம் அம்மையப்பராகிய சோமசுந்தரக் கடவுள், கேழல் உருவத்துடன் வந்து அப்பன்றிக்குட்டிகளுக்குப் பால் கொடுத்து வளர்த்தார். அவையும் யானைக் கன்றுபோல் ஓங்கி மேட்டைப் பள்ளமாகவும் பள்ளத்தை மேடாகவும் கோட்டால் உழுது திரிந்தன.

பின்னர், திருவருளால் பன்றியாக்கையை விட்டு ஒரு வேளாண் தலைவனுக்குப் பிள்ளைகளாகப் பிறந்து ஒத்த உருவம், நிறம், அறிவு, குணம் முதலிய வாய்க்கப்பெற்று உலகத்தோர் மதிக்கும் வண்ணம் வளர்ந்தனர். இவர்களது அறிவின் மேம்பாட்டைக் கேள்வியுற்ற பாண்டியன், பன்னிருவரையும் அழைத்து, அவர்கள் ஒரே தன்மையாய் விளங்குவதைக் கண்டு மந்திரிகளாக அமர்த்தினான். அவர்களும், படிப்படியாக அரசாங்கப் பணியில் உயர்ந்து தலமெலாம் அதிசயிப்பச் சாற்றரும் பகை கடந்து சிலைபொலி தடக்கை வேந்தைத் திசை விசயஞ் செய்வித்து வரிசை புனை வன்னியராகிச் சிலகாலம் மண்மேல் வாழ்ந்து கொன்றைச் சடிலமுடியான் திருவருளால் சிவலோகம் புக்கனர். அவர்கள் வாழ்ந்த மலை பன்றிமலை என வழங்கப்பெறுகிறது.

## 31. ஏனத் தொல்எயிறு அணிந்தது

தேவர்களுக்குப் பேரிடர் இழைத்துவந்த இரணியாக்ஷன் என்னும் அசுரன் நிலமடந்தையைக் கவர்ந்து கீழுலகத்திற்குக் கொண்டுபோய் மறைத்துவைத்துவிட்டான். தேவர்கள் எல்லாம்

நடுங்கினார்கள். திருமால் பன்றி உருவம் கொண்டு மலைபோல் வளர்ந்து நொடிப் பொழுதில் பாதலத்திற் புகுந்து இரணியாக்ஷனைக் கொம்பினால் குத்திக் கொன்று, நிலமகளை மீண்டும் தன் நிலையில் நிலைக்கச் செய்தார். இந்த அருஞ்செயலால், திருமால், தானே பரம்பொருள் என்று எண்ணி அகந்தை கொண்டு நிலத்தைத் தன் கொம்புகளால் தோண்டிக் கடலை உடைத்தார். சிவபெருமான், திருமாலின் அகந்தை அகல, அவர் கொம்பு ஒன்றைப் பறித்தார்; திருமாலும் நல் நினைவு வரப்பெற்றுப் பன்றி உருவத்தைப் போக்கித் தன் மூதுருவத்தோடு சிவபெருமானை வணங்கினார். திருமாலிடமிருந்து பறித்த எயிற்றை வெற்றி அணிகலனாக மார்பில் பிறை போல் ஒளிரும் வண்ணம் அணிந்தார்.

### 32. ஏனப்பின் கானகத்தே நடந்தது

பாண்டவர் மறைந்துறையும் நாட்களில், அவர்களுள் முதல்வரான தருமர், தம் தாயத்தாருடன் போர் செய்துதான் தம் பங்கு நாட்டைப் பெறவேண்டிவரின் என் செய்வது எனக் கவலை கொண்டிருந்தபோது, இந்திரன், ஒரு முதிய அந்தணன் வடிவில் தோன்றி, அவர்களுள், அருச்சுனனை ஒத்த வீரர் உலகில் இல்லை என்றும், சிவபெருமானை நேரில் ஒருமுறை அருச்சுனன் கண்டுவிடின், தெய்வப்படைக்கலங்களைப் பெற்று, தனிவீரனாக நின்று ஒருவனாகவே துரியோதனன் கூட்டத்தையும் துணைவர்களையும் புறங்காண்பன் என்றும் அறிவுரை வழங்கினான். அருச்சுனன் இமய மலைச்சாரல் சென்று கடுந்தவம் புரிந்து சிவவழிபாடு செய்துகொண்டு இருந்தான். ஒரு நாள் சிவபூசை செய்து கொண்டிருக்கும் போது அவனைக் கொல்லவருவது போல் ஒரு பன்றி நெருங்கியது; உண்மையில், பக்தியிலும் வீரமே மிகுந்துள்ள அருச்சுனன், பூசையையும் மறந்து, வில்லை வளைத்து பன்றியை நோக்கி எய்தான். ஒரே கணையில் பன்றி விழுந்தது. ஆனால், அருச்சுனன் கணைபட்ட அதே சமயத்தில், வேறு ஒரு கணையும் அப்பன்றிமேல் விழுந்தது. அக்கணையை எய்தவன் யாவன் என்று அருச்சுனன் சினந்து நோக்க ஒரு வேடுவன் அருகில் நின்றான். இருவருக்கும், பன்றியை முதலில் எய்தவர் யார் என்பதில் விவாதம் ஏற்பட்டு விற்போரும் மற்போரும் நடந்தது. விற்போரில் வெல்லவியலாது அருச்சுனன் மற்போரில் வெல்ல எண்ணி, வேடனைத் தாளைப்பற்றி புறம்தள்ள எண்ணி இருகையாலும் தாளைப் பிடித்தான். வேடுவனைக் காணவில்லை. சிவபெருமான் உமையுடன் காட்சியளித்தார். அருச்சுனன் இறைவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி மன்னித்தருளவும், தன்னை அவன் திருவடிக்குச் சேர்ப்பிக்கவும் படைக்கலங்கள் வேண்டாம் என்றும் விழைந்தான். இறைவன் அதற்கு இசையவில்லை. மீண்டும் மீண்டும் அருச்சுனன் தனக்குப் படைக்கலங்கள் வேண்டாம் என்றும், அவன் திருவடிக்கீழ்

இருக்கவே பெரிதும் விரும்புவதாகக் குறை இரந்தான். சிவபெருமான் 'நீ படைக்கலங்கள் பெற வேண்டித்தான் தவம் இருந்தாய். அதனை இப்பொழுது பெற்றுக்கொண்டு செல்வாயாக. அடுத்த பிறவியில் உன்னை நம் திருவடியில் சேர்ப்பித்துக் கொள்வோம்' எனக்கூறிப் படைக்கலங்களைக் கொடுத்துவிட்டு மறைந்தருளினார். அருச்சுனன் அடுத்த பிறவியில் கண்ணப்ப நாயனாராகப் பிறந்து சிவன் சேவடிக்கீழ் இருந்து பேரின்ப வாழ்வு எய்தினார்.

### 33. ஐயம் புகுந்தது

முன்பு ஒரு காலத்தில், தாருகாவனத்தில், ஒரு முனிவர் கூட்டம் இருந்தது. அக்கூட்டம், தெய்வசிந்தனை ஒரு சிறிதும் இன்றி, இம்மை மறுமைப் பேறுகள் அனைத்தையும் கன்மத்தினாலேயே பெறலாம் என்ற துணிவுடன், உடல் வருந்த அளவற்ற தவங்களைச் செய்து கொண்டும் வேள்விகளைச் செய்து கொண்டும் தெய்வத்தின் அருள் இன்றியே எல்லாம் கைகூடும் என்னும் எண்ணங்களை வலியுறுத்திக் கொண்டும் வந்தது. இதனால் உலகுக்குப் பல தீமைகள் விளைவனவாயின. தெய்வத் திருவருள் இல்லாமல் எச்செயலும் நிலைபெற்று ஓங்காது என்பதை அம்முனிவர் கூட்டம் உணர்ந்து நலனடையவேண்டி, சிவபெருமான், அழகிற் சிறந்த சிறுவயது ஆடவன் போன்று உருக்கொண்டு (பிட்சாடனர்) ஆடையின்றி அவ்வனத்துள் நுழைந்து முனிவர் மனைவியர் இருக்கும் பகுதியுள் சென்று இனிய இசையைப் பாடிக்கொண்டு ஐயம் ஏற்கத் தொடங்கினார். ஒப்பற்ற ஆடவன் அழகில் தம் சிந்தையைப் பறிகொடுத்து நிறை அழிந்த அம்முனிவர் மனைவியர், பிக்ஷாடனமூர்த்தி (ஐயம் ஏற்கும் கோலம்) யாகிய சிவபெருமானைத் தொடர்ந்து சென்று காமமயக்கம் கொண்டு கருவுற்று நாற்பத்தெண்ணாயிரம் புதல்வர்களைப் பெற்றனர். இவ்வாறே கண்டார் மயங்கும் பெண்ணுருவமாகிய மோகினி வடிவுடன் திருமால், முனிவர்களது இருக்கை நோக்கிச் செல்ல, அம்முனிவர்கள் காமவேட்கை மிகுந்து, தவவலி குன்றி, தங்கள் தங்கள் கன்மங்களை விடுத்து, விளக்கில் விழும் விட்டில்கள் போன்று மோகினியைச் சூழ்ந்து கொண்டு பல பலவாறு பிதற்றிக் காமத்தீயால் வெதும்பினார்கள். சிவபெருமானும் திருமாலும் மறைந்தவுடன், முனிவர்கள், தாங்களும் தங்கள் மனைவியரும் தவ வலிமையையும் கற்பு நிலையையும் கைவிட்டு மிக்க இழிந்த நிலையை அடைந்ததைக் கண்டு நாணமும் சீற்றமுங் கொண்டுத் தீயகொள்கையையே பின்பற்றி, தங்களுக்கு இழிவு உண்டாக்கிய சிவபெருமானை அழித்து விடுவதாக அறியாமையால் ஆணவம் கொண்டு, பிறர்க்குத் தீங்கிழைக்கும் வேள்வியாகிய அபிசார ஹோமம் ஒன்றைச் செய்தார்கள். அந்த வேள்விக் குண்டத்திலிருந்து வலிமை மிக்க கொடிய புலி ஒன்று இடிபோல் முழங்கிக்கொண்டு எழுந்தது. முனிவர்கள்

அப்புலியை, சிவபெருமானைக் கொல்லுமாறு ஏவினார்கள். புலி யாவரும் நடுங்குமாறு சிவபெருமான் முன் சென்று முழங்கியது. சிவபெருமான், அப்புலியைப் பிடித்து அதன் தோலை உரித்து, ஆடையாக அணிந்து கொண்டார். பின்னர் மான் ஒன்று தோன்றிச் சிவபெருமான் திருமுன் சென்றது, அதனைத் தன் இடதுகையில் ஏந்திக் கொண்டார். பின்னர், அவ்வேள்வித் தீயினின்றும் எழுந்த, பாம்பு, பூதப்படை, வெண்தலை, உடுக்கை முதலியவையெல்லாம் சிவபெருமான் திருமுன் சென்றவுடனேயே ஆற்றல் அழிந்தவைகளாய் அவன் திருவருள் பெற்று, அணியாய், ஆளாய், கருவியாய் அடைக்கலம் புகுந்தன. இவைகளால் தாங்கள் எண்ணிய தீச்செயல் இயலாமையைக் கண்ட தாருகாவன முனிவர்கள், இறுதியாகத் தோன்றிய முயலகன் என்னும் ஒரு பூதத்தையும் வேள்வித் தீயையும் ஏவினார்கள். சிவபெருமான் வேள்வித்தீயை ஒரு கையில் ஏந்திக்கொண்டு முயலகனைத் திருவடியால் கீழே தள்ளி அவன் முதுகின்மேல் திருவடியை ஊன்றிக்கொண்டு நடனம் ஆடினார். உலகங்கள் எல்லாம் நடுங்கின. தாருகாவனத்து முனிவர்கள் நடுநடுங்கி வீழ்ந்தார்கள். திருமால், நான்முகன், இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் நடனத்தைக் கண்டு மகிழ்ந்தார்கள். உலகமும் உயிர்களும் நடுங்கி அயர்வதைக் கண்ட சிவபெருமான், நடனத்தை நிறுத்தித் தன்னை வணங்கிய தேவர்களுக்கெல்லாம் ஆனந்தம் அருளி, தாம் செய்த குற்றத்தை உணர்ந்து பொறுத்தருளுமாறு வேண்டிய தாருகாவன முனிவர்களுக்கும் சிவஞானம் கைவரத் திருவருள் செய்தார்.

### 34. ஐயாறு அதனில் சைவனாகியது

திருவையாறு என்னும் திருப்பதியில் கோயில் கொண்டருளும் அறம் வளர்த்த நாயகியுடன் கூடிய ஐயாறப்பரை ஆகமப்படி வழிபாடு செய்து வரும் ஆதிசைவர்களில் ஒருவர், கங்கை நீராடிக் காசியம்பதியில் கோயில்கொண்டருளும் சிவபெருமானை வணங்கச் சென்றிருந்தார். பல ஆண்டுகளாகியும் அவர் திரும்பவில்லை. இதுகண்ட மற்ற ஆதிசைவர்கள், அவருடைய காணி, முறை, முதலிய உரிமைகளைத் தங்களுக்குள் பகுத்துக் கொண்டு, அவருடைய இல்லத்தார் வருவாயின்றி வாட்டமுறச் செய்தனர். வாட்டமுற்ற அந்த ஆதிசைவருடைய மனைவியார், உற்றார் இலார்க்கு உறுதுணையாகும் ஐயாறப்பனுடைய பொற்றாளை வணங்கி முறையிட்டார். அற்றார்க்கும் அலந்தார்க்கும் அடைக்கலம் ஆகிய ஐயாறன், கங்கை நீராடச் சென்ற ஆதிசைவருடைய தோற்றத்தில் தோன்றி, அந்த ஆதிசைவருடைய காணி, முறை, முதலிய உரிமைகளை மறுமுறையும் பெற்றுத்தானே தன் திருவுருவத்துக்கு வழிபாடியற்றினர். இந்த நிலையில் கங்கையாடச் சென்றிருந்த ஆதிசைவர் தம் ஊர் திரும்பினார்; தன் நிலையில் வேறு

ஒருவர் வழிபாடு செய்துவருவதைக் கண்டு அச்சைவர் தானே என்பதை, மற்ற ஆதிசைவர்களிடம் விளங்கக் கூறினார். பின்னர், ஒரே தோற்றத்தில் வந்துள்ள இரு ஆதிசைவர்களும், தங்களுள் உண்மையான உரிமையுடைய ஆதிசைவர் யாவர் என்பதை மெய்ப்பிப்பதற்காகத் திருக்கோயிலுள் புகுந்து, சிவபெருமான் திருவுருவத்தின் முன்பு வரும்போது, ஆதிசைவராக வந்த சிவபெருமான், திருவுருவத்தில் மறைந்தனர். இந்த அருட்காட்சியினைக் கண்ட ஆதிசைவர்களும் அடியவர்களும், சிவபெருமான் திருவருளைப் போற்றிப் புகழ்ந்து வணங்கினார்கள்.

35. ஓரியூரில் பாலனாகியது

முன்பு ஒரு காலத்தில், பாண்டிய நாட்டிலுள்ள பெருங்கிராமம் என்னும் ஊரில், குலத்தாலும் ஒழுக்கத்தாலும் மிக்க சிவமறையோன் ஒருவன், தன் அருமை மகளாகிய கௌரியை, வேதம்வல்ல ஆலவாய் அண்ணலை ஒத்த அழகமைந்த பிரமசாரி ஒருவனைத் தேடித் திருமணம் செய்து கொடுக்க எண்ணியிருந்தான்; அப்போது அவன் இல்லத்தில் பிச்சை கொள்ள வந்த ஒரு பாகவத பிரமசாரியின் தோற்றத்திலும் வேதநூற் பயிற்சியிலும், பிரமசரிய நெறியிலும் மனம் மகிழ்ந்து, தன் மகளை அவனுக்கு, தந்திர நூன்மறைவிதியில் மணஞ்செய்து சடங்கு முடித்து இனிய பல நல்கி வழி அனுப்பினான். பிரமசாரியாக பரதேசம் போன பிள்ளை அணிபொலிய மணம் செய்து மாதினொடும் ஊர் வரக்கண்ட உற்றார் உறவினர் எல்லாம் அவன் பெற்றோரைப் புகழ்ந்து மகிழ்ந்தார்கள். ஆனால், மணமகனின் தாய், தனக்கு மருகியாக வாய்த்தவள் சைவன் மகள் என்பது கண்டு மனம் கொதித்தாள். மணம் செய்துகொண்டு வந்த இளையோனும், கௌரிபால் மனம் செல்லாமல் இளமையைக் கழித்தான். தான் புகுந்த அகத்தில் பாகவதர்களே அளவிறந்து புசிக்க, நீறு பூசியவர் ஒருவரேனும் வராதது கண்ட கௌரி வருந்தினாள். ஒருநாள் கௌரியின் மாமன் மாமி முதலியோர் வேற்றூருக்குச் சென்றிருந்தனர். அப்போது, வயது முதிர்ந்த வேதியர் ஒருவர் சைவத் திருக்கோலத்துடன் தள்ளாடி நடந்து கௌரியின் இல்லத்தில் பிச்சை கேட்டார். வேற்றூர் சென்ற மாமி அறைக்கதவுகளை எல்லாம் அடைத்துப் பூட்டியிருந்த படியால் ஒன்றும் செய்யவியலாது வருந்தினாள். "அடிகாள் என் செய்வேன் அமுதுபடி புறம்பில்லையே, அறைகள் எல்லாம் அடைத்துள்ளனவே" எனக் கலங்கிக் கூறினாள். விருத்த வேதியர் "அணங்கே என் பசி பெரிது, நீ அறையின் அருகே செல்வாயேல் கதவம் தானே திறக்கும்" எனக் கூறினார். அவ்வாறே கதவம் திறக்க, வேண்டிய எடுத்து விருப்புடை அடிசில் அமைத்து முதிய அந்தணர்க்குப் படைத்தாள். விருந்து உண்ட பின் விருத்த வேதியன் இளங்குமரனாகத் தோன்றினான். இவ்வமயம், வேற்றூர் சென்றிருந்த மாமன் மாமியர் வீட்டுக்குள் நுழைந்தனர். இளங்குமரன் ஒரு பாலகன் உருவம்

கொண்டான். இளங்குழந்தை தன் இல்லத்தில் தவழுவதைக் கண்ட மாமி வெகுண்டு "பிறர் குழந்தையை நீ ஏன் சீராட்டிக் காப்பாற்றுகின்றாய்" எனக் கடுமொழிக் கூறி, பாலகனையும் கௌரியையும் தன் வீட்டை விட்டு வெருட்டினாள். குழந்தையும் கௌரியும் மறைந்தனர். அனைவரும் காண விண்ணில் சிவபெருமானும் உமையம்மையும் தோன்றினர். இது நிகழ்ந்த இடம் ஓரியூர் என எண்ண வேண்டியிருக்கிறது.

### 36. ஓவிய மங்கையர் தோள் புணர்ந்தது

14–ஆவது கதையைப் பார்க்க, 'இருங்கடல் வாணற்குத் தீயிற்றோன்றும் ஓவிய மங்கையர்' என்பதனால், கடல்அரசனாகிய செம்படவனுக்கு மகளாகத் தோன்றிய உமையம்மையே எழுது பாவையொத்த எழிலுடையார் என்னுங் கருத்துப்பெற ஓவிய மங்கையர் எனக் குறிப்பிடப் பெற்றுள்ளதாகக் கருதுகின்றனர்.

### 37. கங்காளம் தாங்கியது

தோன்றியவை எல்லாம் அழிந்து சிவபெருமான் ஒருவரே தனித்து நிற்கும் இறுதிக் காலத்தில், படைத்தற் கடவுளும் காத்தற் கடவுளுமாகிய அயன் மால் இருவருடைய தவத்தின் பயனாக அவர்களுடைய எலும்புக் கூடு, சாம்பல், சிகை, தலை முதலியவற்றை அணிந்து அருள் செய்வார்.

"பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும் போய்
இருங்கடல் மூடி இறக்கும்; இறந்தான் களேபரமும்,
கருங்கடல் வண்ணன் களேபரமும் கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீள நின்று எம் இறை நல்வீணை வாசிக்குமே"

(தேவாரம் 5214)

### 38. கங்கையைத் தாங்கியது

1. கங்கை, இமவானுடைய மூத்த மகளும், உமை, இளைய மகளும் ஆவர். கங்கை, வானுலகத்தில் பரந்து, விரைந்து, ஆழ்ந்து பேராழிபோல் சுழன்று கொண்டிருந்தது; இதன் வேகத்தை ஒடுக்கிச் சிவபெருமான் தன் சடையில் கரந்தனர்.

2. ஒரு காலத்தில் விளையாட்டாக, சிவபெருமானுடைய திருக்கண்களை உமையம்மையார் மூடினார், அப்போது அம்மையின் கைவிரல்களில் தோன்றிய வியர்வை, கடல்போலப் பெருகிப் பத்துப் பேராறுகளாக (கங்கைகள்) எல்லா உலகங்களிலும் பரவியது. யாவரும் அஞ்சி முறையிடவே, சிவபெருமான் அதன் பெருக்கை அடக்கிச் சடையில் அணிந்தார்.
3. தன் முன்னோர்கள் நற்கதியடையும் வண்ணம், அவர்களது என்பினைக் கங்கையில் தோய்க்க வேண்டி, அவ் வான் ஆற்றினை நிலவுலகுக்குக் கொண்டு வரக் கடுந்தவம் இயற்றிய பகீரதனது தவத்துக்கு இரங்கிச் சிவபெருமான் தன் சடையில் கங்கையைத் தாங்கி அதன் வேகத்தை அடக்கி நிலவுலகிற்கு அளித்தார்.

'பாயிருங் கங்கையாளைப் படர் சடை வைப்பர் போலும்'

(தேவாரம் 4696)

'பாரகம் விளங்கிய பகீரதன் அருந்தவம் முயன்ற பணிகண்டு
ஆரருள் புரிந்து அலைகொள் கங்கை சடை ஏற்ற அரன்'

(தேவாரம் 3542)

'பாங்குடைத் தவத்துப் பகீரதற்கு அருளிப் படர் சடைக் கரந்த நீர்க் கங்கை
தாங்குதல் தவிர்த்துத் தராதலத்து இழித்த தத்துவன் உறை இடம்'

(தேவாரம் 4113)

## 39. கடலில் வலைவாணன்

14–ஆவது கதையைப் பார்க்க.

## 40. கண்ணப்பர்

திருக்காளத்தியைச் சூழ்ந்த பகுதி பொத்தப்பி நாடெனப்படும். அந்நாட்டுள் உடுப்பூர் என்றதோர் ஊருண்டு. அவ்வூருள், குற்றமே குணமாகக் கொண்டு வாழும் வேடர் தலைவன் நாகன் என்பான், தத்தையென்பாளை மணந்து மனையறம் நடத்திவந்தான். இவ்வாறு மனையறம் நடத்தி வருகின்ற காலத்துத் தங்களுக்கு மகப்பேறு இல்லாதது கண்டு வருந்தி முருகவேளை வழிபட்டுத் தவம் இயற்றி ஓர் ஆண் மகவைப் பெற்றனர். அம்மகவு உடற்கட்டு வாய்ந்து திண்ணென்றிருந்தமையால் திண்ணன் என்று பெயரிட்டனர். புண்ணியப் பொருளாயுள்ள ஒப்பற்ற உருவுடையிவரைக் கண்ணிமை காப்பது போல் காத்து வளர்த்து வருவாராயினர். வேடர்

குடிக்கேற்ற முறையில் உரிய பருவத்தே இவர்க்கு விற்பயிற்சி செய்து வில்விழா எடுத்துச் சிறப்புச் செய்தார்கள். ஆண்டுகள் பன்னிரண்டு நிரம்பின. தந்தை நாகனார்க்கும் மூப்புவந்தெய்தியது.

இந்நிலையில், வன விலங்குகள் பயிர்களை அழிக்கின்றன, அவற்றைத் தொலைக்க வேண்டுமென்று நாகன்பால்வேடர்கள் வந்து முறையிட்டனர்; நாகன், "முன்போல் என்னால் வேட்டமேற்சேறல் இயலாது மூப்பு வந்தெய்தியது; ஆதலால் என்மகனை நுங்கட்குத் தலைவனாகக் கொள்மின்" என்றான். அவர்களும் அங்ஙனமே திண்ணனைத் தலைவனாக ஏற்றனர். பின்னர் தேவராட்டியை அழைத்துக் கன்னி வேட்டைக்குச் செல்லும் திண்ணனார்க்கு ஆசிகூறச் செய்தனர். அவளும் "நல்ல குறிகள் தோன்றுகின்றன. நின்னளவிலும் மேம்பட்டு வாழ்வான்" என்று வாழ்த்திச் சென்றாள்.

தெய்வம் வாழ்த்திச் சென்றபின், தாதை மகனை அருகழைத்துத் தன்னிலை கூறி "நீ வேட்டமேற் சென்று வெற்றி பெற்றுவருக" என வாழ்த்தினான். சுரிகை உடைதோல் இவற்றைக் கொடுத்தான். தந்தை நிலைகண்டு திண்ணனார் சுரிகை, உடைத்தோல் இவைகளைத் தான் ஏற்றுக்கொண்டார். வேட்டைக்குரிய வேடம் தாங்கினார். அரியேறன்ன திண்ணனார், தந்தை தாள் பணிந்து வெளிப்போந்து வேடரோடு சேர்ந்து புறப்பட்டார். வேட்டை நாய்கள் சூழ்ந்தன. கொற்றவை வில்லின் மேனின்றாள். வெற்றிக்குக் குறையே இல்லை. வேடர்கள் சூழக் காடு சென்று புதர்ப் பகுதிகளை வலையால் வளைத்துக்கட்டி, புதர்களில் மறைந்த விலங்குகளை நாய்களைக் கொண்டு உசுப்பினர். வெளி ஏறியவற்றைக் கொன்றனர். கொன்றாராயினும், அவர்கள் அறவேட்டையே ஆடினர். எவ்வாறெனின்; யானைக்கன்றுகள், வேறு சில இளங்கன்றுகள், குட்டிகள், அடிதளர்ந்து செல்லும் கருவுற்ற பெண் விலங்குகள் இவற்றைக் கொலைபுரியார்; ஆதலால், இவர்கள் வேட்டையில் அறம் எவ்வளவுதூரம் நிலைபெற்றது என்பதனை அறியலாம்.

இவ்வாறு வேட்டையாடி வருகையில் மிகப் பெரிய பன்றி ஒன்றினைக் கண்ணுற்று, அதை வேட்டையாடுவதற்கு அதனை நோக்கி ஓடினார்கள் வேடுவர்கள். பன்றியும் ஓட ஆரம்பித்தது. திண்ணன், நாணன், காடன் ஆகிய மூவரும் வெகு வேகமாகப் பன்றியைப் பின்தொடர்ந்து ஓடினார்கள். மற்ற வேடர்கள் பின்தங்கிய பின்னரும், இம்மூவரும் நெடுந்தூரம் ஓடி, இறுதியாக திண்ணனார் அம்பினால் அந்தப் பன்றிக் கீழே விழுந்து சாய்ந்தது.

இவ்வாறு நீண்ட வழிச் சென்றதன் பின், "வேட்டமேல் நீண்ட தொலை வந்துவிட்டோம். அதனால் இளைத்தோம், பசிவந்துற்றது. நீ தொலைத்த பன்றித் தசையைக் காய்ச்சித்தின்று வேட்டமேற் சொல்வோம்" என்றான் நாணன். திண்ணனார் 'முதலில் நமது நீர்வேட்கையைத் தணிப்போம். நீர் எங்குள்ளது ?' என்றான். 'இம்மலைக்கப்பால் பொன்முகலி என்று ஓர் நதி உண்டு. அங்கு போகலாம்' என நாணன்கூற மூவரும் நதிக்கரை சென்று தங்கள் தாகத்தைத் தணித்தனர். அப்பொழுது மணி ஓசை ஒன்று கேட்டது. திண்ணனார் மணியோசையின் விபரம் பற்றிக் கேட்க, நாணன் 'மலை உச்சியில் குடுமித் தேவர் ஆலயம் உள்ளது. உன் தந்தையுடன் நான் அங்கு சென்றதுண்டு' எனக் கூறினான். அப்படியானால் நாமும் அங்கு சென்று கும்பிட்டு வருவோம் என்று திண்ணன் சொல்ல நாணனும் சம்மதித்தான். பின்னர், காடனைப் பார்த்துத் திண்ணன், 'நாங்கள் இருவரும் குடுமித்தேவரைக் கும்பிட்டுத் திரும்பும்முன் நீ தீக்கடைக்கோலால் தீ உண்டுபண்ணி வேட்டையாடிக் கொணர்ந்த பன்றியின் தசையைப் பக்குவமாகச் சுட்டு வை' எனக் கூறிவிட்டு நாணனுடன் மலைமேல் ஏறிச் சென்றான். மலைமீது ஏறும்பொழுதே திண்ணனார்க்கு பல நல்ல சகுனங்கள் தோன்றின. உடம்பில் இருந்தும் உள்ளத்தில் இருந்தும் பாரங்கள் குறைந்து வருவதை உணர்ந்தான். முன் செய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட, நாணனும் அன்பும் முந்தத் தான் பின் சென்றார். சென்றவர், மலைமேல் குடுமித்தேவரைக் (காளத்தியப்பர் என்ற சிவலிங்கம்) கண்டார்; தழுவினார்; பெருமூச்செறிந்தார்; மயிர்க் கூச்செறிந்தன. கைச்சிலை விழுவதோராது, "இங்கு இவ்விடத்தைப் பூவோடு பச்சிலை பறித்திட்டு நீர் வார்த்தார் யாவரோ ?" என்றார். அருகிருந்த நாணன் "ஒரு சிவாச்சாரியார் இவ்வாறு செய்து வருகின்றார்" என்றான். குடுமித் தேவர் தனியாக இருப்பதாக எண்ணினார். "ஊன் இடுவாரில்லை, யானே சென்று கொணர்வேன்" என்று சென்றார். சென்றவர், முன் குறித்த இடத்துச் சென்றார். காடன் என்பார் "நுங்கள் குறிப்பின்படி இறைச்சியைப் பக்குவப்படுத்தினேன். தேவர் தாழ்த்ததென்" என்றான். உடனே நாணன் "திண்ணனார் மலையில் தேவரை அணைத்துக்கொண்டு தேவர்க்கு ஆட்பட்டார், அவர் தின்ன இறைச்சி கொணர வந்துள்ளார்" என்றான். கேட்ட காடன் "என் செய்தாய் திண்ணா ? நீ தான் மால் கொண்டாய்; ஏன் ?" என்றான். அவன் கூறியதனைச் செவியேற்காமல், கோலில் இறைச்சி கோத்துக் காய்ச்சியதை வாயிலிட்டு அதுக்கிப் பார்த்துப் பக்குவப்பட்டவற்றை இலையில் வைத்தெடுத்துக் கொண்டார். மருங்கு நின்ற வேடர் இவர் கடவுள் மயக்குற்றார் திருத்த இயலாதென்று கைவிட்டுப் போயினார்.

கானவர் போனபின், பக்குவப்படுத்தப்பட்ட ஊனைக் கையில் ஏந்தி, திருமஞ்சனமாட்ட ஆற்று நீரை வாயில் முகந்து, பூக்களைப் பறித்துத் தலைமேலிட்டுக் கொண்டு குடுமித் தேவர்க்கு மிகப் பசியுண்டாயிருக்கும் என்று விரைந்தார். விரைந்து வந்தவர் இறைவன் முடி மீதுள்ள மலரைச் செருப்புக் காலால் தள்ளி வாயினீரால் மஞ்சனமாட்டி மலரை முடிமேலிட்டார். தான் கொண்டு வந்த இறைச்சி உணவு செய்யப்பெற்ற முறையெல்லாம் சொல்லி இறைவன் முன் படைத்து "அமுது செய்தருள்க" என்றார். இந்நிலையில் பொழுது சாய்ந்தது. மலைமேல் குடுமித்தேவர்க்கு என்ன தீங்கு நேரிடுமோ என்று வில்லை யூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் இரவு முழுதும் காத்து நின்றார். நின்றவர், மறுநாள், உணவுக்காக வேண்டிய இறைச்சி கொணரச் சென்றார்.

இப்பால், நாள்தோறும் வழிபாடு செய்யும் சிவகோசரியார் என்னும் சிவாச்சாரியார் அங்கு வந்தார். இறைச்சி முதலியன சிதறிக் கிடப்பதனைக் கண்டார். யார் இது செய்தார் என்று வருந்தினார். பின் திருவலகால் அவற்றை மாற்றினார். நீராடித் தூய பொருள்கொண்டு பூசனை முடித்து வீடு திரும்பினார்.

அவர் சென்ற பின், திண்ணனார் நல்லிறைச்சிகளை முன்போல் பக்குவப்படுத்தி இலையில் கொணர்ந்தார். கொணர்ந்தவர், மாற்றான் செய்து சென்ற பூசனையை முன்பு போல் அகற்றினார். வழிபாடு செய்தார். "இவ்வூன் முன்னைய வூனின் நன்று, அமுது செய்தருள்க" எனப் படைத்தார். இவ்வாறே பூசனை முடித்து வந்தார். இப்பால் திண்ணனாரைக் காட்டுள் விட்டுப் போன வேடர்கள் நாகனிடம் செய்தி அறிவித்தனர். பிறகு வேடர்கள் திண்ணனாரிடம் வந்து நாகன் செய்தி அறிவித்து அவரை அழைத்துச் செல்ல முயன்றனர். பக்குவப்பட்ட ஆன்மாவாதலால், வாரார் எனக் கைவிட்டுச் சென்றார்கள். இறைவன் அருள் நோக்கால் இரும்பு பொன்னானாற் போல இருவினையும் மும்மலமும் அற்று அன்புப் பிழம்பானார்.

அந்நிலையில் சிவகோசரியார் பூசனை செய்து முடித்த பின்பு 'இறைவா! இது செய்தார் யாரோ? அறியேன். நீயே அதனைப் போக்கி அருள வேண்டும்' என்று வேண்டினார். அன்றிரவு அவர் கனவில் இறைவன் தோன்றி, "இதனைச் செய்பவன் வேடுவனென்று நினையேல். அவன் வடிவெல்லாம் நம் பக்கல் அன்பு; அவன் அறிவு நம்மை அறியும் அறிவு; செயலெல்லாம் நமக்கு இனியவாம் என்பவற்றை நீ அறிவாய்; ஆதலால் நினக்கு அவன் செயல் காட்டுகின்றேன், நீ ஒளித்திருந்தறி, மனக்கவலை யொழி" என்றான். சிவகோசரியார், கனவு நீங்கி மறுநாள் வந்து வழக்கம்போல வழிபாடு இயற்றி ஒருபால் மறைந்து நின்றார்.

இவ்வாறு வழிபாடியற்றிவரும் ஆறாம் நாள்; திண்ணனார் வேட்டையாடி வழக்கம்போல் பக்குவப்படுத்திய உணவோடு விரைந்து செல்வாராயினார். வழியில் தீயசகுனங்கள் நிகழ்ந்தன. கண்டவர், இறைவனுக்கு என்ன நேர்ந்ததோ? என்று புழுங்கிய மனத்தோடு அடைந்தார். அடைந்தவர் முன் காளத்தி அண்ணலார் திண்ணனார்க்குப் பரிவுகாட்ட ஒரு கண்ணில் குருதிப்பெருக இருந்தனர். வந்தவர், குருதிகண்டார், நடுங்கினார், கைப்பொருள்கள் சிதறின, பூமியில் விழுந்தார். எழுந்து இது செய்தார் யார்? என்று வில்லுங் கையுமாகத் திரிந்தார். பகைவர் எவரையும் காணவில்லை. அண்ணலாரை நெருங்கி "ஐயகோ இந்நோய் எதனால் தீருமோ" என ஏங்கினார். பச்சிலை கொணர்ந்து பிழிந்து கண்ணில் விட்டார்; புண்ணீர் குறையவில்லை. ஊனுக்கு ஊனிடல் என்ற உரையை உணர்ந்தார், மகிழ்ச்சி பொங்கியது, தன் கையம்பால் தன் கண்ணைப் பெயர்த்தெடுப்பேன் என்று தம் இடக்கண்ணை அம்பால் பெயர்த்து வலக் கண்ணில் அப்பினார். குருதிநின்றது கண்டார், மகிழ்ந்தார், குதித்தார்; இறைவன் செயல் அவ்வளவோடு இல்லை. அன்பின் அளவைக்காட்ட இடக்கண்ணில் குருதிபெருகச் செய்தார். அது கண்ட திண்ணனார், "இதற்கஞ்சேன். மருந்து கைகண்டேன் குருதி ஒழிப்பேன்" என்று தம் இடக்காலை இறைவன் கண்ணிலூன்றித் தம் வலக் கண்ணில் அம்பை யூன்றினார். அவ்வளவில், அது பொறாத காளத்தி நாதர் பெயர்க்கும் திண்ணனார் கையைப் பிடித்து, "நில்லு கண்ணப்ப; நில்லு கண்ணப்ப; என் அன்புடைத் தோன்றல்; நில்லு கண்ணப்ப" என்று மும்முறை வானில் குரல் எழுந்தது. இச்செயலை மறைந்திருந்த முனிவர் கண்டார். இறைவன் தன் கையால் பிடித்து "என் வலப் பக்கத்திருப்பாய்" என்று அருள் புரிந்தான். இதிலிருந்து திண்ணனார்க்குக் கண்ணப்பர் என்று பெயராயிற்று. மணிவாசகர் கண்ணப்பர் அன்பைச் சிறப்பித்துக் "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்" எனப் போற்றுகின்றார்.

**41. கதிரோன் பல் தகர்த்தது**

60–ஆவது கதையைப் பார்க்க.

**42. கருங்குருவிக்கு அருளியது**

பறவைகளில் வலிமையற்றதாக, கருங்குருவி, காக்கைக்கு அஞ்சி மரம் செறிந்த ஒரு காட்டில் வாழ்ந்து வந்தது. காக்கைகளால் பலகாலும் தாக்கப்பெற்றுக் குருதி வடிகின்ற தலையுடன் செய்வதறியாது திகைத்து இடருற்று நின்ற நிலையில் வழிப்போக்கர் ஒருவரால், மதுரையிற் கோயில்

கொண்டெழுந்தருளியுள்ள சோமசுந்தரக் கடவுளது அருளால் எவ்வகைப் பகையையும் வெல்லலாம் என்பது தெரிந்து சொக்கனை இடைவிடாது வணங்கி அவன் அருளால் 'மிருத்திஞ்சய' மந்திரத்தை உபதேசிக்கப் பெற்று, அந்த மூவெழுத்து மறைமொழியின் வன்மையால் எல்லாப் பகையையும் வென்று வலியன் என்னும் பெயர் பெற்றது. இந்த அரிய மந்திரத்தைத் தன் சாதிக்கெல்லாம் உபதேசித்துத் தன் இனத்தை வலிமையுடையதாகவும் சிவபெருமான் திருவடிக்குத் தொண்டு பூண்பதாகவும் செய்தது.

### 43. கழுமலம் அதனில் காட்சி கொடுத்தது

கழுமலம் என்ற பெயர் சீகாழிக்கு உண்டு; வேறு இப்பெயர் பொண்ட பழம்பதிகளும் இருக்கக்கூடும். கழுமங்கலம் என இப்போது சில ஊர்கள் வழங்கப்பெருகின்றன, ஒருக்கால் கழுமலம் என்பதே மருவி வழங்கப்பெறுகிறதா என்பதும் கருதத்தக்கது. கழுமலம் என்பதை, சீகாழி எனக் கொள்ளின் சைவ சமய முதல்வர் மூவருள் முதலாமவராகிய திருஞானசம்பந்தப் பெருமானுக்கு, காழிப்பதியில் சிவபெருமான் அம்மையப்பராகக் காட்சியருளி ஞானப்பால் ஊட்டிய நிகழ்ச்சியே முற்பட நினைவுக்கு வருகின்றது.

சோழநாட்டின் பழைய ஊர்களில் ஒன்றாகிய சீகாழியில், வேத நெறி தழைத்து ஓங்குதற்குக் காரணமாகிய ஆகமத்துறை வழியே வாழ்ந்துவந்த அந்தணமரபில் கவுணியர் குடியில் சிவபாத இருதயருக்கும் பகவதி அம்மையாருக்கும் திருக்குமரனாகத் திருஞான சம்பந்தப் பிள்ளையார் தோன்றினார். இவர் மூன்றுவயதுள்ள குழந்தையாக இருக்கும்போது, ஒருநாள், தன் தந்தையாரோடு திருக்குளத்துக்குச் செல்லவேண்டும் என்று பிடிவாதம் செய்ய, தந்தையார் உடன் அழைத்துச் சென்று, குழந்தையைத் திருக்குளத்தின் கரையில் உட்காரவைத்துவிட்டு, குளத்தில் இறங்கிச் சைவ மறைமொழிகளை ஓதிக்கொண்டு (அகமர்ஷண மந்திரம்) தண்ணீருள் முழுகி நீராடுவாராயினார்; தமது தந்தையைக் காணாத குழந்தை பல திசைகளிலும் பார்த்து அழுது கடைசியாகத் திருத்தோணியப்பர் கோயில் விமானத்தைப் பார்த்து "அம்மே அப்பா" என அழத் தொடங்கியது. உடனே தோணியப்பர் உமையுடன் இடப வாகனத்தில் ஏறி, அழுகின்ற குழந்தைமுன் தோன்றினார்; உமையம்மை ஒரு பொற் கிண்ணத்திற் சிவஞானப்பாலை அழுகின்ற குழந்தைக்கு ஊட்டியருளினார். ஞானப்பாலை உண்ட தெய்வக்குழந்தை 'சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம், உவமையிலாக் கலைஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம்' எனும் ஞானம் அனைத்தையும் பெற்றுத்

திருஞானசம்பந்தனாகத் திகழ்ந்தது. நீராடிவந்த தந்தை, பால்வடியும் உதடுகளுடன் குளக்கரையில் உட்காா்ந்திருக்கும் குழந்தையைப் பாா்த்து "யாா் கொடுத்த பாலை நீ அருந்தினை? பிறா் கொடுத்ததை அருந்தலாமா? பால் கொடுத்தவா் யாவா்?" என வெகுண்டு வினவினாா். உடனே ஞானசம்பந்தப் பிள்ளையாா் கோயிலின் விமானத்தைச் சுட்டிக் காட்டி அங்கு காட்சியளித்த சிவபெருமான் தோற்றத்தைத் தந்தையாா் உணரும் வண்ணம், "எனக்குப் பால்கொடுத்தவன்

"தோடுடைய செவியன் விடையேறி ஓா்தூவெண் மதிசூடி
காடுடைய சுடலைப்பொடி பூசி என் உள்ளம் கவா்கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்து ஏத்த அருள் செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் அன்றே!"

எனக் கூறினாா். தந்தையாா் பேரானந்தம் உற்றாா். இந்த நிகழ்ச்சியை ஞானசம்பந்தப் பெருமானாரே,

"போதையாா் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
தாதையாா் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையாா் குழையினன் கழுமல வளநகா்ப்
பேதையாளவளொடும் பெருந்தகை யிருந்ததே"

(தேவாரம் 3053)

எனத் திருவாய் மலா்ந்துள்ளாா்.

## 44. கன்றால் விள வெறிந்தது

மிகப் பழங்காலத்தில், வட மதுரையில் கம்சன் என்ற ஒரு கொடுங்கோலன் அரசு செலுத்தி வந்தான். அவனுக்குத் தேவகி என்ற ஒரு தங்கை உண்டு. அவளை வசுதேவா் என்ற பெரியாா் மணந்து கொண்டு இல்லறம் நடத்தி வந்தாா். இல்லறக் கிழமை பூண்ட தேவகி அம்மையாா்க்குக் குழந்தைகள் பிறந்தன. "நின் தங்கைக்குப் பிறக்கின்ற குழந்தையால் நினக்கு முடிவேற்படும்" என்று கணிதமாக்கள் கம்சனுக்குக் கூறியிருந்தனா். ஆதலால் அவன் தன் தங்கைக்குப் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையையும் கொண்டுவரச் செய்து வெட்டி விடுவது வழக்கமாக இருந்தது. இக்கொடுஞ் செயலைப் பொறுக்காத தாய் தந்தையா் துன்பக் கடலுள் மூழ்கி இருந்தாா்கள் என்பது சொல்ல வேண்டுவதின்று.

இந்நிலையில் ஏழாவது கருவுற்றாள் தேவகி. அது கண்ட கம்சன் இருவரையும் சிறையிலிட்டான். திருவருள் வேறாயிற்று. இவளுற்ற கருவை ஆய்ப்பாடி அசோதை வயிற்றிலிட்டான் இறைவன்; மறுபடியும் எட்டாவதாகக் கருவுற்றாள் தேவகி. அங்கு ஆய்ப்பாடியில் அசோதைக்குப் பலராமனும் ஒரு மாயைப் பெண்ணும் பிறந்தனர்; இங்கு, அந்நேரத்தில் தேவகி வயிற்றில் கண்ணன் பிறந்தான். பிறந்த குழந்தையை வசுதேவர் தளைகளைந்து இரவில் ஆய்ப்பாடிக்கு எடுத்துச்சென்றார். சென்றவர் தங் குழந்தையாகிய கண்ணனை அங்கு விட்டுவிட்டு மாயைப் பெண் குழந்தையை அங்கு நின்றும் எடுத்து வந்து தேவகியிடம் விட்டார். இவ்வளவும் இரவில் நிகழ்ந்தது. பொழுது புலர்ந்தது; அறிந்தான் செய்தி கம்சன்; குழந்தையை எடுத்து வரச் செய்தான்; வழக்கம் போல் வானில் விட்டெறிந்து வெட்டச் செய்தான். விட்டெறியப்பட்ட குழந்தை "நின்னைக் கொல்பவன் ஆய்ப்பாடியில் சென்று வளர்கின்றான்; என்னைக் கொல்ல நீ யார் ?" என்று கூறி மாயமாய் மறைந்தது.

இந்நிலையில் ஆய்ப்பாடியில் நந்தகோபன் மனையில் அசோதையின் இளஞ் சிங்கமாக வளர்ந்து வந்தான் கண்ணன்; அவன் இளமையிற் செய்த அருஞ்செயல்கள் மிகப்பல. இங்ஙனம் இவனது அருஞ்செயல்களைக் கேள்வியுற்ற கம்சன் "நம்மைக் கொல்ல ஆய்ப்பாடியில் வளர்கின்றவன் இவனேயாம்" இவனை எங்ஙனமாவது கொன்றுவிட வேண்டுமென்ற முடிவிற்கு வந்தான். அதற்கான சூழ்ச்சிகள் பல செய்தான். அவற்றுள் ஒன்று கன்றால் விள வெறிந்தது. அஃதாவது: கம்சன் ஓர் அசுரனை அழைத்து, "நீ போய் கண்ணன் கன்று காலிகளோடு வரும் வழியில் விளாமரமாக முளைத்திரு. அவன் அப்பக்கம் வரும்போது அவன் மீது சாய்ந்து அவனைக் கொன்றுவிடு" என்றான். வேறொரு அசுரனை விளித்து "நீ போய்க் கண்ணன் மேய்க்கும் கன்று காலிகளோடு ஒன்றாக இருந்து சமயம் பார்த்து முட்டியோ உதைத்தோ கொன்றுவிடு" என்று கட்டளையிட்டான்.

கம்சன் ஆணையேற்ற இருவரும் ஆணை வண்ணம் உருவு கொண்டனர். புதிய மரம் வழியில் முளைத்திருப்பதும் புதிய கன்றொன்று காலிகளோடு சேர்ந்திருப்பதும் புதுமையாக இருந்தது கண்ணனுக்கு. உற்றுணர்ந்த கண்ணன் இதுவும் அம்மான் கம்சன் சூழ்ச்சியேயென்று சிந்தையுட் கொண்டான். முன் பன்முறை அவன் சூழ்ச்சி கண்டு தெளிந்துள்ளவன் ஆதலால் வியப்புத் தோன்றவில்லை. காலத்தை எதிர் நோக்கினான் கண்ணன். வழக்கம் போல் கன்று காலிகளோடு அவ்வழியே வந்தான். புதுக்கன்று புதுமரத்தை அண்மியது; காலம் நேர்ந்ததென்று கருத்துட் கொண்டவன், கன்றைத் தூக்கி விளவின் மேல் எறிந்தான். எறிந்த அளவில் மரம்

முறிந்து காய்கனி சிதற வீழ்ந்தது. கன்றும் உயிர் துறந்தது. ஒரு கல்லால் இரு மாங்காய் என்றாங்கு ஒரு செயலால் இரு காரியம் நிகழ்ந்தன. இறந்த உயிர் ஒளி வடிவுடையனவாய்க் கண்ணனை வாழ்த்தி விண்ணிற் சென்றன. கம்சன் வஞ்சம் ஈடேறவில்லை. இதனையே "கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்" என்றும், "கஞ்சனார் வஞ்சங் கடந்தான்" என்றும் இளங்கோவடிகள் தம் வையாரப் புகழ்ந்துள்ளார்.

## 45. காட்டகத்து வேடன்

முன்பு ஒரு காலத்தில் பாண்டிய மன்னர்களுள் ஒருவன் 'உற்ற காலத்தில் தெய்வம் அலாது இலை உதவி' எனக் கற்றவர் சொல்லும் நெறியினைக் கடைப்பிடித்து, ஆலவாய் அண்ணல் அடிகளுக்கே பற்றுடையவனாக நின்று, படைப் பெருக்கத்தை நிந்தித்துத் தன் நாட்டிற்கு வேண்டிய அளவு சேனையை மட்டும் வைத்துக் கொண்டு, தன் கீழ் வாழும் குடிகளுக்குத் தெய்வப்பற்றும் அறநெறி ஒழுக்கமும் ஓங்கும் வழியில் அரசு செலுத்தி வந்தான். அதே காலத்தில், சோழ மன்னர்களுள் ஒருவன், படையைப் பெருக்கிப் பிறநாடுகளையும் தன் ஆட்சியில் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். பாண்டியனின் படைமெலிவு, சோழனைப் பாண்டிய நாட்டின் மீது படையெடுக்கத் தூண்டிற்று; படை வலுவால் சோழன் தன்னிலும் மிக்கான் என்று உணர்ந்த பாண்டியன், தெய்வத் திருவருள் துணை கொண்டு சோழன் படையை எதிர்த்தான்; அளவில் சிறியதாகிய பாண்டியன் சேனை, சோழனது பெரும்படையினும் ஆற்றலுடையதாகிச் சோழன் சேனையைக் களத்தை விட்டுப் புறங்கொடுத்து ஓடச் செய்தது. இது கண்டு மனம் பொறாத சோழன், தானே குதிரைமேல் ஏறிச் சேனையைச் செலுத்தத் தொடங்கினான். அப்போது, சோழன் முன்னர், காட்டில் திரிகின்ற வேடன் ஒருவன் குதிரையில் மீது ஏறி வந்து "நான் ஓர் வேட்டுவப் பரியாள்; என்னொடு போர் செய்யவல்லையோ ?" எனக் கூறித் தன் கையிலிருந்த வேலைச் சோழன் மீது எறிந்தான்; சோழன் மிகவும் வெகுண்டு "இவ்வேடனைக் குதிரையுடன் பிடித்துக் கொணர்வேன்" என வஞ்சினமுரைத்துத் தன் பரியை அவன் பக்கம் செலுத்தவே, வேடன் புறங் கொடுத்து ஓடுபவன் போல் விரைந்து தன் குதிரையைச் செலுத்தினான். சோழனும் அவனை விரைந்து தொடர்ந்தான். புறங்கொடுத்தோடும் வேடன் குதிரையோடு வழியிலிருந்த ஓர் ஆழமான நீர் நிலையில் இறங்கி மறைந்தான்; பின் தொடர்ந்த சோழனும் நீர் நிலையில் குதிரையோடு இறங்கி நீரில் மூழ்கி இறந்தான். சோழர் படையும் கலங்கி நாட்டை விட்டு ஓடியது. இவ்வாறு காட்டகத்து வேடனாகத் தோன்றிப் பாண்டியனைக் காப்பாற்றியவன் சோமசுந்தரக் கடவுளே என்பது தெரிந்து மக்கள் எல்லாம் போற்றினார்கள்.

## 46. காமன் உடலைத் தூய்மை செய்தது

ஒரு காலத்தில் சிவபெருமான் யோக நிலையிலிருந்தார். அப்போது உலகங்களும் உயிர்களும் எவ்வித அசைவும் அற்று அமைதியாக நின்றன. உலக இயக்கம் ஒடுங்கியதைக் கண்ட பிரமன், சிவபெருமான் யோக நிலையை விட்டுச் சக்தியோடு கூடினல்லால் உலகம் இயங்காதென்பதை உணர்ந்து, சிவபெருமானுடைய யோகநிலையைக் கலைக்கும் வண்ணம் காமனை வேண்டினான். எம்பெருமானை அணுகுவதற்குக் காமன் அஞ்சி மறுத்தான் எனினும், தேவர்கள் எல்லாம் ஒருசேர வேண்டியமையால், துணிந்து, ஐங்கணையோடும், வில்லோடும், இரதி தேவியோடும், அலையற்ற கடல்போல் யோகத்தில் ஆழ்ந்திருந்த அருட்கடலாம் சிவபெருமான் முன்சென்று, பலவாறு கலங்கி, முடிவாகத் தான் இறுதி எய்தினும் உலகுக்கு ஒரு நன்மையைச் செய்வதே உயர்ந்தது எனும் கொள்கையைப் பின்பற்றி, இறைவன் யோக நிலையைக் கலைக்கும் நோக்கத்தில் மலர்க் கணைகளைத் தூவினான். சிவபெருமான் சிறிது தன் நெற்றிக் கண்ணைத் திறந்தார்; உடனே காமன் எரிந்து சாம்பராயினான். சிவபெருமான் மறுபடியும் யோகத்திலே அமர்ந்துவிட்டார். கணவன் எரிந்து பொடியானதைக் கண்ட இரதி,

"செம்பதுமைத் திருக்குமரா! தமியேனுக்கு ஆருயிரே! திருமால் மைந்தா!
சம்பரனுக் கொருபகைவா! கன்னல் வரிச் சிலைபிடித்த தடக்கை வீரா!
அம்பவளக் குன்றனைய சிவன் விழியால் வெந்துடலம் அழிவுற்றாயே!
உம்பர்கள் தம் விழி எல்லாம் உறங்கிற்றோ ? அயனாரும் உவப்புற்றாரோ ?
நேயமொடு மறைபயிலுந் திசைமுகனைப் புரந்தரனை நின்னைத்தந்த
மாயவனை முனிவர்களை யாவரையும் நின் கணையால் மருட்டி வென்றாய் ?
ஆயதுபோல் மதிமுடித்த பரமனையும் நினைந்திவ்வா றழிவுற்றாயே!
தீயழலின் விளக்கத்திற் படுகின்ற பதங்கத்தின் செயலிதன்றோ ?"

எனப் பலவாறு புலம்பி, கண்ணுதலின் அருளால் அவனை உயிர்ப்பித்தாள்; காமனும் உடலம் இல்லாதவனாக நிலையுற்றான்.

## 47. காலன் உயிரைத் தூய்மை செய்தது

மிகமிகப் பழங்காலத்தில், மிருகண்டு முனிவரும் அவருடைய மனைவி மருத்துவதியும் சிவபெருமானை நோக்கித் தவங்கிடந்து எல்லா நற்குணங்களும் வாய்க்கப் பெற்றதும், பேரழகு

வாய்ந்ததும் சிவனடி மறவாத சிந்தையுடையதுமான ஒரு ஆண்மகவைப் பெற்றனர். அம்மகவு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது; நாட்கள் ஆக, ஆக, பெற்றோர் கவலையுற்றனர். அவர்கள் கவலைக்குக் காரணம் யாது என வினவிய சிறுவன் மார்க்கண்டேயன், தன் வாழ்நாள் பதினாறு ஆண்டுகளே எனத் தெரிந்து கொண்டான். சிவபெருமான் திருவருளால் இயலாததொன்றில்லை என்பது நன்கு தெரிந்த மார்க்கண்டேயன், தன் பெற்றோரைக் கவலையுறாவண்ணம் தேற்றித் தவத்தால் காலனையும் வெல்வேன் என்று சிவபெருமானை இடைவிடாது போற்றித் தவம் செய்து காலன் கைக்கு அகப்படாத வரத்தைப் பெற்றான். பதினாறு ஆண்டு நிரம்பியதும், மார்க்கண்டேயன் உயிரைக் கொள்ள, எமனுடைய பணியாளர்கள் அணுகினார்கள்; ஆனால் அவனுடைய தவத்தின் ஆற்றலால் எவரும் நெருங்க முடியவில்லை. பின்னர் எமன், எருமைக் கடாவில் ஏறி, செம்மயிரும் காருடலும் எரிவிழியும் உடையவனாய், பாசமும் தண்டமும் சூலமும் ஏந்தி, தன் வீரர்கள் சூழ மார்க்கண்டனை அணுகி அழைத்தான். அச்சிறுவன், காலனைப் பொருட்படுத்தாது சிவபெருமான் திருவடிகளைப் பற்றிக்கொண்டான். காலன் வெகுண்டு தன் பாசத்தை வீசினான். தன்பால் புக்கவனைப் பாசத்தால் ஈர்க்க முயன்ற காலனை, சிவபெருமான் தன் இடதுகாலால் உதைத்துத் தள்ளினார். எமன் கீழே மலைபோல் விழுந்து உயிர் துறந்தான். எருமைக் க்டாவும், உடன்வந்த பரிவாரங்களும் உடனே மாண்டன. மார்க்கண்டேயர் இறவா வரம் பெற்றார்.

**48. காலனைக் காலால் உதைத்தது**

47–ஆவது கதையைப் பார்க்க.

**49. கிராதவேடம் கொண்டது**

32–ஆவது கதையைப் பார்க்க.

**50. குதிரை கொண்டு அருளியது**

பாண்டிய நாட்டில், அதன் தலைநகருக்கு அண்மையிலுள்ள திருவாதவூரில் ஓர் பெரியார் தோன்றினார்; இவர் இளமையிலேயே கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலிய நிரம்பப் பெற்றும் திறம்பெற எதையும் கொண்டு செலுத்தவல்லராயும் இருந்தபடியால், பாண்டிய மன்னன், இவரைத் தன் அமைச்சராக அமர்த்தி எல்லா ஏற்றங்களும் அளித்திருந்தான். அரண்மனையிலும், சேனையிலும்

குதிரைகள் குறைவாக இருந்தமையில், தகுதி வாய்ந்த குதிரைகள் வாங்கி வருமாறு பெரும்பொருளுடன் இவ் அமைச்சரை அருகிலுள்ள துறைமுகப் பட்டினத்துக்கு, அரசன் அனுப்பினான். செல்லும் வழியில், ஒரு பூம்பொழிலில், ஒரு ஞானகுரவன் பல அடியவர்களுக்குச் சிவஞானத்தை வழங்கி வருவதைக் கண்டு, தான் மேற்கொண்ட பணியை மறந்து, அந்த ஞானகுரவன் திருவடிக்குத் தொண்டாகித் தான் குதிரை வாங்கக் கொண்டு வந்த பொருளனைத்தையும் தன் ஞானகுரவன் ஆணைப்படி சைவத் திருப்பணிகளில் செலவிடத் தொடங்கினார். உடன் வந்தோர், எவ்வளவோ தடுத்தும் அவர் மாறவில்லை; அவர்களும் பாண்டியனிடம் சென்று நிகழ்ந்ததை அறிவித்தார்கள், பாண்டியன் சீற்றங்கொண்டு, அவரை உடனே மதுரைக்கு வரும்படி ஓலை போக்கினான்; அவரும், மன்னவன் கட்டளையைத் தன் ஞானகுரவனிடம் விண்ணப்பித்தார். ஞானகுரவனாக எழுந்தருளியிருந்த சிவபெருமான் "அஞ்சாதே, மதுரைக்குச் செல், 'குதிரைகள் ஆவணி மூலத்தன்று மதுரைக்கு வருவனவாகும்' என மன்னவனுக்குக் கூறு" எனத் திருவாய் மலர்ந்தருளினார். அவ்வாறே அவரும் சென்று தெரிவிக்க, பாண்டியனும் ஒருவாறு அமைதி கொண்டு இருந்தான். ஆனால், ஆவணி மூலத்துக்குச் சில நாள் முன்வரையிலும் குதிரைகள் வரக்கூடிய குறிகள் ஒன்றும் காணாதது கொண்டு ஐயுற்ற மன்னன், அவரைச் சிறையிலிட்டான்; காவலாளர்கள் துன்புறுத்துவது பொறாத அமைச்சர் உளம் கலங்கி

"மின்னும் புகழா அருளாளா மெய்யே மனிதர்போல் வந்து இங்கு
என் நெஞ்சு உருக்கி உரைத்த உரை தப்பாது என வந்துயான் உரைத்தேன்
மன்னன் காண்பான் விழிகுழிய வழியை நோக்கியிரா நின்றான்
துன்னும் புரவி கொடு விரைவில் தோன்றாய் தோன்றாய் தோன்றாயே"
'ஊரார் உனைச்சிரிப்பது ஓராய் என்று உன் அடிமைக்கு
ஆராய் அடியேன் அயர்வேன் அஃதறிந்தும்
வாராய் அரசன் தமர் இழைக்கும் வன்கண்நோய்
பாராய் உன் தன்மை இதுவோ பரமேட்டி'

எனப் பலவாறு முறையிட்டார்.

இம்முறையீட்டொலி கேட்ட சிவபெருமான், கணநாதர்களை அழைத்து 'குறிப்பிட்ட நாள் தவறாமல் பாண்டியனுக்குக் குதிரைகளைச் சேர்ப்பிக்க வேண்டும், நீவிர் அனைவரும் குதிரைச் சேவகர்களாகி, காட்டிலுள்ள நரிகளை எல்லாம் குதிரைகளாக மாற்றி ஏறிச் செல்லுங்கள், நாமும் குதிரைகள் வணிகர் தலைவனாகத் தோற்றம் கொண்டு பின்னர் வருகின்றோம்' எனக் கூறினார். சிவகணநாதர்களும் நரிகளை எல்லாம் உத்தம இலக்கணம் வாய்ந்த குதிரைகளாக மாற்றி ஏறிச் சென்றார்கள். சிவபெருமானும் குதிரைவணிகனாக வேதமாகிய குதிரையின் மீதேறி நடுவண் சென்றார். குதிரைகள் வெள்ளம்போல் மதுரையை அடைந்தன; பாண்டியன் மிகமகிழ்ந்து

அமைச்சரைச் சிறையினின்றும் விடுவித்து, குதிரைகளை ஏற்றுத் தன் பந்தியில் சேர்ப்பித்தான். குதிரை கொண்டு வந்த வணிகர் தலைவரது தோற்றம் பாண்டியனது உள்ளத்தைக் கவர்ந்தது. அவ்வணிகர் தலைவனும், தான் ஒரு பெரும் குதிரை வீரன் என்பதை மெய்ப்பிக்க தான் ஏறிவந்த குதிரையை, மல்லகதி, மயூர கதி, வானரகதி, வல்லியகதி, சரகதி என்னும் ஐந்து கதிகளும், பதினெண்வகை சாரிவிகற்பங்களும் தோன்றச் செலுத்திக் காட்டினார். மன்னனும் குதிரை வணிகர் தலைவருக்குப் பரிசாகப் பொன்னாடை அளித்தான், வணிகர் அதைத் தன் கைச் செண்டால் வாங்கி அணிந்து கொண்டார். பின்னர் யாவரும் மகிழ்ந்து அவரவர் இருப்பிடம் சென்றார்கள். இந்த அமைச்சர் வாதவூரிற் பிறந்தமையால் வாதவூரர் எனவும் பாண்டியனுடைய அமைச்சர் என்ற நிலையில் தென்னவன் பிரமராயன் எனவும் வழங்கப் பெறுவார்.

## 51. கேழலாய்ப் பால் கொடுத்தது

30–ஆவது கதையைப் பார்க்க.

## 52. கேவேடராகிக் கெளிறு படுத்தது

14–ஆவது கதையைப் பார்க்க.

## 53. சக்கரம் மாற்கு அருளியது

திருமால், தன்னால் வெல்லமுடியாத சலந்தரனைத் தடிந்த சக்கரத்தைப் (கதை 56 பார்க்க) பெறுவதற்குச் சிவபெருமானை, நாள் ஒன்றுக்கு ஆயிரம் தாமரைமலர்களைக் கொண்டு வழிபட்டு வந்தார். ஒரு நாள் ஒரு தாமரை மலர் குறைந்தது; மலர் எண்ணிக்கை குறையாதிருக்கும் வண்ணம் தன் கண்ணைத் தோண்டி மலராகச் சாத்திக் குறையை நிரப்பினார். சிவபெருமான் உவந்து சக்கரப் படையை அருளினார்.

'நீற்றினை நிறையப் பூசி நித்தல் ஆயிரம் பூக்கொண்டு
ஏற்றுழி யொருநாள் ஒன்று குறையைக் கண் நிறையவிட்ட
ஆற்றலுக்கு ஆழி நல்கி அவன் கொணர்ந்திழிச்சுங் கோயில்
வீற்றிருந்தளிப்பர் வீழிமிழலையுள் விகிர்தனாரே.'

(தேவாரம் 4784)

'திகழு மாலவன் ஆயிர மலரா லேத்துவானொரு நீண் மலர் குறையைப்
புகழினாலவன் கண்ணிடந்திடலும் புரிந்து சக்கரம் கொடுத்தல் கண்டு அடியேன்
திகழு நின்றிருப் பாதங்கள் பரவித் தேவதேவ நின் திறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சி வந்தடைந்தேன் ஆவடு துறையாதி யெம்மானே.'

(தேவாரம் 7898)

### 54. சங்கம் கவர்ந்தது

தாருகாவனத்து இருடிகளது மனைவிமார்கள், கற்புக்கு நிகராவார் தம்போல்வார் இல்லென்று செருக்குற்றிருந்தனர். இதனை உணர்ந்த இறைவன் இவர்களது செருக்கை ஒழிக்க எண்ணி பிட்சாடனர் வடிவங்கொண்டு தாருகாவனத்துக்கு எழுந்தருளினார். இவர் வருகின்ற கோலத்தைக் கண்ட இருடிகளது மனைவிமார்கள் அவரது பேரழகில் ஈடுபட்டுப் பிச்சை இடுதலோடு நிறையழிந்து தம் கை வளையல்களையும் கலத்தில் சொரிந்தனர். இதனை அறிந்த முனிவர்கள் தம் மனைவிமார் நிறையழிந்தமை கண்டு வெறுத்து, "நீவிர் நும் கற்புநிலையில் தவறியதால், மதுரையில் வணிகப் பெண்களாய்ப் பிறந்திடுக" என்ன, அவர்களும் எம் சாபம் நீங்குவது எப்போது என்றனர். அதற்கு, ஆலவாயண்ணல் நும் கையைத் தீண்டும்போது விலகும் என்றனர்.

சாபத்தை ஏற்ற அம்முனிவர் மனைவிமார், மதுரையில், வணிகர் மகளிராய்த் தோன்றி வளர்ந்து மங்கைப் பருவம் அடைந்தனர். ஆலவாய் அண்ணலும் இவர்கள் சாபத்தைப் போக்க வளையல் விற்கும் ஒரு வணிகராகி மதுரைப் பெருந் தெருவை அடைந்தார். மறை பகர்ந்த வாயால் "வளையலோஒஒ வளையல்" என்றார். இவ்வளையல் ஒலி கேட்ட மங்கையர்கள் உள்ளிருந்து வெளிப்போந்து கண்டனர். இவரது பேரழகில் ஈடுபட்டுச் சுழன்ற மனமுடையராய் நெருங்கி மொய்த்தனர்.

நெருங்கிய மங்கைமார், "வணிகரே! எம் கைகட்கு ஏற்ற அழகிய வளை இடுமின்" என்று தம் காந்தள் கைகளை நீட்டினர். அண்ணலும் கைம்மலர் பற்றினார், கண்மலர் உள்ளங்கவர வளையலும் அணிந்தனர். பின்னரும், இறைவர் கை தம் கைமேல் படவேண்டுமென்று எண்ணினர்; தம் கைவளையலை உடைத்தனர்; கைகளை நீட்டினர். இறைவரும் வளையலை இட்டனர். பல முறை இந்நிகழ்ச்சி நிகழ்ந்தன.

இந்நிலையில் வணிகரை நோக்கி, "வணிக நல்லீரே! இதுகாறும் இவ்வளை போன்ற வளையலைக் கண்டிலோம், இவைகள் எம்மை இன்ப வெள்ளத்தில் ஆழ்த்தின. நாளையும் வருவீராக, இவ்வளைக்குரிய பொருளைப் பெற்றுக்கொள்வீராக" என்றனர். "வாள்விழியீர் நாளைப் பெற்றுக்கொள்வோம்" என்று யாவரும் வியக்கும் வண்ணம் விண்ணிழி விமானத்துக்குள் சென்று சிவலிங்கத்தோடு கலந்தருளினார். இவ்வாறு வந்தவர் மங்கை பங்கனே என்று இன்ப வெள்ளத்தமுந்தி இன்புற்றனர்.

### 55. சந்திரனைத் தேய்த்தருளியது

**60**–ஆவது கதையைப் பார்க்க.

### 56. சலந்தரனைத் தடிந்தது

வழக்கமாக நாள்தோறும் சிவபெருமானைக் கண்டு வணங்கும் இந்திரன், ஒருநாள் இறுமாப்புடன் கைலைக்குச் சென்றான். இதனை அறிந்த சிவபெருமான் ஒரு பூதவடிவாய் அவன் எதிரில் தோன்றினார். நம் தரிசனத்திற்கு இடையூறாய் வாயிலில் இப்பூதம் நிற்கின்றது என இந்திரன் சீற்றங்கொண்டு தன் வச்சிரப்படையால் அப்பூதத்தைத் தாக்கினான். உடனே பூத வடிவம் உருத்திர வடிவமாயிற்று. இதனைக் கண்ட இந்திரன் அஞ்சித் தான் உய்யுமாறு வேண்டினான். சிவபெருமான் அவன்பால் கருணைகாட்டித் தம்பால் எழுந்த சினத்தைக் கடலில் எறிந்தார். அது ஒரு குழந்தை வடிவமாயற்று. அக்குழந்தையைக் கடல் அரசனாகிய வருணன் வளர்த்தான். ஒருநாள் அக்குழந்தை அழுத ஒலியை நான்முகன் கேட்டுக் கடலை அடைந்து, "இவ்வொலி யாது ?" என்று வருணனிடம் கேட்டான். வருணன் குழந்தையை நான்முகனிடம் கொடுக்க அதனைத் தன் இருகைகளாலும் வாங்கி மார்போடணைத்தான். அக்குழந்தை நான்முகனின் தாடியைப் பற்றி இழுத்து வருத்தியது. சலத்தால் தாங்கப் பெற்றதனால் சலந்தரன் என்று அக்குழந்தைக்குப் பெயரிட்டனர்.

இவன் தவ வலியால் பல வரங்களைப் பெற்றுத் தேவர் முதலியோரைத் துன்புறுத்தி வந்தான். இவன் சாலாந்தரம் என்னும் ஒரு நகரை அமைத்து அரசு புரிந்து வந்தான். இவன் விருந்தை என்பவளை மணந்து கொண்டு யாவரும் அஞ்சும்படி சகல செல்வங்களுடன் பலநாள் இன்புற்றிருந்தான். ஒருநாள் இவனுக்கு அஞ்சி மேரு மலையில் ஒளிந்து கொண்டிருந்த

தேவர்களை அழிக்க அங்கே சென்றான். அதனை அறிந்த தேவர்கள் திருமாலிடம் சென்று தங்களைக் காத்தருள வேண்டினார்கள். திருமாலும் அவர்கள் வேண்டுகோட்கிணங்கிச் சலந்தரனுடன் பல ஆண்டுகள் போர் புரிந்தும் அவனை வெல்ல இயலாது சென்றார். அப்போது தேவர்கள் கைலையை அடைந்து திருநந்தி தேவரின் அனுமதிபெற்றுச் சிவபெருமானை வணங்கிச் சலந்தரனால் தங்களுக்கு நேர்ந்த துன்பத்தைக் கூறிக் காத்தருளுமாறு வேண்டினார்கள். சிவபெருமானும் காத்தருள்வதாகக் கூறினார்.

திருமாலிடம் வெற்றி பெற்ற சலந்தரன், தேவர்களை எங்கும் காணாதவனாய், அவர்கள் கயிலை மலையை அடைந்தார்கள் என்பது அறிந்து அவர்களை அழிக்கச் சேனைகளுடன் கயிலைக்குப் புறப்பட்டான். சிவபெருமானது பெருமையை அறிந்த அவன் மனைவி விருந்தை எவ்வளவோ தடுத்தும் அவன் கேட்கவில்லை. கைலைக்குச் செல்லும் வழியில் சிவபெருமான் ஒரு முதிய அந்தணனாய்த் தண்டூன்றி அவன் எதிரே தோன்றி, "நீ யார்? எங்கு செல்கின்றாய்?" என்றனன். அதற்கு "பூவுலகத்திலுள்ளேன். சலந்தரன் என்னும் பெயரை உடையேன். தேவர்களையும் சிவபெருமானையும் வெல்ல இங்கு வந்தேன்" என்றான். உன்னால் அவர்களை வெல்வது அரிது, ஆயினும் நான் கிழிக்கும் இவ்வளவு பூமியைப் பேர்த்து எடுக்கவல்லையேல் உன்னால் கூடும் எனக் கூறித் தன் திருவடியினால் பூமியில் வட்டமாகக் கிழித்தார். சலந்தரன் அதனைப் பேர்த்துத் தூக்கித் தலையில் இட, அதுவே சக்கரப் படையாக அவனது உடலை இருகூறாகக் கிழித்து அவனை அறவே அழித்தது.

"பிலந்தரு வாயினொடு பெரிதும் வலிமிக்குடைய
சலந்தரன் ஆகம் இரு பிளவாக்கிய சக்கரம் முன்
நிலந்தரு மாமகள்கோன் நெடுமாற்கு அருள்செய்த பிரான்
நலந்தரு நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே"

(தேவாரம் 8223)

57. சேவகன் ஆகியது

முன் ஒரு காலத்தில் பாண்டியன் ஒருவன், புத்தம் சமணம் முதலிய புறச் சமயங்களைக் களைந்து வேதநெறியும் சிவாகமத்துறையும் நிலைபெற்று வருமாறு ஆட்சி செலுத்தி வந்தான். அப்போது காஞ்சியிலிருந்து அரசு செலுத்தி வந்த சமண சமயத்தைச் சார்ந்த மன்னன், இந்தப் பாண்டியனை வென்று பாண்டிய நாட்டைத் தன் ஆட்சியில் கொண்டுவரப் பலவாறு முயன்றான்;

தன் முயற்சி ஒன்றும் நிறைவேறாதது கண்டு சமண முனிவர்களைக் கொண்டு ஒரு அபிசார வேள்வி செய்து அதன் மூலமாகப் பாண்டியனைக் கொன்று நாட்டைக் கைப்பற்ற எண்ணினான். முனிவர்கள் செய்த அபிசார வேள்விக் குண்டத்திலிருந்து நீலமலை போலவும், இயமன் போலவும் ஒரு யானை எழுந்தது; முனிவர்கள், பாண்டியனையும் அவன் நாட்டையும் அழிக்குமாறு அந்த யானையை ஏவினார்கள். நிலவுலகம் பிளக்குமாறு இடிபோல் பிளிறிக்கொண்டு கண்களினின்றும் வடவைக் கனல் சிந்த ஊழிக்காற்றுப் போல் காற்று எழ, காதுகளை வீசிக்கொண்டு, குன்றுகளைத் துதிக்கையால் பற்றிச் சுழற்றிக்கொண்டு மதுரையை நெருங்கியது. யாவரும் கலங்கினர். பாண்டியன் சோமசுந்தரக் கடவுளிடம் சென்று முறையிட்டான். சிவபெருமான், மதிமுடி மறைத்து மயில்தோகை அணிந்து, உடைவாள் கட்டி, தோளிலே நீண்ட வில்லை மாட்டிச் சேவகனாகத் தோன்றிக் கீழ்த்திசை மதில் மேலுள்ள மண்டபமாகிய அட்டாலை மண்டபத்திலே நின்று, அபிசார வேள்வி யானை மதுரையை நோக்கி வரும்போது, அதன் மத்தகத்தைக் குறிவைத்து அம்பை விடுத்தார். மத்தகம் கிழிபட்டது; யானை மேகம்போல் முழங்கி நிலத்தில் விழுந்திறந்தது. யானையைத் தொடர்ந்து வந்த சமண முனிவர்களும், காஞ்சி மன்னனின் வீரர்களும் திசை தடுமாறி ஓடினார்கள். யானை இறந்து விழுந்து கிடந்ததும், பெருமிதமாக அட்டாலைச் சேவகன் நிற்பதும், பாண்டியன் பணிவுடன் அருகில் திருவடிபற்றி வணங்குவதும், மார்க்கண்டருக்காக மறலியை உதைத்துத் தள்ளிய காட்சிபோல் தோன்றிற்று.

புகைபடக் கரித்தோல் போர்த்த புண்ணிய மூர்த்தி தாளால்
உதைபடக் கிடந்த கூற்றம் ஒத்தது மத்தயானை;
சுதைபடு மதிக்கோ வேந்தன் தொழுகுலச் சிறுவன் ஒத்தான்;
புதைபடும் அமணர் காலபடரெனப் படரிற் பட்டார்.

## 58. சோதி தோன்றிய தொன்மை

1–ஆவது கதையைப் பார்க்க.

## 59. சோமன் கலையைத் தூய்மை செய்தது

60–ஆவது கதையைப் பார்க்க.

## 60. தக்கன் வேள்வி

நான்முகனின் பத்துப் புதல்வர்களில் மூத்தவனும், அறிவு ஆற்றல்களில் மிக்கவனுமாகிய தக்கன், தன் தந்தையின் அறிவுரைகளால், சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்பதைத் தெரிந்து, மானசவாவிக் கரையில் அமர்ந்து, அப்பெருமானையே தன் நெஞ்சக் கமலத்துள் இறுத்திப் பல ஆண்டுகள் தவம் செய்து பெறுதற்கரிய தலைசிறந்த வரங்கள் பலவற்றைப் பெற்றான். அவன் பெற்ற வரங்கள் எல்லாம் தேவரின் மேலாய வரங்களைப் பெற்றுத் தன் ஆணை எல்லா உலகங்களிலும் சென்று பல மக்களுடன் வாழ்வதையே முடிவாகக் கொண்டனவேயாம்; அவன் வீடு பேற்றை விரும்பவில்லை. சிவபெருமான் அருளிய வரங்களின் வலிமையால் தேவரும் அசுரரும் வழிபடவும், நான்முகன் முதலானோர் தன் சொல்வழி நிற்பவும் தக்ஷபுரியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந்தான். வேதவல்லி என்னும் கற்பிற்சிறந்த பேரழகியை மணந்து ஆயிரக்கணக்கான புதல்வர்களைப் பெற்றான்; இப்புதல்வர்கள் எல்லாம் இவன் போல் இம்மை வளத்தில் ஈடுபடாது, நாரத முனிவன் நல்லுரையால் வீடுபேற்றை விரும்பித் தவம் செய்து சிவபெருமான் திருவருளால் வீடுபெற்றனர். பின்னர் இருபத்து மூன்று பெண்களைப் பெற்று அவர்கள் வழியாகத் தன் கிளையை அளவுக்கு மேல் பெருக்கமுறச் செய்தான்; பின்னும் விண்மீன் கூட்டமாகிய இருபத்தேழு பெண்களைப் பெற்று, அவர்களைச் சந்திரனுக்கு மணம் செய்து கொடுத்தான். சந்திரன், பேரழகோடு விளங்கிய கார்த்திகையையும் உரோகிணியையும் பெரிதும் காதலித்து மற்றவர்களைப் புறக்கணித்தான்; புறக்கணிக்கப்பட்ட பெண்கள், தங்கள் தந்தையிடம் முறையிட, சந்திரன் கலைகள் யாவும் தேய்ந்து பொலிவு ஒழிக எனச் சாபமிட்டான். இந்த சாபத்தால் கலைகள் குறையப்பெற்ற சந்திரன் சிவபெருமானை நோக்கித் தவங்கிடந்து கலைகள் ஒவ்வொன்றாய் நிறையப்பெற்றான். தக்கன் சுடுமொழியின் வண்ணம் நாளும் நாளும் குறைவதும், சிவபெருமான் திருவருள் வண்ணம் பின்னர் நாளும் நாளும் நிறைவதுமாக மாறி மாறிக் குறைந்தும் வளர்ந்தும், சந்திரன் நிலைபெறுவானாயினன்.

தன் சுடுமொழியை மாற்றியதால், தக்கனுக்குச் சிவபெருமானிடத்துப் பகைமை பிறந்து வளர்வதாயிற்று. புலகர் என்னும் முனிவர் நல்லுரைகளாலும் சிவபெருமானும் தனக்கு மருகனாக வருவார் என்ற வரத்தின் நினைவாலும் பகைமை தணிந்து அரசு செலுத்தி வந்தான். சிவபெருமான் அளித்த வரத்தின் பயனாக, உமாதேவி, தக்கனுக்கு மகளாய்த் தோன்றி, சிவபெருமானை அடையத் தவம் செய்தார்; சிவபெருமானும் தோன்றினார். தக்கன் தன் மகளாரின் திருமணத்தைப் பேரார்வத்துடன் தொடங்கி நடத்திக்கொண்டிருக்கும்போது, மாயமாகச் சிவபெருமான் யாவரும்

அறியாது தனித்து தவக்கோலத்துடன் வந்து உமையம்மையை இடது பாகத்தமர்த்திக் கயிலைக்குச் சென்றுவிட்டார். சிவபெருமான் இவ்வாறு செய்தது தக்கனுக்குப் பெரும் சினத்தை உண்டாக்கி விட்டது. தக்கன், தன் மகளைக் காணக் கயிலைக்குச் சென்றான்; அவனை, சிவபெருமான் அம்மையொடு அமர்ந்திருக்கும் திருக்கோயிலுட் புகாவண்ணம் பூதகணங்கள் தடுத்துவிட்டன. அடங்காச் சினத்தனாகத் தக்கன் திரும்பினான்.

சிவபெருமானுக்கு அவிப்பாகம் கொடாமல் அவரை இழிவுபடுத்த வேண்டும் என்ற எண்ணத்துடன், தக்கன் ஒரு பெருவேள்வி இயற்றினான்; அவன் தவவலிமைக்கு அஞ்சித் தேவர்கள் எல்லாம் வந்தனர்; அவுணர்களும் வந்தனர்; ஆனால் அகத்தியர், சனகாதி முனிவர்கள் முதலிய மெய்ப்பொருள் உணர்ந்த மேலோர் வரவில்லை. தக்கன் செயல் தகாதது எனத் ததீசி முனிவர் பலவாறு எடுத்துரைத்தும் அவன் கேட்கவில்லை. சிவபெருமான் திருப்பெயர்களைத் தாங்கியுள்ள தெய்வங்களையும் எம்பெருமானையும் ஒன்று எனக் கருதும் மயக்கத்தையும், அவன் அருளால் படைத்தல், காத்தல் செய்யும் முதல்வர்களை அவனோடு ஒத்தவர் எனக்கொள்ளும் அறியாமையையும் தவிர்த்துச் சிவபெருமானே பரம்பொருள் எனக் கொள்ள வேண்டும் என்பதை விளக்கமாக முனிவர் கூறியும் தக்கன் தெளியவில்லை.

தக்கன் வேள்வியைத் தொடங்கிவிட்டான். அவன் கட்டளைப்படி காமதேனு, பலவகை இனிய உணவுகளைக் கொண்டு குவித்து எல்லோருக்கும் படைத்தது. சிந்தாமணியும், சங்கநிதியும், பதுமநிதியும், ஐந்தருக்களும் பலவகை மணிகளையும், ஆடைகளையும், அணிகளையும் யாவர்க்கும் வழங்கின. தேவர்கள், முனிவர்கள், அந்தணர் யாவரும் மனமார வாயாரப் பலவகை உணவுகளையும் உண்டு களித்துப் பாராட்டினார்கள். எங்கு பார்த்தாலும் மகிழ்ச்சியின் பேரொலியாகவே இருந்தது, திருமாலுடைய கருடனும், நான்முகனது அன்னமும், வாசவனது ஐராவதமும், அங்கியங் கடவுளது ஆட்டுக்கிடாவும், இயமனுடைய எருமைக்கடாவும், கதிரவனது குதிரைகளும் ஒருபால் நின்று ஒலித்தன. அரம்பையர் இசை, ஒருபால் முழங்கின, எங்கும் ஒரே ஆரவாரமாக இருந்தது.

வேள்வி தொடங்கிற்று; அவரவர்க்குரிய பகுதி வேலைகளை அவரவர் செய்தனர். தக்கன் ஆகுதி செய்யப்பெறும் தேவர்களை நினைத்து அவிகளை அமுதுபோல் ஊட்டிக்கொண்டிருந்தான். இந்த நிலையில், தக்கன் தன்னை அழையாதிருந்தும், உமாதேவியார் கயிலையிலிருந்து, தக்கனது வேள்விச்சாலைக்கு வந்து சிவபெருமானையும் தன்னையும் அழையாதது பெருங்குற்றம் என்பதைத்

தக்கனுக்குக் கூறினார். தக்கன் தன் மகளாகிய உமையம்மையிடம் சிவபெருமானை இழித்துக் கூறியதோடு அம்மையையும் இகழ்ந்தான். உமையும், வேள்விச்சாலையை விடுத்துக் கயிலைக்கு மீண்டனர். ஈதெல்லாம் அறிந்த சிவபெருமான் தக்கன் வேள்வியை அழிக்கத் திருவுளங் கொண்டார். வீரபத்திரக் கடவுளும் பத்திரகாளியும், இருவர் கண்களிலிருந்தும் தோன்றி, இறைவன் ஆணையைத் தலைமேல் கொண்டு வேள்விச்சாலைக்குச் சென்றனர். இருவர் தோற்றத்தையும் கண்டு தேவர்கள் எல்லாம் நடுங்கினர். இறுதிக் காலம் வந்து விட்டது என ஏங்கினர்.

வீரபத்திரர், சிவபெருமானுக்கு உரிய அவியைக் கேட்டார்; தக்கன் மறுத்தான்; கூடியிருந்த தேவர்களைப் பார்த்தார் வீரபத்திரர், “முறையற்றவன் வேள்விக்கு நீவிரும் துணையாக வந்துள்ளீரோ” எனச் சீறினார்; தண்டத்தினால் திருமாலின் மார்பில் அடித்தார்; அவர் கீழே விழுந்தார். பிரமனை ஒரு கையால் தலையில் குட்டி வீழ்த்தினார்; அருகிலிருந்த அவன் மனைவியின் மூக்கை அரிந்தார். தேவர்களெல்லாம் ஒளிந்து கொள்ள இடம் தேடிப் பல வழியாலும் ஓடினார்கள். சந்திரனைப் பிடித்துத் தள்ளிக் காலால் தேய்த்தார், சூரியனைக் கன்னத்தில் அடித்துப் பற்களை உதிர்த்தார்; பகன் என்னும் சூரியனது கண்களைப் பிடுங்கினார். இயமனைத் தலையை வெட்டினார். குயிலுருக் கொண்டு ஓடிய இந்திரனைப் பிடித்து வெட்டி வீழ்த்தினார். அக்கினி தேவனின் கைகளையும் நாக்குகளையும் துணித்தார். அவன் மனைவியாகிய சுவாகாதேவியின் மூக்கைக் கிள்ளி எறிந்தார். நிருதியைத் தடியால் அடித்து வீழ்த்தினார். வருணனையும் வாயுவையும் எழுவாலும் மழுவாலும் தாக்கினார். குபேரனைச் சூலத்தால் குத்திக் கொன்றார். அசுரர் தலைவன் தலையை ஒரு கணையால் எய்தார். மான் உருக்கொண்டு ஓடிய வேள்வித் தெய்வத்தின் தலையைக் கணையால் அறுத்தார்; தன்னை வணங்கிய உருத்திரர்களை மன்னித்து வழி காட்டினார். மனம் கலங்கித் தக்கன் நின்றான்; அவன் தலையை வெட்டி அக்கினி தேவனை உண்ணச் செய்தார். தக்கன் மனைவி, மகள் முதலிய பெண்டிர்களைப் பத்திரகாளி தண்டித்தார். வேள்விச்சாலை அழிந்தது; அனைவரும் மாண்டனர். சிவபெருமான் உமையுடன் வேள்விச்சாலைக்கு எழுந்தருளினார்; திருமாலும் நான்முகனும் வணங்கி நின்றனர். உமையம்மை மாண்டவர்களை உய்வித்தருள வேண்டினார்; யாவரும் உயிர் பெற்றனர். தக்கனுடைய தலையை முன்னமே தீக்கடவுள் உண்டுவிட்டமையின், ஒரு ஆட்டுத் தலையைத் தக்கனுக்கு தலையாக வைத்து உயிர்ப்பித்தனர். அவனும் தன் குற்றத்திற்கு வருந்திச் சிவபெருமானை வணங்கித் திருவருட்கு இலக்கானான்.

சிதம்பரம் அருள்மிகு நடராசப் பெருமான் திருக்கோவில் வளாகத்தில் அமைந்துள்ள ஆயிரங்கால் மண்டபம் என வழங்கும் இராஜ சபையில் தருமைக் குருமகாசந்நிதானம் 26-ஆவது பட்டம் திருப்பெருந்திரு சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களால் இந்தத் திருவாசக நூல் 30-7-2004ல் அரங்கேற்றப்படும் விழாக் காட்சிகள்
(படங்கள் 1 முதல் 22)





**Guru Maha Sannidhaanam alongwith his followers entering the Thousand Pillar Hall from Lord Natarajar Sannidhi**

"மலைமகள் தனை இகழ்வது செய்த மதியறு சிறுமனவனதுயர்
தலையினொடழலுருவனகரமற முனிவு செய்தவனுறைபதி
கலை நிலவிய புலவர்களிடர்களை தருகொடை பயில்பவர் மிகு
சிலை மலி மதிள் புடை தழுவிய திகழ்பொழில் வளர் திருமிழலையே"

(தேவாரம் 208)

"சுருதியான் தலையும் நாமகள் மூக்கும் சுடரவன் கரமும் முன்னியங்கு
பருதியான் பல்லுமிறுத்தவர்க்கருளும் பரமனார் பயின்றினி திருக்கை
விருதினான் மறையும் அங்கமோராறும் வேள்வியும் வேட்டவர் ஞானம்
கருதினாருலகிற் கருத்துடையார்சேர் கழுமல நகரெனலாமே"

(தேவாரம் 4072)

"எச்சன் நிணத்தலை கொண்டார் பகன் கண் கொண்டார்
இரவிகளிலொருவன்பல் இறுத்துக்கொண்டார்
மெச்சன் வியாத்திரன் தலையும் வேறாக் கொண்டார்
விறலங்கி கரங்கொண்டார் வேள்விகாத்து
உச்ச நமன் தாளறுத்தார் சந்திரனையுதைத்தார்
உணர்விலாத்தக்கன்றன் வேள்வியெல்லாம்
அச்சமெழ அழித்துக் கொண்டருளுஞ் செய்தார்
அடியேனை ஆட்கொண்ட அமலர்தாமே"

(தேவாரம் 7191)

## 61. தண்ணீர்ப் பந்தல் வைத்தது

மதுரையில் இராசேந்திர பாண்டியன் அரசு செலுத்தும் நாளில், காடு வெட்டிய சோழன் சோமசுந்தரக் கடவுளை யாவரும் அறிய, வந்து வந்து வணங்கிப் போக விரும்பினான். அதனால் பாண்டியனுக்குச் சில கையுறைப் பொருள்கள் அனுப்பி அவனுடைய நட்பைப் பெற்றான். பின் தன் மகளையும் இராசேந்திரப் பாண்டியனுக்கு மணம் செய்து கொடுக்க உடன்பட்டான். இராசேந்திர பாண்டியனின் தம்பியாகிய இராசசிம்மன் அதனை அறிந்தான்; தன் மூத்தோனுக்குப் பேசப்பட்ட சோழன் மகளைத் தானே மணம் செய்து கொள்ள விரும்பினான். அண்ணனை வஞ்சித்துக் காஞ்சி நகரை அடைந்தான். அதுகேட்ட சோழன்அவனை எதிர்கொண்டு அழைத்து இராசேந்திரனுக்கு என்று வரையறுத்திருந்த தன் மகளை அவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான்.

பிறகு காடு வெட்டியசோழன், பாண்டிய நாட்டு அரசுரிமையைத் தன் மருமகனுக்கு ஆக்க விரும்பி இராசேந்திர பாண்டியனைப் பிடிக்கக் கருதினான். இராச சிம்மனோடு சேனைகள் சூழப் புறப்பட்டுச் சென்று மதுரைக்குச் சமீபத்தில் தங்கிப் பாடி வீடு அமைத்தான். இச்செய்தியை இராசேந்திர பாண்டியன் ஒற்றர்கள் மூலம் அறிந்தான். உடனே திருக்கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கி, "பெருமானே! நள்ளிரவில் தனியனாய் வந்து உமது திருவடியைப் பணிந்து சென்ற காடு வெட்டிய சோழன், பல வரிசைகள் விடுத்து என் நட்பைப் பெற்றான்; இன்று தமியேனுக்கு எதிராகப் படை எடுத்து வந்துள்ளான்; காத்தருள வேண்டும்" என்று குறையிரந்து வேண்டினான். அப்போது "பாண்டியனே! நாளை உன் சேனையுடன் சென்று பகைவனோடு எதிர்த்துப் போரிடுக, வெற்றி உன்னுடையதாகச் செய்வோம்" என்று விண்ணினின்றும் ஒரு வாக்கு எழுந்தது. அதனைக் கேட்ட பாண்டியன் மகிழ்ச்சியுற்றுச் சோமசுந்தரக் கடவுளை வணங்கி விடைபெற்றுத் தன் இருக்கையை அடைந்தான்.

மறுநாள், பாண்டியன், தன் சேனைகளுடன் சென்று சோழனொடு போர் புரிந்தான். பாண்டியனது சிறு சேனை போருக் காற்றாது வருந்தியது. அப்போது சோமசுந்தரக் கடவுளின் திருவருளால், பாண்டியன் படைகள் சோழன் படைமுன், ஒன்று, பலவாக உருக்கொண்டு தோன்றின. இரு படைகளும் சலியாது சூரியன் உச்சிவரும் வரை போர் புரிந்தன. அப்போது சூரியன் ஊழித் தீயே போல் காய்ந்தது; அவ்வெம்மையின் கொடுமை ஆற்றாது மரங்கள் எல்லாம் கரிந்து போயின; ஆறுகளில் நீர் சிறிதும் இன்றி வறண்டது; படைகள், நிற்பதற்குக் கூட நிழல் இன்றி வருந்தின.

இவ்வாறு வெப்பத்தால் வருந்தும் சமயத்தில், கருணைக் கடலாகிய சோமசுந்தரக் கடவுள், பாண்டியன் படையின் நடுவே, நான்மறைகளும் கால்களாகப் பொருந்தத் தண்ணீர்ப்பந்தல் வைத்து, தவக்கோலம் பூண்டு, கங்கை நீர் நிரப்பிய ஒரு கெண்டியை ஏந்தி ஒருவருக்கு ஒன்றாய் பலருக்குப் பலவாய் உள்ள துவாரத்தினால் தண்ணீர் வார்த்து தாகத்தைத் தணித்தருளினார். பாண்டியன் படை வீரர்கள் சிவபெருமான் வைத்தருளிய தண்ணீர்ப்பந்தலை அடைந்து தண்ணீர் குடித்து இளைப்பு நீங்கினர். அதனால் மீண்டும் வலிமை பெற்று சோழன் மேல் போருக்குச் சென்று வெற்றி பெற்றனர். சோழனையும் இராசசிம்மனையும் பிடித்து இராசேந்திர பாண்டியன் முன் நிறுத்தினர். அவர்களைப் பாண்டியன் சோமசுந்தரக் கடவுள் திருமுன் விடுத்து, "பெருமானே! உமது திருவுளம் யாது ?" என்ன, "பாண்டியனே! உன் கருத்துக்கிசைந்ததைச் செய்யக் கடவை" என்று ஒரு வாக்கு

விண்ணின்றும் எழுந்தது. அதனைக் கேட்ட பாண்டியன் காடு வெட்டிய சோழனை விடுவித்து தன் தம்பியாகிய இராச சிம்மனை வேறாக விலக்கி விட்டான். பிறகு பலவளங்களும் சிறக்க வாழ்ந்து வந்தான்.

### 62. அறக்கடவுளும் திருமாலும் இடபமாய்த் தாங்கியது

எல்லா உலகங்களும் உயிர்களும் முடிவடைகின்ற கடையூழியில், செந்தீ பரவி எஞ்சியவற்றையும் உண்டு தூய்மை செய்யும். அப்போது சிவபெருமான், உமைகாண ஊழிக் கூத்து ஆடி மகிழ்வர். இத்தகைய கடையூழி ஒன்றில், எங்கும் செந்தீ பரந்து வரும்போது, அறக்கடவுள் தான் அழிந்து விடுவமோ என்று அஞ்சி எருது வடிவமாகச் சிவபெருமானை அணுகித் தன் நிலையை எடுத்துரைத்தான். சிவபெருமான், அறக்கடவுளுக்கு இறவாத தன்மை அருளி, ஆற்றலையும் கொடுத்துத் தனக்கு ஊர்தியாக இருக்கும் சிறப்பையும் அளித்தார். அது முதல் அறக்கடவுள் வலிமை கொண்டு சிவனுக்கு இடப ஊர்தியாகவும் ஏனையோர்க்குத் தலைவனாகவும் திகழ்கின்றான். முப்புரங்களைச் சிவபெருமான் கனல் எழ விழித்து அழித்த போது, திருமால், இடபமாகச் சிவபெருமானைத் தாங்கினார்.

### 63. திருமால் பன்றியாய்த் தேடியது

1–ஆவது கதையைப் பார்க்க.

### 64. தேவர்களை ஓட்டுகந்தது

60–ஆவது கதையைப் பார்க்க.

### 65. நஞ்சு அமுது செய்தருளியது

15–ஆவது கதையைப் பார்க்க.

### 66. நட்டம் பயின்றது

உலகம் எல்லாம் தோன்றுவதும், நிலை நிற்பதும், அழிவதும், மயக்கமுறுதலும், அருள் பெறுதலும், சிவபெருமான், தில்லையம்பலத்தும், ஒவ்வொரு உயிர்களின் உள்ளக் கருவிலும்

ஆடுகின்ற ஆட்டத்தாலே தான் ஆகின்றன என்பது அறிஞர் கொள்கை. எல்லாம் ஒடுங்கிய பேரூழியின் முடிவாகிய ஈமக்காட்டிலும் அவர் கூத்தாடுகின்றார். இவருடைய திருக்கூத்தை, நடம் என்றும் நட்டம் என்றும் நடனம் என்றும் கூறுகின்றோம். இறைவி ஒரு காலத்தில் காளியாக நின்று கூத்து ஆடினார்; அக்கூத்து கொடுங்கூத்தாய் வளர்ந்து உலகத்தை நடுங்கச் செய்தது. உலகம் எல்லாம் காளியின் கூத்துக்கு உணவாகிவிடுமோ என்ற அச்சம் தோன்றியது. அப்போது சிவபெருமான் ஆனந்தக்கூத்தனாய் நட்டம் பயின்று காளியின் கொடுங்கூத்தை ஒடுங்கச் செய்தார்.

காலதிற் கழல்களார்ப்பக் கனலெரிகையில் வீசி
ஞாலமுங் குழியநின்று நட்டமதாடுகின்ற
மேலவர் முகடுதோய விரிசடை திசைகள்பாய
மாலொரு பாகமாக மகிழ்ந்த நெய்த்தானனாரே.

(தேவாரம் 4528)

### 67. நந்தம்பாடியில் நான்மறையோன்

ஒரு காலத்தில், தங்கள் மரபுக்குரிய வேதம் ஓதுதலைக் கைவிட்டுப் பார்ப்பார் யாரும் ஒருமை நெஞ்சகமும் முன்னை இருபிறப்பு ஒழுங்கும் ஓங்கும் பெருமை முத்தழலும் நான்கு ஆச்சிரமும் பீடு இலங்கும் அரியபால் வேள்வி ஐந்தும் ஆதிநூல் அங்கம் ஆறும் தரும ஏழிசையும் மற்றும் தவிர்ந்து இழிதொழிலில் சார்ந்தார்.

எங்கேனும் சிலர் வேதங்களை ஓதி வந்தாலும், அவற்றின் பொருளை உணராதவராய் இருந்தனர். பொருள் உணர்ந்தார் ஒருவர் இருவர் இருந்தாலும், அழுக்காறு உடையவர்களாய்ப் பிறர்க்கு உதவாதவர்களாய் இருந்தனர். அப்போது முனிவர் சிலர் சிவபிரானை வேண்ட, அவர், வேதத்தையும் அதன் பொருளையும், திருவாலவாயில் எழுந்தருளி முனிவர்களுக்கு விளக்கிக் கூறி மறைந்தார். திருவிளையாடற்புராணத்தில் 'வேதம் உணர்த்திய திருவிளையாடலில்' இது திருவாலவாயில் நிகழ்ந்ததாகப் பேசப் படுகின்றது. திருவாதவூரடிகள் காலத்தில், இந்நிகழ்ச்சி, கடற்கரை ஊர்கள் ஒன்றிலோ, பாடி வீட்டிலோ நிகழ்ந்ததாக வழங்கப் பெற்றிருத்தலும் கூடும். தஞ்சை மாவட்டத்திலுள்ள கடற்கரை ஊர்கள் சில வேதத்தோடு தொடர்புடைய பெயர்களுள்ளனவாக இருக்கின்றன. 'நால்வேதபுரி', 'திருமறைக்காடு' என்பன எடுத்துக்காட்டுகளாகும். 'நந்தம்பாடி' என்பது ஏதேனும் ஓர் ஊரின் பெயராக இருக்கக்கூடுமா அல்லது

மதுரையம்பதியின் பகுதி ஒன்றை அடிகள் இவ்வாறு குறித்திருக்கக்கூடுமோ என்பதும் கருதற்பாலது.

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரி வளைக்கை மடமானி
பங்கயச் செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து நாள் தோறும் பரவப்
பொங்கழலுருவன் பூதநாயகன் நால்வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாயாவதும் இதுவே.

(தேவாரம் 4090)

### 68. நரி பரியாக்கியது

50–ஆவது கதையைப் பார்க்க.

### 69. நாமகள் நாசியைத் தூய்மை செய்தது

60–ஆவது கதையைப் பார்க்க.

### 70. பஞ்சப்பள்ளியில் பான்மொழியோடு இருந்தது

பஞ்சப்பள்ளி என்பது ஒரு ஊரின் பெயராகவோ, அழகு, தண்மை, மென்மை, நறுமணம், வெண்மை என்னும் ஐவகைத் தன்மையமைந்த படுக்கையாகவோ கருதவேண்டி இருக்கிறது. ஊரின் பெயராயின் அங்கு நிகழ்ந்ததொரு தெய்வ நிகழ்ச்சியைக் குறிப்பிடுவதாகும். பள்ளியைக் குறிப்பதாயின் சிவபெருமான் சௌந்திர மாறனாகத் தடாதகைப் பிராட்டியாரை மணந்து அரசு செலுத்திய நாட்களைக் குறிப்பதாகக் கொள்ளலாம். தெளிவாகக் கூறுவதற்கில்லை.

### 71. பட்டமங்கையில் அட்டமாசித்தி அருளியது

முன்னொரு காலத்தில் திருக்கயிலாய மலையில் கல்லால நீழலின் கீழ்ச்சிவபெருமான் குருமூர்த்தியாய் வீற்றிருந்து, சிவகணத்தலைவர்க்கும் சனகர் முதலிய முனிவர் நால்வர்க்கும் சிவகதையினை திருவாய் மலர்ந்தருளிக் கொண்டிருந்தார். அப்போது கார்த்திகைப் பெண்களான இயக்க மாதர் அறுவரும் சைவத்தவ வேடம் பூண்டு சிவபெருமான் திருமுன் வந்து வணங்கி, “பெருமானே! அடியேங்கட்கு அட்டமாசித்தியை உபதேசித்தருளும்” என்று வேண்டினர். அது

கேட்ட பெருமான், "நீங்கள், உமாதேவியை உள்ளத்தில் தியானித்துச் சிந்திப்பீர்களாயின், அவள் உங்கள் வினைகளைப் போக்கி, அட்டமாசித்திகளையும் தந்தருள்வாள்" என்று கூறி அட்டமாசித்திகளின் கருப்பொருளை மட்டும் விளக்கி அருளினார்.

பின்னர், அவ்வியக்கியர் அறுவரும் முன்னை ஊழ்வலியால் உமாதேவியைச் சிந்தியாமல் சிவபெருமான் அருளிய அட்டமாசித்திகளின் கருப்பொருளை மறந்து விட்டனர். சிவபெருமானும் அவர்களைச் சினந்து, "நீங்கள் பட்டமங்கையில் உள்ள ஆலமரத்தின் அடியிலே கற்பாறையாய்க் கிடக்கக் கடவீர்கள்" என்று சபித்தார். இயக்கமார்கள் மனந்தளர்ந்து வணங்கி, "பெருமானே! இச்சாபத்தை நீக்கி அருள வேண்டும்" என்று குறை இரந்தனர். சிவபெருமான், "ஆயிரம் ஆண்டுகள் கற்பாறையாய்க் கிடந்தால், அதன்மேல் யாம் மதுரையினின்றும் போந்து உங்கள் சாபத்தைப் போக்கி அருள் செய்வோம்" என்றார். இயக்கிமார்கள் அறுவரும் பட்டமங்கையில் ஆலமரத்தின் அடியில் கற்பாறையாகிக் கிடந்தனர். ஆயிரம் ஆண்டுகள் கழிந்தபின், மதுரையில் எழுந்தருளியுள்ள சோமசுந்தரக் கடவுள், ஒரு ஞானாசாரிய வடிவங் கொண்டு பட்டமங்கையில் கற்பாறையாய்க் கிடக்கும் இடம் சென்று அருள் நோக்கம் செய்தருளினார். உடனே அவர்கள் அறுவரும் பழைய வடிவம் பெற்று அப்பெருமானின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். சிவபெருமான் அவர்கள் சிரமீது தம் கையை வைத்து அட்டமாசித்திகளையும் உபதேசிப்பராயினார்.

"சித்திகள், அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என எட்டு வகைப்படும். இவை ஞானிகளின் விளையாட்டு வகையாகும். அவற்றுள், மிக நுண்ணிய உயிர்கள்தோறும் தான் மிகச் சிறிய பரம அணுவாய்ச் சென்று தங்கும் நுண்மை அணிமா. மண்தத்துவ முதல் சிவதத்துவம் ஈறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களின் உள்ளும் புறமும் நீங்காது நிறைந்திருக்கும் பெருமை மகிமா. மலையின் பாரத்தைப் போலக்கனமாக இருக்கும் யோகியை எடுத்தால் இலேசாகக் கனமற்று இருப்பது இலகிமா. இலேசான அணுவைப்போல் மெலிந்திருக்கும் யோகியை எடுத்தால் மலையில் பாரத்தைப் போல் கனமாக இருப்பது கரிமா. பாதலத்திலுள்ள ஒருவன் பிரமலோகத்தில் புகுதலும் மீண்டும் பாதலத்தை அடைதலும் பிராத்தி. வேறு உடலில் புகுதலும் ஆகாயத்தில் சஞ்சரித்தலும் தான் விரும்பிய இன்பங்கள் அனைத்தும் தான் இருக்கும் இடத்தில் நினைத்த வண்ணம் வரச் செய்தலும் பிராகாமியம். சூரியன் தனது ஒளியால் எல்லாவற்றையும் விளங்கச் செய்தல் போல உலகிலுள்ள பொருள்களனைத்தையும், மூன்று காலங்களையும், விண்ணுலகப் பொருள்களையும் தன் உடம்பின் ஒளியினால் விளங்கச் செய்து தான் இருந்த இடத்திலிருந்து அறிதலும் பிராகாமியம் ஆகும் என்பர்.

ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையும் தன் இச்சையின்படி இயற்றி, சூரியன் முதல் ஒன்பது கோள்களும் ஏவல் கேட்ப இருப்பது ஈசத்துவமாகும். அவுணர், பறவை, விலங்கு, பூதம், மனிதர் முதலிய பலவகை உயிர்களையும், இந்திரன் முதலிய திக்குப்பாலர் எண்மரையும் தன் வசமாகச் செய்து கொள்வது வசித்துவமாகும்.'' என்று சிவபெருமான் இயக்கியர் அறுவர்க்கும் அட்டமாசித்திகளை விளங்க அறிவித்தருளினார். இயக்கிமார் அறுவரும் பெருமான் உபதேசித்தருளிய அட்டமாசித்திகளை உமாதேவியைத் தியானம் செய்து நன்கு பயின்றபின் கயிலையை அடைந்தனர்.

குறிப்பு: அட்டமாசித்திகளைப் பற்றி வேறுவிதமான விளக்கங்களும் உள்ளன. கதை 23—ஐப் பார்க்கவும்.

### 72. பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளியது

மதுரையில் வரகுண பாண்டியன் அரசு செலுத்திவரும் நாளில் பாணபத்திரன் என்னும் ஒரு யாழ்ப்பாணன், பாண்டியன் சபையில் யாழ் வாசித்து வருவது வழக்கம். ஒரு நாள், ''நமக்கு இனி அறிவாய் இருப்பது சோம சுந்தரக் கடவுளே'' என்று கருதி அன்று முதல் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலில் மூன்று காலமும் இசை பாடும் நியமம் பூண்டான். இறைவன் திருமுன் பாடுதலேயன்றி வேறு தொழில் இன்மையால் வறுமையினை அடைந்தான். அதனைப் பொறாத சோமசுந்தரக் கடவுள், ஒவ்வொரு நாளும் சிறிது பொருள் அளிக்க அதனைப் பாணபத்திரன் பெற்றுச் சென்று யாவர்க்கும் கொடுத்து கவலை இன்றி வாழ்ந்து வந்தான்.

இவ்வாறு நாள்தோறும் கொடுத்தருளிய பெருமான் சில காலம் சென்ற பின் ஒன்றும் கொடாது ஒழிந்தார். பாணபத்திரன் வறுமையால் துன்பமுற்றான். ஒரு நாள் சோமசுந்தரக் கடவுள் அப்பாணபத்திரன் கனவில் தோன்றி, ''அன்பனே! இதுவரை பாண்டியனது பொருளைக் கவர்ந்து கொடுத்தருளினோம். எம்மிடம் அன்பு வைத்துள்ள பாண்டியன் அறியின் வேறாக நினைத்து விடுவான். உன்னைப் போலவே நம்மிடம் அன்பு கொண்டுள்ள சேரமானுக்கு ஓலை எழுதித் தருவோம். அங்கு செல்லக்கடவை'' என்று கூறியருளி ''மதிமலி புரிசை மாடக்கூடல்'' என்னும் திருமுகப் பாசுரம் ஒன்று எழுதிக் கொடுத்து மறைந்தார். பாணபத்திரன் விழித்தெழுந்து அதனைக் கண்டு மகிழ்ந்தான்.

பிறகு பாணபத்திரன் தான் பெற்ற திருமுகத்தோடு இறைவனை வணங்கி, மலைநாட்டு திருவஞ்சைக் களத்தை அடைந்தான். அந்நகரில் உள்ள ஒரு தண்ணீர்ப் பந்தலில் தங்கினான். சோம சுந்தரக் கடவுள் அன்றிரவு சேரமான் கனவில் தோன்றி, "மன்னனே! பாணபத்திரன் நம் அடியவன். அவன் உன்னைக் காண நம் திருமுகம் பெற்று வந்திருக்கிறான். அவனுக்கு அரிய பொருளைக் கொடுத்து விரைந்தனுப்புக"என்று கூறி மறைந்தார். சேரமான் விழித்தெழுந்து அமைச்சரிடம் கூறி பாணபத்திரரைத் தேடிக் கண்டு வர ஏவலாளரை அனுப்பினான். அவர்களும் சென்று தேடி தண்ணீர்ப் பந்தலில் தங்கி இருக்கக் கண்டு அதனை அரசனுக்குத் தெரிவித்தனர். உடனே சேரமான் நாயனார் சென்று பாணபத்திரனை எதிர்கொண்டு வணங்கி திருமுகத்தை முறைப்படி வாங்கி வணங்கிக் கண்ணுற்றார். அதில், "மாடங்கள் நிறைந்த மதுரையில் எழுந்தருளியுள்ள சிவனாகிய யாம் எழுதி அனுப்பும் செய்தி. நீருண்ட மேகத்தைப் போல புலவர்களுக்கு வரையாது அளிக்கும் சேரமான் காண்க; இத்திருமுகம் கொண்டு வரும் பாணபத்திரன் நின்போல் எம்மிடம் அன்புடையவன். அவன் நின்னைக் காண வருகின்றான். அவனுக்குப் பெருநிதி கொடுத்தனுப்புவது" என்று சோமசுந்தரக் கடவுள் வரைந்தருளிய செய்தியைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தார்.

சோமசுந்தரக் கடவுள் (திருஆலவாயுடையார்) பாணபத்திரர் மூலமாக சேரமான் பெருமாள் நாயனார்க்கு எழுதிக் கொடுத்த 'திருமுகப் பாசுரம்'

"மதிமலிப் புரிசை மாடக்கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிற(கு)
அன்னம் பயில் பொழில் ஆலவாயின்
மன்னிய சிவன் யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண் மூப்படி எனப் பாவலர்க்கு
ஒருமையின் உரிமையின் உதவி, ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயில் பாணபத்திரன்
தன்போல் என்பால் அன்பன்; தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்;
மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே"

பிறகு, சேரமான் நாயனார் பாணபத்திரனுக்கு அமுது செய்வித்து முறைப்படி உபசரித்தார். 'வரவிடுப்பது' என்று கட்டளையால் சேரமான் தம் கருவூலத்தைக் காட்டி "இப்பொருளை எல்லாம் நீரே கைக்கொண்டுபோம்" என்று கூற, பாணபத்திரன் சேரமானை வணங்கி, தனக்கு வேண்டிய அளவு பொருளைப் பெற்றுக் கொண்டு அவரிடம் விடைபெற்றுப் புறப்பட்டார். பாணபத்திரன் மதுரையை அடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கினான். பிறகு, தான் கொணர்ந்த பொருள்கள் அனைத்தையும் யாவர்க்கும் வேண்டுவன வழங்கி மகிழ்ச்சியோடு வாழ்ந்து வந்தான்.

## வரகுண பாண்டியன் வரலாறு

வரகுண பாண்டியன் சிறந்த சிவபக்தன். வேப்பம் பழங்களைச் சிவலிங்கம் எனக் கருதி வழிபட்டவன். தவளைகள் ஒலியை வேத பாராயணமாக எண்ணிப் பரிசில் வழங்கியவன். இடைமருதூர் கோவிலில் கிடந்த நாய்க்கூட்டத்தை தானே எடுத்து துப்புரவு செய்தவன். இத்தகைய அன்பன் திருமணம் புரிந்து கொண்டான். மண அறையை விட்டு எழுந்ததும், தன் மனைவி மிக்க அழகியாக இருப்பதை எண்ணிச் சிறந்த பொருள்கள் சிவபெருமானுக்கு உரியன ஆயிற்றே, ஆதலால் இவளை மகாலிங்க மூர்த்தியினிடமே அனுப்பி விடுவோம் என்று எண்ணினான். திருக்கோவிலுக்கு அழைத்துச் சென்றான். மகாலிங்க மூர்த்தியை ஏற்றுக் கொள்ளும் வண்ணம் வேண்டினான். பெருமானும் தமது சிவலிங்கத் திருமேனியில் அவள் மறைய இடம் தந்து கருணைபாலித்தார். அரசன் மகிழ்ந்து அரண்மனைக்குச் சென்றான். மறுநாள் விடியற்காலை, அருச்சகர் வழிபாட்டிற்காக வந்தபோது, சிவலிங்கத் திருமேனியில் பெண்ணின் வலக்கை மட்டும் தொங்கிக் கொண்டு இருந்ததைக் கண்டு அதிசயமுற்று, அரசனிடம் தெரிவித்தார். அரசனும் திருக்கோவில் சென்று, கண்டு, என்ன குறையோ என்று வருந்திக் கண்ணீர் சொரிந்தான். இறைவன் அசரீரியாக "திருமணக் காலத்தில் இக்கை உன்னால் தீண்டப்பெற்றது; மற்றும் அதனை விட்டு வைத்து உன் அன்பை உலகவர் உணர்ந்து ஈடேறவும், 'பெரிய அன்பின் வரகுண தேவன்' என உன்னைப் பாராட்டுவதற்காகவும் விட்டு வைத்தோம்" என்று கூறி அருளினார்.

## 73. பதஞ்சலிக்கு அருளியது

தாருகாவன முனிவர்களுடைய ஆணவத்தை அழித்து சிவபெருமான், அம்முனிவர்கள் ஏவிய முயலகன் மீது திருவடியை ஊன்றித் திருநடஞ்செய்த ஆனந்தக் காட்சியில் முழுகித்

திளைத்த ஆதிசேடன், மறுமுறையும் அவ்வருட் காட்சியைக் காணவேண்டும் என்ற தன் தணியா வேட்கையைத் திருமாலிடம் விண்ணப்பித்தான். அவ்விண்ணப்பத்திற்கு இரங்கி, திருமால், ஆதிசேடனுக்கு விடைகொடுத்தார். ஆதிசேடன், சுடர்மணிகள் இமைக்கும் தன்ஆயிரம் முடிகளுடனும் கயிலையில் வடபால் சென்று, சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் இயற்றினான். இவன் கடுந்தவத்தைக் கலைக்கப் பிரமன் எதிர்வந்து பல நற்பேறுகளை வழங்கினான். ஆதிசேடனோ, எத்தேவரையும், எப்பேற்றையும் சிறிதும் பொருட்படுத்தாது, சிவபெருமானது ஆனந்தக் கூத்தைக் காண வேண்டும் என்ற ஒரே உறுதியில் நிலைபெற்றுக் கடுந்தவத்தை மேலும் மேலும் கடுமையாக்கி நின்றான். அவன் உறுதியை வியந்த சிவபெருமான், பெண்ணொரு பாகனாக அண்ணல் ஆன்மீது தோன்றி ஆதிசேடனுக்குக் காட்சியளித்து "எவரும் கண்டு அஞ்சும் இப் பேருருவினை மாற்றிக் கொண்டு, தில்லைக்குச் சென்று, அங்கு புலிக்கால் முனிவன் அமைத்துள்ள துறவோர் இருக்கையுள் அமர்ந்து, அங்கு நிலைபெற்றுள்ள சிவலிங்கத்தை புலிக்கால் முனிவனுடன் வழிபட்டு வருக; யாம் அத்திருப்பதிக்கண் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து அருட்செயல்களையும் இடைவிடாது இயற்றும் ஆனந்தக் கூத்தினை, யாவரும் காண அம்பலத்தில் ஆடி, நினக்கும் புலிக்கால் முனிவருக்கும், ஏனை அடியவர்களுக்கும் அருள் செய்வோம்" எனத்திருவாய் மலர்ந்து மறைந்தார். அவ்வாறே ஆதிசேடனும் தன் பேருருவினையும் ஆயிரம் மணிமுடிகளையும் துறந்து பதஞ்சலி என்னும் நாமம் பூண்டு சிவபெருமானது அடியானாகத் தில்லையை அடைந்து ஆனந்தக் கூத்தினைக் கண்டுப் பேரானந்தம் உறுவானாயினன்.

மதுரையில் இறைவன் திருமணம் காணச்சென்ற பதஞ்சலி முனிவர், இறைவனது தில்லையம்பலத் திருக்கூத்தைக் கண்டு வணங்கியே உண்ணும் நியமம் உடையவராகையால், திருமண விருந்தில் உண்ணாது விடைபெற்றார்; சிவபெருமான் அவருக்காக வேண்டித் தில்லையில் ஆடும் திருக்கூத்தை வெள்ளியம்பலத்தில் ஆடித்திருவருள் செய்தார்.

**74. பரிப்பாகன்**

50–ஆவது கதையைப் பார்க்க.

## 75. பாண்டியற்குப் பரகதி அருளியது

சிவபெருமான் தடாதகைப் பிராட்டியாரை மணந்து சுந்தர பாண்டியனாக வீற்றிருக்கும்போது, பிராட்டியாரின் தாயாகிய காஞ்சனமாலை, கடலாடவேண்டும் என்று விரும்ப, பெருமான் ஒரு கடலன்றி எழுகடலையும் மதுரைக்கு வரவழைத்தார். கணவனோடு கடலாடுதலே தலைசிறந்தது என்பதை நன்குணர்ந்த காஞ்சனமாலையைத் தன் கணவன் இல்லாத குறை வருத்தியது. இஃதறிந்த எம்பெருமான், இந்திரனோடு ஒரு சேர தேவலோகத்தில் வீற்றிருந்த மலையத்துவச பாண்டியனை மதுரையம்பதிக்கு வருமாறு பணித்தனர். விண்சென்ற மலையத்துவசன் மீண்டும் மண்ணுலகில் வரக்கண்ட மக்கள் எல்லாம் மகிழ்ந்தனர். காஞ்சனமாலையும் மங்கலக்கோலம் பூண்டு மலையத்துவசனோடு எழுகடலும் ஆடினாள். கடலாடிய பின்னர் இறைவன் திருவருளால், பாசம் ஒழிந்தவர்களாய் அம்மையப்பரது திருஉருவமாகிய சிவசாரூப வடிவை மண்ணுலகம் எல்லாம் மகிழ்ந்து வணங்குமாறு பெற்று சிவலோகத்திலிருந்து இழிந்து வந்துள்ள ஒரு தெய்வ விமானத்தில் ஏறிவீற்றிருந்தனர். அவ்விமானம், இவர்களை ஏற்று, பூலோகத்தினின்றும் நீங்கி, இரவியும், மதியும் நிலவும் புவலோகத்தையும், இந்திரன் வாழும் சுவலோகத்தையும், இருடிகள் சித்தர்கள் வசிக்கும் மகலோகத்தையும், பிதிரர் முதலியோரது சனலோகத்தையும், சனகர் முதலியோர் தவம் செய்யும் தவலோகத்தையும், பிரமனது சத்தியலோகத்தையும், திருமாலுடைய வைகுந்தமாகிய நவ–லோகத்தையும் கடந்து, சிவலோகத்தில் கொண்டு உய்த்தது. பாண்டியனும் அவன் மனைவியும் எல்லா உலகங்களுக்கும் மேலாய சிவலோகம் சென்று சேர்ந்தனர். அங்கு அவர்கள் பேரின்பம் நுகர்ந்து கொண்டு வீற்றிருப்பாராயினர்.

## 76. பாதகமே சோறு பற்றியது

பொன்னிநதி பொய்யாதளிக்கும் புனல் நாட்டில் மண்ணி நதியின் தென்கரையில், சேய்ஞலூர் என்னும் மூதூர் உளது. அவ்வூரில், மறையோர்கள், செல்வச் சிறப்புடனும் அறு தொழிலின் மெய்ம்மை ஒழுக்கம் குன்றாமலும் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுள் காசிபகோத்திர மரபில் எச்சதத்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன், சுற்றம் விரும்பும் பவித்திரை என்பாளை மணந்து, சிறப்புடன் இல்லறம் நடத்தி வந்தான். இவர்களுக்கு, நல்வினைப் பயனால் ஓர் ஆண்மகவு பிறந்தது. அம்மகவுக்கு விசாரசருமன் எனப் பெயரிட்டனர். அம்மகவும் முந்தை அறிவின் தொடர்ச்சியினால், தம்மரபிற்குரிய எல்லாக் கலைகளும் உரிய காலத்தே பயின்று அறிவு நிரம்பப் பெற்றது. ஆண்டு ஏழு நிரம்பியபின் பெற்றோர்கள் அவருக்கு உபநயனம் செய்து முடித்தனர். அவர்

கழிய நின்ற மறையோன் 1.45, நிறங்கள் ஓர் ஐந்துடையாய் 1.49, தாயிற் சிறந்த தயவான தத்துவன் 1.61, பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியன் 1.64, ஓராதாருள்ளத்தொளிக்கு மொளியான் 1.68, இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே 1.70, அன்பருக்கன்பன் 1.71, யாவையுமாய் அல்லையுமாஞ் சோதியன் 1.71–72, ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே 1.73, போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியன் 1.77 கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லான் 1.88, அல்லற் பிறவியறுப்பான் 1.91, அரியோடு பிரமற் களவறி யொண்ணான் 2.35, எவ்வெவர் தன்மையுந்தன் தன்வயிற் படுத்துத் தானேயாகிய தயாபரன் 2.95–96, மீண்டுவாராவழியருள் புரிபவன் 2.117, எப்பெருந்தன்மையும் எவ்வெவர் திறமும் அப்பரிசதனால் ஆண்டுகொண்டருளி 2.125–126, நாடொறும் அருக்கனிற் சோதியமைத்தோன் 3.19–20, திருத்தகுமதியில் தண்மை வைத்தோன் 3.20–21, திண்டிறல் தீயின் வெம்மை செய்தோன் 3.21–22, பொய்தீர் வானில் கலப்பு வைத்தோன் 3.32–23, மேதகு காலின் ஊக்கம் கண்டோன் 3.23–24, நிழல்திகழ் நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் 3.24–25, வெளிப்பட மண்ணில் திண்மை வைத்தோன் 3.25–26, சொற்பதங் கடந்ததொல்லோன் 3.40, சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் 3.41, பத்திவலையிற் படுவோன் 3.42, அருள் நனிசுரக்கும் அமுது 3.59, உள்ளத்துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன் 3.112, தொழுதகை துன்பம் துடைப்பாய் 4.131, அழிவிலா ஆனந்தவாரி 4.132, தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கு மிறைவன் 4.164–165, அருவமும் உருவமும் ஆனாய் 4.193, துரியமு மிறந்தசுடர் 4.195, பேராயிரமுடைப் பெம்மான் 4.200, புவனம் நீர் தீக்காற்றிய மானன்வான மிருசுடர்க் கடவுள் 67, எவ்வுயிர்க்கும் தோற்றம் ஆகிநீ தோற்றம் இல்லாய் – எல்லாவுயிர்க்கும் ஈறாய் ஈறின்மையானாய் – ஐம்புலன்கள் . . . புணர்கிலாப் புணர்க்கையன் 73, முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருள் – பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியன் 163, ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளான் 181, சேர்ந்தறியாக் கையான் 187, பொய்யர்தம் பொய்யனை மெய்யர் மெய்யை 206, ஊனார் உடைதலையில் உண்பலிதேர் அம்பலவன் 216, கரணங்கள் எல்லாம் கடந்துநின்ற கறைமிடற்றன் 223, பருகற்கினிய பரங்கருணைத் தடங்கடல் 249, தாயுமிலிதந்தையிலி தான்தனியன் 257, தம் பெருமை தானறியாத் தன்மையன் 273, வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை ஆட்கொண்ட வள்ளல் 351, அருள்நிதி தரவரும் ஆனந்தமாலை 369, எல்லா உயிர்கட்கும் உயிர் 391, தீதிலா நன்மைத் திருவருட் குன்று 396, பேரா ஒழியாப் பிரிவில்லா மறவா நினையா அளவிலா மாளா இன்பமாகடல் 490, பொருளுடைக் கலையே 539, முடிவில்லா ஒத்தானே பொருளானே 553, குணங்களுங் குறிகளுமிலாக் குணக்கடல் 574.

**கண்ணப்ப நாயனார்**

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின் 218, செருப்புற்ற சீரடிவாய்க் கலசம் ஊனமுதம் விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்து 317.

**கல்வி**

துன்னிய கல்வி 2.5, கல்வியென்னும் பல்கடல் 4.38, பொல்லாக் கல்வி ஞானமிலா அழுக்கு மனத்தடியேன் 408.

**குமரக் கடவுள்**

நல்வேலன் 197, குமரன் 311.

**சாதிகுலம் பிறப்பு**

சாதிகுலம் பிறப்பென்னும் கழிப்பட்டுத் தடுமாறும் ஆதமிலிதாயேன் 479.

**சொந்த அனுபவம்**

மெய்யேயுன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன் 1.32, நலந்தா னிலாத சிறியேற்கு . . . நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி 1.58–59, நாயினேனை நலமலி தில்லையுட் கோலமார் தருபொதுவினில் வருகென 2.126–127, கண்ணால் யானுங்கண்டேன் 3.58, இன்றெனக் கெளிவந்தருளி அழிதரும் ஆக்கை யொழியச் செய்த வொண்பொருள் இன்றெனக் கெளிவந்திருந்தனன் 3.117–119, ஒள்ளிய கன்னற் கனிதேர் களிறு எனக் கடைமுறை என்னையும் இருப்பதாக்கினன்; என்னிற் கருணை வான்தேன் கலக்க அருளொடு பரா அமுதாக்கினன் 3.178–181, என்னையு மொருவனாக்கி யிருங்கழல் சென்னியில் வைத்த சேவகன் 4.129–130, ஞாலத்துள்ளே நாயினுக்குத் தவிசிட்டு நாயினேற்கே காட்டாதன வெல்லாங் காட்டிப் பின்னும் கேளாதன வெல்லாங் கேட்பிருந்தென்னை மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான் 32, தொண்டனேற்குள்ளவா வந்து தோன்றினாய் 46, ஈறிலாதநீ எளியை யாகிவந்தொளிசெய் மானுடமாக நோக்கியுங் கீறிலாத நெஞ்சுடைய நாயினேன் 95, சிவம் உருவந்து பூதலத்தோர் உகப்பெய்தக் கொண்டருளிக் கருவெந்து வீழக் கடைக் கணிந்தென் உளம்புகுந்த 239, சிவன்

சிவபுரா ணங்கீர்த்தி திருவண்டப் பகுதி
திருப்போற்றி யுடனகவ றிருச்சதக நூறாம்
நவநீத்தல் விண்ணப்ப மைம்பதாம் பாவை
நலந்திகழு மம்மானை நல்லபொற் சுண்ணம்
புவனமகிழ் கோத்தும்பி திருவார்தெள் ளேணம்
பொருவரிய திருச்சாழல் பூவல்லி யுந்தி
இவையிருப தாமிரே ழாகுதோ ணோக்கம்
எழிற்பொன்னூ சலுமேயொன் பானென்ப விவையே. 4

திருவன்னை குயிற்பத்துத் திருத்தசாங்கம்
திருப்பள்ளி யொடுகோயின் மூத்ததிருப் பதிகம்
அருட்கோயிற் றிருப்பதிகஞ் செத்திலடைக் கலமே
ஆசையதி சயம்புணர்ச்சி வாழாப்பத் தருட்பத்
தொருபதென வுரைசெய்வர் கழுக்குன்ற மேழாம்
உயர்பிரார்த் தனைகள்பதி னொன்றாகுங் காண்பத்
திறமைபெருங் குழைத்தபத் துயிருண்ணி யச்சம்
எழிற்பாண்டி பிடித்தபத்தொ டேசறவு பத்தே. 5

திருப்புலம்பல் மூன்றுகுலா வற்புதமே சென்னி
திருவார்த்தை பத்தெண்ணப் பதிகமொரு வாறாம்
பாற்குரிய யாத்திரைப்பத் தொருபதா மற்றைப்
படையெழுச்சி யிரண்டாகும் பதினொன்றாம் வெண்பா
அருட்டவமும் பண்டாய நான்மறையே ழாகும்
வலியபடை யாட்சியெட் டானந்த மேழாம்
அருட்பெறுமச் சோவொன்ப தைம்பத்தொன்றாம் பதிகம்
அகவலொடு செய்யுள்அறு நூற்றைம்ப தெட்டே. 6

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# பாடபேதங்களின் அட்டவணை

*திரு. மு. அருணாசலம்பிள்ளை* **M.A.** *அவர்கள் தொகுத்தது*

1.8 புறத்தார்க்குஞ்சேயான்.

1.23 மிக்கா விளக்கொளியாய்.

1.24 எண்ணிறந்த வெல்லை.

1.27 பன்மிருகமாகி.

1.33 உள்ளத்தின் ஓங்கார.

1.48 எங்கள் பெருமானே.

1.54 வாசற் குடிலை.

1.57 உள்ளுருகி.

2.8 குடியாய்க் கொண்ட.

2.9 மயேந்திர மதனில்.

2.11 கலந்தினி தருளியும்.

2.11 மயேந்திரத்திருந்து.

2.31 தர்ப்பணமதனை.

2.35 அளவறியொண்ணா.

2.37 அருளிய அழகுறு.

2.40 அங்கோர் அருள்வழி.

2.48 மங்கையுளிருந்தும்.

2.53 பாதஞ்சிலம்பொலி.

2.67 ஒருவனாகியதொன்மையும்.

2.71 திகழ்தருதீயில்.

2.100 மயேந்திரவெற்பன்.

2.102 பரிசதுபகரில்.

2.114 ஏல்வுடைத்தாக.

2.129 ஈங்கெழுந்தருளியும்.

2.139 பெய்த வேங்கின.

3.2 அளப்பரும் பெருமை.

3.3 ஒன்றினுக்கொன்று.

3.5 விண்ணுழை கதிரின்.

3.28 அடைந்தோன்.

3.35 வீணையினிசைந்தோன்.

3.47 அரியதின் அரிய.

3.72 நீடொழில்.

3.102 கூற்றொடு குனிப்போன்.

3.122 அலைந்தலை செய்ய.

3.124 மாமணிபிறங்க.

3.129 வருந்துமுறைப்பவர்.

3.133 கனிவர.

3.137 துற்றுவ.

3.138 அருந்தவக்காட்சி.

3.153 மயங்கியுமத்தரின்.

3.169 தவாக்கடல்.

3.173 குரம்புகொண்டின்றென் பாலாக்கினன்.

3.177 அமைந்தனன்.

3.181 அருளொடும்.

4.11 எறும்பூராக.

4.26 காலையில்.

4.27 எனைப்பலவிழைத்தும்.

4.42 சித்தமுண்டாக.

4.46 ஆர்த்தமானார்.

4.50 வேதியர்களும்.

4.102 ஈசா போற்றி இறைவா.

4.106 வேதி.

4.107 ஆதி.

4.124, ஒருவா.

4.132 வழுவிலா.

4.173 அமுதாம் நம்பா.

4.197 தோளார் முத்த.

4.218 தொழுதார் மையல்.

5.7 பெறில் இறைவா.

5.9 நினைந்துருக.

5.14 ஆவாவெந்தா என்ற விரதாய் விடு.

5.17 புரிந்திலேன்.

5.22 இரந்ததெல்லா.

5.24 நிரந்தரமா வருளாய்.

5.75 இன்றும் போய்.

5.77 வாழாதே.

5.83 உருகாதல்.

5.97 அநேகநேக அணு அணு.

5.106 கனியினோர்.

5.112 பிறவாமை காத்தாட்.

5.113 இது வொப்பதுண்டே.

5.114 ஆட்கொண்டாய்.

5.114 புகுந்தாண்டாய்.

5.117 பயந்து காத்தளிக்கும்.

5.119 வந்தாண்டு கொண்டா.

5.123 சூட்டுகின்றும் மிலை துணையிலி பிணை நெஞ்சே.

5.137 அளவறுப்பதையரியவன்.

5.141 புகுவதாவது போதரவில்லது பொன்னகர்.

5.144 மிகுவதாவதும் அன்றெனின்.

5.145 நாயேன்றன்னை.

5.158 மத்திடை தயிராகி.

5.166 அறிவொண்கிலை.

5.188 சிந்தையானும்.

5.206 பெறும் பேறெத்தனையும்,

5.213 உறுப்புவெறுத்திங்குனை.

5.235 நோக்குவாராரே.

5.237 புகுவேநினதே.

5.263 பிழைத்தது பொறுக்கை.

5.272 தனிமை தீர்ந்தே.

5.273 தீர்ந்த அன்பான.

5.282 நின்னொடென் னொடென்னிதாய்ப்.

5.298 உண்மை இன்மையில்.

5.301 நினைப்பதாவ.

5.315 வெந்தையாய்.

5.357 நெஞ்சம்.

5.359 தெளியே.

5.362 பரிசு பெற்று.

5.365 பின் மழுக்கை.

5.368 பொய்யிலிங் கெனை.

5.372 வம்பனே வினை.

5.374 கழற்கன்பதாக்கினாய்.

5.377 அறிவொணாத.

5.378 தெரிவொணாத.

5.379 உறுகி.

5.382 நின்கோயில்வாய்தலிற்.

5.392 வைப்பதோசொலாம்.

6.17 செழுகின்ற.

6.34 விருதலையேனை.

6.43 ஊறுபட்டே.

6.45 ஐம்புலன்கேள்கொண்டு.

6.61 நின்றெய்த்தலர்ந்தேன்.

6.70 நஞ்சமுதாய்.

6.78 நண்ணகில்லா.

6.80 அம்பரனே.

6.89 சுருக்குமன்பில்.

6.108 பின்னுங்காட்டு.

6.135 கனிவிப்பதுவ தெப்போது.

6.184 பழியினையே.

7.27 எல்லோருஞ்.

7.39 கோதுகுலத்தரன்.

7.43 விளையாட்டில்.

7.65 நம்பாலதாய்ப் பொங்கு கருங்குழலீர்.

7.70 கதிர்வந்து கால்கலப்ப.

7.73 உமக்கே.

7.73 அச்சத்தான்.

7.74 உமக்கொன்று.

7.75 உமக்கல்லா.

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# சாத்திர மேற்கோளகராதி

*திரு. தி. கி. நாராயணசாமி நாயுடு அவர்கள் தொகுத்தது*

**குறிப்பு:–** திருவாசகத் தொடர்கள் பல சித்தாந்த சாத்திரம் பதினான்கின் உரைகளுள் மேற்கோள்களாக ஆளப்பட்டுள்ளன. அவற்றை ஆராய்வதனால் அத்தொடர்களின் உண்மைப் பொருள் விளங்கும். இவ்வகராதியில் பதினான்கு சாத்திர உரைகளுள் திருவாசகத் தொடர்கள் மேற்கோள்களாகக் காட்டப்படும் இடங்களெல்லாம் தொகுக்கப்பட்டுள்ளன. இவ்வகராதியின் முதற் பத்தியில் திருவாசகத் தொடரின் முதற்குறிப்பும், இரண்டாம் பத்தியில் அத்தொடர் காணப்படும் திருவாசகப் பகுதியும் அடியும், மூன்றாம் பத்தியில் அத்தொடரினை மேற்கோளாகக் காட்டும் சாத்திர உரையின் பகுதி விவரமும், நான்காம் பத்தியில் அம்மேற்கோள் காணப்படும் சமாஜப் பதிப்பின் பக்கமும் தரப்பட்டுள்ளன. பாடிய பக்கங்கள் சமாஜப் பதிப்பையே குறிப்பன. இருபாவிருபது, சிவப்பிரகாச சிந்தனையுரைப் பக்கங்கள் பதினான்கு சாத்திர வுரையின் சமாஜ முதற்பதிப்புப் பக்கங்களைக் குறிப்பன. இவற்றின் பின் மு என்ற எழுத்து காணப்படும். ஏனைய பக்கக் குறிப்புகளையெல்லாம் பதினான்கு சாத்திர உரையின் சமாஜ இரண்டாம் பதிப்பிலுள்ள பக்க எண்களாகும். இருபா = இருபா விருபது, நமச்சிவாயத் தம்பிரான் உரை சமாஜ முதற்பதிப்பு. சங்கற்ப = சங்கற்பநிராகரணம் ஞானப்பிரகாச தேசிகருரை சமாஜ இரண்டாம் பதிப்பு. சித்தி* சிவஞான சித்தியார் சுபக்கம் சிவஞான சுவாமிகள் உரை சமாஜப் பதினான்கு சாத்திர இரண்டாம் பதிப்பு (சித்தியார் தனி வெளியீட்டுப் பக்கமல்ல). சிந்தனை = சிவப்பிரகாசம் சிந்தனையுரை சமாஜ முதற் பதிப்பு. சிவப்பிர = சிவப்பிரகாசம் மதுரைச் சிவப்பிரகாசருரை சமாஜ 14 சாத்திரவுரை இரண்டாம் பதிப்பு (சிவப்பிரகாசவுரை தனிப் பதிப்பல்ல). சிற்றுரை = சிவஞானபோதச் சிற்றுரை சமாஜ 14 சாத்திரவுரை இரண்டாம் பதிப்பு (சிற்றுரை தனிப்பதிப்பல்ல). நெஞ்சு = நெஞ்சுவிடுதூது (மேற்படி 2ம் பதிப்பு). பாடியம் = சிவஞான போத மாபாடியம் சமாஜப்பதிப்பு. இவ்வகராதியைப் பயன்படுத்தும் வகைக்கு ஒரு உதாரணம் காட்டுதும். "இமைப்பொழுதும்" எனத் தொடங்கும் திருவாசகத் தொடர் திருவாசக முதற்பகுதியாகிய சிவபுராணத்துள் 2–வது அடியிலுள்ளது. இத்தொடர் நெஞ்சுவிடுதூது உரையில் 121–வது அடியின் உரையுள் சமாஜத்தின் 14 சாத்திரவுரை இரண்டாம் பதிப்பில் 1146ம் பக்கத்தில் காணப்படுகிறது. இவ்வாறே பிறவற்றிற்கும் கொள்க.

| முதற்குறிப்பு | பாட்டும் அடியும் | சாத்திரம் | பக்கம் |
|---|---|---|---|
| இமைப்பொழுதும் | 1.2 | நெஞ்சு 121 | 1146 |
| அவனருளாலே | 1.18 | சிவப்பிர–பா | 723 |
| அவனருளாலே | 1.18 | சிவப்பிர 50 | 898 |
| அவனருளாலே | 1.18 | சிவப்பிர 65 | 955 |
| அவனருளாலே | 1.18 | சிவப்பிர 84 | 998 |
| உய்யஎன் | 1.33 | நெஞ்சு 121 | 1145 |
| இன்னுழை கதிரின் | 3.5 | பாடியம் 1.1 | 81 |
| அருக்கனிற் | 3.20 | பாடியம் 2.2 | 165 |
| தெய்வமென்ப | 4.42 | சிற்றுரை 12.2 | 201 |
| கொடிறும்பேதை | 4.63 | பாடியம்–அவை | 46 |
| அருபரத்தொரு | 4.75 | இருபா–1 | 645மு |
| அருபரத்தொரு | 4.75 | சிவப்பிர–49 | 883 |
| பாரிடை ஐந்தாய் | 4.137 | பாடியம் 2.2 | 165 |
| மெய்தானரும்பி | 5.1 | சிவப்பிர–98 | 1037 |
| நம்மவரவரே | 5.14 | பாடியம்–1.0 | 74 |
| உள்ளந்தாள் | 5.83 | சிவப்பிர–98 | 1038 |
| அவாவெள்ள | 5.95 | சிந்தனை–20 | 759மு |
| தேவர்கோஅறியாத | 5.117 | பாடியம்–1.0 | 75 |
| பயந்துகாத்தழி | 5.117 | சித்தி 10.6 | 582 |
| மாதாளும்பாக | 5.118 | நெஞ்சு 128 | 1151 |
| அளவறுப்பதற் | 5.137 | சிவப்பிர–98 | 1037 |
| கட்டறுத்தெனை | 5.193 | நெஞ்சு–119 | 1145 |
| அறிவிலாமை | 5.199 | இருபா–3 | 652மு |
| அனைத்துலகுமாய | 5.303 | சிவப்பிர–55 | 915 |




**Sri S. Sivarathinam and Smt. Vallimayil Sivarathinam Receiving the Book**



**Advocate S. Ganesan Receiving the Book**



**Mr. Dean Lesser and Ms. Elain of USA receiving the Book**



**A section of the Audiance with Mr. R.N. Sutharsan, the Printer of the Book (in the centre)**

| முதற்குறிப்பு | பாட்டும் அடியும் | சாத்திரம் | பக்கம் |
|---|---|---|---|
| ஆசைப்பட்டேன் | 5.328 | சிவப்பிர–91 | 1018 |
| வானநாடரும் | 5.377 | சிவப்பிர–98 | 1037 |
| விச்சதின்றியே | 5.381 | பாடியம் 2.0 | 123 |
| விச்சதின்றியே | 5.381 | பாடியம்2.2 | 159 |
| விச்சதின்றியே | 5.381 | பாடியம்2.2 | 160 |
| நெடுந்தகை நீ | 6.45 | பாடியம் 8.4 | 497 |
| வெளிவந்திலேனை | 6.58 | சிவப்பிர–பாயி | 720 |
| மலங்கள் ஐந்தாற் | 6.116 | சிவப்பிர 32 | 840 |
| தினைத்துணையேனும் | 6.156 | சிற்றுரை 10.2 | 176 |
| ஆதியும் அந்தமும் | 7.1 | இருபா 20 | 702மு |
| ஒள்நித்திலநகை | 7.13 | சிவப்பிர 28 | 824 |
| போனதிசை | 7.22 | சிவப்பிர 28 | 824 |
| ஐயாநீஆட்கொண் | 7.43 | சித்தி 1.36 | 416 |
| ஐயாநீஆட்கொண் | 7.43 | சிவப்பிர 18 | 775 |
| ஆர்த்தபிறவி | 7.45 | சிவப்பிர 18 | 775 |
| காத்தும் படைத்தும் | 7.46 | சித்தி 1.36 | 416 |
| காத்தும் படைத்தும் | 7.46 | பாடியம் 2.1 | 131 |
| பேதித்து நம்மை | 7.56 | சிவப்பிர 92 | 1019 |
| இங்கு நம்மில்லங்கள் | 7.66 | இருபா 20 | 702மு |
| செங்கமலப்பொற்பாதம் | 7.67 | இருபா 20 | 705மு |
| உன்கையிற்பிள்ளை | 7.73 | நெஞ்சு 128 | 1151 |
| எங்கெழிலென்ஞாயிறு | 7.76 | சித்தி 8.31 | 555 |
| போற்றியருளுக | 7.77 | நெஞ்சு 128 | 1150 |
| போற்றியெல்லா | 7.78 | சிவப்பிர 18 | 775 |
| குற்றங்கள் நீக்கி | 8.117 | பாடியம்–அவை | 44 |

| முதற்குறிப்பு | பாட்டும் அடியும் | சாத்திரம் | பக்கம் |
|---|---|---|---|
| பந்தமுமாய் | 9.79 | பாடியம் 2.0 | 126 |
| கரணங்களெல்லாம் | 10.33 | சங்கற்ப 14.39 | 1239 |
| ஒருநாமம் ஒருருவம் | 11.3 | சிவப்பிர—பாயி | 719 |
| அவமாயதேவ | 11.13 | சங்கற்ப 17.74 | 1251 |
| அவமாயதேவ | 11.13 | சிவப்பிர 80 | 989 |
| கனவேயுந்தேவர்கள் | 11.37 | சிவப்பிர 98 | 1037 |
| வான்கெட்டு | 11.69 | சங்கற்ப 17.82 | 1252 |
| வான்கெட்டு | 11.69 | சிவப்பிர 82 | 994 |
| ஊன்கெட்டுயிர் | 11.71 | சிவப்பிர 80 | 988 |
| நிலநீர்நெருப்பு | 15.17 | பாடியம் 2.2 | 169 |
| நிலநீர்நெருப்பு | 15.17 | சங்கற்ப 17.69 | 1250 |
| உலகேழெனத்திசை | 15.19 | சங்கற்ப 18.75 | 1263 |
| சித்தஞ்சிவமாக்கி | 15.23 | சிந்தனை 18 | 755 மு |
| ஆனந்தக்கூத்தன் | 15.31 | சிந்தனை 95 | 854மு |
| துரைமாண்டவாபாடி | 15.56 | சித்தி 2.32 | 458 |
| முந்துநடுவுமுடிவும் | 18.19 | பாடியம் 1.0 | 75 |
| முந்தியமுதனடு | 20.29 | பாடியம் 1.0 | 75 |
| புவனியிற்போய் | 20.37 | சிவப்பிர 98 | 1036 |
| உடையாள்உன்றன் | 21.1 | நெஞ்சு 121 | 1145 |
| உடையாள் நடுவுள் | 21.1 | இருபா 20 | 706மு |
| என் கருத்து முடியும் | 21.4 | நெஞ்சு 121 | 1146 |
| ஆள்வாரிலிமாடா | 21.26 | சிற்றுரை 7—3 | 124 |
| ஆள்வாரிலிமாடா | 21.26 | சித்தி 8.29 | 553 |
| ஆள்வாரிலிமாடா | 21.16 | பாடியம் 7—3 | 455 |
| பொய்யிருள்கடிந்த | 22.10 | பாடியம் 6.0 | 393 |

| முதற்குறிப்பு | பாட்டும் அடியும் | சாத்திரம் | பக்கம் |
|---|---|---|---|
| உரையுணர்விறந்து | 22.12 | பாடியம் 1.1 | 82 |
| இன்றெனக்கருளி | 22.25 | சங்கற்ப 20.62 | 1279 |
| தந்ததுன்றன்னை | 22.37 | இருபா 20 | 704மு |
| ஆட்டுத்தேவர் | 23.17 | சிவப்பிர 80 | 985 |
| அருளைப்பெறுவான் | 25.4 | சிவப்பிர 91 | 1017 |
| வெஞ்சேலனைய | 25.37 | நெஞ்சு 129 | 1151 |
| இத்தைமெய்யென | 26.26 | சிற்றுரை 3.7 | 69 |
| இத்தைமெய்யென | 26.26 | பாடியம் 3.7 | 334 |
| வேண்டுந்தனையும் | 27.11 | சிவப்பிர 98 | 1038 |
| புலர்ந்துபோன | 32.2 | சிந்தனை 28 | 773மு |
| பாவியேற்கு | 32.19 | இருபா 20 | 701மு |
| கூறுநாவேமுதலாக | 33.17 | சிவப்பிர 96 | 1031 |
| யானுமதுவேவேண்டி | 33.23 | சித்தி 10.3 | 579 |
| அன்றேயென்றன் | 33.25 | நெஞ்சு 129 | 1151 |
| உம்பர்கட்கரசே | 37.1 | இருபா 20 | 705மு |
| யானேயோதவஞ் செய்தேன் | 38.37 | சிவப்பிர 92 | 1019 |
| கற்பனவும் இனியமையும் | 39.10 | சித்தி 9.8 | 570 |
| நின்னருள் நாணாமே | 44.12 | சிந்தனை 80 | 840மு |
| காணுங்கரண | 48.21 | பாடியம் 11.1 | 547 |
| காணுங்கரண | 48.21 | சிற்றுரை 11.1 | 190 |
| மின்னேரனைய | 50.1 | நெஞ்சு 128 | 1150 |
| ஓங்காரத்துட்பொரு | 51.27 | நெஞ்சு 121 | 1145 |

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# பாட்டு முதற்குறிப்பகராதி

எண் - பாட்டெண்

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# மெய் கண்ட சாத்திரம்

சைவ சித்தாந்தம்
*மெய்கண்ட தேவ நாயனார்* **(1223 A.D.)**
அருளிச் செய்த

# சிவஞான போதம்

திருச்சிற்றம்பலம்

**மெய்கண்ட தேவ நாயனார் வரலாறு**

தொண்டை நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் நடுவே உள்ளதான திருமுனைப்பாடி என்னும் நடுநாட்டிலே, திருப்பெண்ணாகடம் என்னும் திருப்பதியிலே, வேளாளர் குலத்திலே, சிவபெருமானிடத்தும் சிவனடியாரிடத்தும் அன்புமிக்குடையவராய், அச்சுத–களப்பாளர் என்னும் திருப்பெயருடையவராய் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் கல்விச் செல்வத்தினாலும் பொருட்செல்வத்தினாலும் சிறந்து விளங்கியும், மகப்பேறு இல்லாத குறையுடையவராய் இருந்தார். அவர் ஒருநாள் திருத்துறையூருக்குப் போய் தம் குலகுருவாகிய சகல ஆகமப் பண்டிதர் என்னும் சிறப்புப் பெயர் உடைய அருள் நந்தி சிவாசாரியாரிடம் சென்று தமக்கு மகப்பேறு இல்லாத குறையைத் தெரிவித்தார்.

அது கேட்ட அருள் நந்தி சிவாசாரியார், தம் வழிபடு கடவுளை வழிபாடு செய்து அதன் முடிவில் தேவாரத் திருமுறையை மலரிட்டு வணங்கி அதனிடத்தில் திருக்கயிறு சாத்தும்படி அச்சுத–களப்பாளருக்குச் சொல்லி அருளினார். அவ்வாறே அச்சுத–களப்பாளர் தேவார திருமுறையின் முன்னே எட்டு உறுப்புக்களும் நிலத்திலே தோயும்படி வணங்கி சிவபெருமானைத் துதித்து திருமுறைக்கண் கயிறு சாத்தினபொழுது திருஞான சம்பந்த அடிகள் பாடியருளிய திருவெண்காட்டுப் பதிகத்தில் இரண்டாவது பாட்டாகிய

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ள
நினைவாயினவே வரம் பெறுவர் ஐயுறவேண்டா ஒன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர் தம்மைத் தோயாவாம் தீவினையே"

என்னும் செய்யுள் காணப்பட்டது. பின்னர் சகலாகமப் பண்டிதர் பேருவகையுடன் அச்சுத-களப்பாளருக்கு அச்செய்யுளின் பொருளைக் கூறி திருவெண்காட்டுத் திருப்பதியின் மேன்மையையும், அப்பதியில் உள்ள திருக்குளத்தில் முழுகி இறைவனை வழிபடும் முறைமையையும் அறிவுறுத்தி, திருவெண்காட்டுக்குப் போகும்படி ஆணை செய்தார்.

அச்சுத–களப்பாளர் குருவின் ஆணையைத் தலைமேற்கொண்டு மனைவியாருடன் திருவெண்காட்டிற்குச் சென்று நாள்தோறும் சோமகுளம், சூரியகுளம், அக்கினிக்குளம் என்ற மூன்று குளங்களிலும் நீராடி சிவபெருமானையும் இறைவியையும் சிலகாலம் மெய்யன்புடன் வழிபட்டு வந்தார்.

ஒரு நாள் இரவில், அச்சுத–களப்பாளர் தூங்கும்போது இறைவன் அவர் கனவில் வந்து தோன்றி 'அன்பனே! உனக்கு இப்பிறவியிலே மக்கட்பேறு அரிதாயினும் எமக்கு மிகவும் விருப்பம் உடையதாயும் மெய்யன்போடு தன்னை ஓதுவார்க்கு எல்லாப் பேறுகளையும் தருவதாயும் உள்ள தேவார திருப்பதிகத்தையே உண்மையாக நம்பி வந்து வழிபாடு செய்கின்றாய். ஆதலின், அத்தேவாரங்களைப் பாடிய ஞானசம்பந்தன் போலவே அத்தேவாரத் திருப்பதிகங்களின் மெய்ப்பொருளை விளக்கி, மெய்ந்நெறியாகிய சைவ சமயத்தையும் விளக்கி நிறுவ வல்ல நற்புதல்வன் ஒருவனை நாம் உனக்குத் தந்தோம்' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

உடனே, அச்சுத–களப்பாளர் விழித்தெழுந்து பெருமகிழ்வுற்று திருவெண்காட்டு இறைவர் தமக்குத் திருவருள் புரிந்ததை நினைத்து, அவரை வணங்கித் துதித்து, நிகழ்ந்த செய்தியைத் தம் மனைவியாருக்குத் தெரிவித்து, அவரோடு தாமும் திருக்கோவில் சென்று இறைவனையும் இறைவியையும் மிக்க பேரன்போடு வழிபட்டு தமது இல்லத்திற்குத் திரும்பினார். இங்ஙனம், அவர் நாள்தோறும் தம் மனைவியாரோடு திருக்கோவில் சென்று நீராடி வழிபாடு செய்து வந்தார். சிலகாலம் சென்றபின் அவர் மனைவியார் திருவயிற்றில் சிவபிரான் திருவருளினால் கரு தோன்ற பெரும்பேறு உளதாயிற்று.

அஃதறிந்த அச்சுத–களப்பாளர் சிவபிரான் தமக்கு அருள்செய்த திருவருளைப் புகழ்ந்து, துதித்து பத்துத் திங்களிலும் செய்ய வேண்டிய சடங்குகளை சிவாகம நெறிப்படி செய்து வந்தார். தென்னாடு செய்த தவவலியால் சைவ சமயம் சிறந்து விளங்குமாறு நற்கோள்கள் அமைந்த நல்ல வேளையிலே அவருக்கு நற்புதல்வர் ஒருவர் தோன்றி அருளினார்.

அச்சுத–களப்பாளர் பெருமகிழ்வுற்று குழந்தைக்கு சிவாகம நெறிமுறைப்படி செய்ய வேண்டிய பிறப்புக்குறிப்பு எழுதுதல் முதலிய சடங்குகளைச் செய்து அப்புதல்வருக்குத் திருவெண்காடர் என்னும் திருப்பெயர் இட்டருளினார். பின்பு, அவர் தம் மனைவியாரோடு அருமைக் குழந்தையோடும் திருவெண்காட்டு இறைவனையும் இறைவியையும் வழிபட்டு விடைபெற்றுக் கொண்டு தமது உறைவிடமாகிய திருப்பெண்ணாகடத்தை அடைந்தனர். அச்செய்தி அறிந்த அவ்வூரில் உள்ளோர் அச்சுத–களப்பாளர் மனைக்கு வந்து, இறைவன் திருவருளால் தோன்றி அருளிய குழந்தையைப் பார்த்து ஆசீர்வதித்து உவகையுடன் சென்றனர். அத்திருப்புதல்வர் வளர்பிறைபோல வளர்ந்துவரும் நாளில் திருவெண்ணெய் நல்லூரில் இருந்த அவர் நன்மாமனார் திருப்பெண்ணாகடம் வந்து குழந்தையைப் பார்த்து பெருமகிழ்வுற்று அவரைத் தம் இல்லத்திற்குக் கொண்டுபோய் அன்போடு வளர்ப்பாராயினர்.

அவர் இங்ஙனம் வளர்ந்து இரண்டாண்டு நிறைவுற்றபோது முற்பிறவியிலேயே சரியை, கிரியை, யோகம், ஞானம் முடிக்கப்பெற்ற சாமு சித்தராதலின், சிவபிரானை உள்ளவாறு உணரும் மெய்யுணர்வு கைவரப்பெற்றவராய் விளங்கியருளினார். அப்பொழுது சிவபிரான் எழுந்தருளியிருக்கும் திருக்கயிலையில் காவல்பூண்ட திருநந்தி தேவர் மரபில் சனற்குமாரர் மாமுனிவருடைய மெய்யறிவுப் புதல்வராகிய சத்திய ஞான தெரிசனிகளிடம் அருள்விளக்கம் பெற்ற பரஞ்சோதி மாமுனிவர் என்பார் பொதிகை மலையில் வீற்றிருக்கும் அகத்திய மாமுனிவரைக் காணும் பொருட்டு பொதிகை நோக்கி வெளி வழியே (ஆகாய மார்க்கம்) செல்லும்பொழுது திருவெண்ணெய் நல்லூரில் அருள் ஒளிப் பிழம்பாய் விளங்கிய மெய்கண்ட தேவரைப் பார்த்து நிலத்திறங்கி, அவருக்கு சிவஞானத்தைக் கொடுத்தருளி, 'இதனை தமிழுலகம் உணர்ந்து உய்யும் பொருட்டு ஏது திருட்டாந்தங்களினால் விளங்க உரைக்க' என்று திருவாய் மலர்ந்தருளி தம் குருவாகிய சத்திய ஞான தெரிசனிகள்பால் தாம் கேட்டவாறே அவருக்கு சைவ சித்தாந்த மெய்ப்பொருளை உள்ளவாறு உணர்த்தி 'மெய்கண்டார்' என்ற திருப்பெயரையும் சூட்டி அவரைவிட்டு நீங்கி மீண்டும் வெளி வழியேறிச் சென்றார்.

பின்பு, மெய்கண்ட தேவர் திருவெண்ணெய் நல்லூரில் உள்ள பொள்ளாப் பிள்ளையார் திருக்கோவில் சென்று அங்கு திருமுன்பு நிட்டைகூடி, சிவஞானப் பொருளை தமது உள்ளத்தில் உள்ளவாறு நினைந்துணர்ந்து இத்தமிழுலகம் உய்யுமாறு சிவஞானத்தை ஏது திருட்டாந்தங்களினால் உரைத்தருளினார். மெய்யறிவு விளங்கப் பெற்ற ஞாயிறாய் விளங்கித்

தம்மை அடைந்த தகுதி வாய்ந்த மாணவர்கள் பலருக்கும் சிவஞானத்தை விளக்கி அறிவுறுத்திக் கொண்டு இருப்பாராயினர்.

அவர், இங்ஙனம் மாணவர்கட்கு சிவஞான நூற்பொருளை அறிவுறுத்திக் கொண்டு இருந்ததை திருத்துறையூரில் இருந்த குலகுருவாகிய அருள்நந்தி சிவாசாரியார் கேள்வியுற்று தம் மாணவர் பலரோடும் திருவெண்ணெய் நல்லூருக்குப் புறப்பட்டு வந்தார். அவர் அங்கு வந்து சேர்ந்தபொழுது அங்குள்ள சைவ நன்மக்கள் பலர் அவரை எதிர்கொண்டு வணங்கி முகமன் கூறினார்கள். ஆனால் மெய்கண்ட தேவர் மட்டும் அவர்களுடன் வரவில்லை. அவர் திருவெண்ணெய் நல்லூருக்குள் வந்த பின்னராவது அவரை வந்து பார்க்கவும் இல்லை. அருள்–நந்தி சிவாசாரியார் தம்மிடம் மெய்கண்ட தேவர் வராததை அறிந்து தாமே அவரைப் பார்த்துவர அவர் இருக்கை சென்றார். அவ்வாறு சென்ற பொழுது, மெய்கண்ட தேவர் தம் மாணவர்களுக்கு ஆணவ மல உண்மையைப்பற்றிக் கூறி விளக்கிக் கொண்டிருந்தாரேயன்றி, அருள்நந்தி சிவாசாரியாரைக் கண்டு ஒன்றும் பேசவில்லை.

தாம் அவர் இருப்பிடம் சென்றும் தம்மிடம் மெய்கண்ட தேவர் ஒன்றும் பேசாததைக் கண்டு உள்ளச் செருக்கோடு அருள்நந்தி ‘ஆணவமலத்திற்கு தன் உண்மை நிலை என்ன?’ என்று வினவினார். அவ்வினாவிற்கு விடையாக, மெய்கண்டதேவர் தம்முன் நின்று கொண்டிருந்த அருள்–நந்தி சிவாசாரியாரையே தமது ஆள்காட்டி விரலால் சுட்டிக் காண்பித்தார். காட்டவும் சிவாசாரியார் தமது அறியாமை நீங்கி மெய்யறிவு விளங்கப் பெற்று மெய்கண்ட தேவர் திருவடிகளில் விழுந்து வணங்கி தமக்கு மெய்ப்பொருளை அறிவுறுத்த வேண்டும் என்று குறையிரந்தார். அவ்வாறு குறையிரந்த அருள்நந்தி சிவாசாரியாரது முதிர்ந்த அறிவு நிலையைக் கண்ட மெய்கண்டதேவர் அவருக்கு மெய்ப்பொருளை உள்ளவாறு உணர்த்தி தம் மாணவர் நாற்பத்தி ஒன்பது பேர்களுள் முதன்மையான மாணவராய் இருக்கும் பெருமையையும் நல்கினார்.

அருள்–நந்தி சிவாசாரியார் தாம் தம் ஆசிரியர்பால் கேட்ட மெய்ப்பொருளை விரித்து விளக்கி முதல்நூலாகிய சிவஞான சூத்திரத்திற்கு வழிநூலாக சிவஞான சித்தியார் என்ற நூலை செய்தருளினார். இன்னும் அவர் இருபாவிருபஃது என்ற நூலையும் செய்தருளினார். மெய்கண்ட தேவர் சிலகாலம் நிட்டை கூடியிருந்து ஐப்பசித் திங்களில் சுவாதி நாளில் எங்கும் நிறைந்துள்ள பெருஞ்சுடர் பிழம்பாகிய சிவபெருமானொடு இரண்டறக் கலந்து பேராப்பேரின்ப வாழ்வு நிலையை அடைந்தார்.

ஸ்ரீமெய்கண்ட தேவநாயனார் அருளிச் செய்த சிவஞான போதம், சைவ சித்தாந்தச் செந்நெறியின் தலைமணி ஞான நூலாக விளங்கும் சிறப்புடையது. சுருங்கிய யாப்பில் பன்னிரெண்டே நூற்பாக்களில், சைவ சித்தாந்தத்தின் கொள்கைகள் அனைத்தையும் நுட்பமாகவும், திட்பமாகவும் விளக்கும் மேன்மையுடையது. இத்தகு அருள் நூல் என்றும் நின்று நிலவுதல் வேண்டுமென்ற பெருங்கருணைத் திறத்தால், திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம் 26–ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், 'சிவஞான போதம்' பன்னிரெண்டு நூற்பாக்களையும் அனைவருக்கும் பயன்படும் வண்ணம் கல்லில் வெட்டுவித்து, மெய்கண்டார் அவதரித்தருளிய பெண்ணாகடம் களப்பாளர் மேட்டில் திகழும் ஸ்ரீமெய்கண்டார் திருக்கோயிலில் அமைத்து உள்ளார்கள்.

இந்த சிவஞான போதத்திற்கு மாதவச் சிவஞான முனிவர் சிற்றுரை ஒன்றும் பேரூரை ஒன்றும் எழுதி உள்ளார்கள். பேரூரையை சிவஞான மாபாடியம் என்று கூறுவர். இவர், தமிழ்நாட்டில் தாமிரபரணி நதிக்கரையில் உள்ள விக்கிரமசிங்கபுரம் என்ற ஊரில் 13ஆம் நூற்றாண்டில் பிறந்தவர். அவர், திருவாவடுதுறை மடத்தின் குலதெய்வம் என்று போற்றப்பட்டார். அதுமட்டுமல்லாமல், அவர் சித்தாந்த சைவர்கள் ஒவ்வொருவருக்கும் குலவிளக்காய் விளங்கினார். அவர் 1785ஆம் வருடம் சித்திரை மாதம் சுவாதி நட்சத்திரத்தில் திருவாவடுதுறையில் பரிபூரணம் அடைந்தார்கள்.

சிவஞான போதத்தில் உள்ள எட்டாம் சூத்திரத்தின் விளக்கமே, மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும் திருக்கோவையாரும் ஆகும். உலகில் மிகச்சிறந்த உயரிய தத்துவம் "சைவ சித்தாந்தம்" என்பது சான்றோர்கள் கண்ட முடிவு. இவ்வளவு உயர்ந்த சைவ சித்தாந்த தத்துவத்தை மிகச் சுருங்கிய அளவிலான நாற்பதே வரிகளில் (216 வார்த்தைகளில்) மெய்கண்ட தேவநாயனார் அருளிச் செய்துள்ளார். அதை மக்கள் சிறு வயதிலேயே மனப்பாடம் செய்து கொள்ளுவார்களானால், பின்னால் அவர்கள் தத்துவ அறிவு விளக்கத்தை விரும்பும்பொழுது, இது மிகவும் உறுதுணையாக அமையும். இக்காரணங்களினால் சிவஞானபோதத்தை இந்த நூலில் இடம்பெற அமைத்துள்ளோம்.

மெய்கண்டார் திருவடி வாழ்க

# MEI-KANDA-SAATHIRAM

## Canonical Texts of the Saiva Siddhanta Philosophy

### Life History of Mei-Kanda-Devar

The Chola kingdom and Thondai kingdom are separated by a land called Thiru-Munaip-Paadi (Nadu Naadu). In this land, there is a town called Thirup-Pennaa-Kadam where lived a venerable man called Achchutha-Kalappaalar. He was a very pious and true devotee of Lord Civa. He bestowed on the devotees of Lord Civa all kinds of help they needed. Though, he was well off economically and intellectually, he was not happy because he had no issues for a long time. Therefore, he approached his family preceptor and requested him to bestow his blessings to get a child. His family preceptor Sri Arul Nandhi Civaa-chaariyaar suggested a process known as 'Biblio-mancy' i.e., random opening of the scriptures text by laying a thread and accepting the divine revelation found therein (திருமுறையில் கயிறு சாத்திப் பார்த்தல்).

With all earnestness, he followed the process meticulously according to his preceptor's advice. He then came across the following poem.

peyadaiyaa piriveithum pillaiyinodu ulla
ninaivu aayinavee varam peruvar aiyura veenda ondrum
veeyanathol umaipangan venkaatu mukkula neer
thooivinayaar avarthammaith thooyaa-vaam thee vinaiyee

Thiru-Gnana-Sambandar (Thevaaram 1983)

**Gist of the Poem:**

Lord Civan, consort of Uma whose shoulders are as soft as bamboo is bestowing grace on His devotees in the temple situated in Thiru-Ven-Kaadu (near Virudhaachalam). Those who visit this temple and worship the Lord with full devotion, after taking bath in the three tanks called 'Muk-kulam' (முக்குளம்) - (சோம, சூரிய, அக்கினி தீர்த்தங்கள்) would beget a child. Also, they would be exorcised and relieved from all other problems in their life. No one need to doubt about these good effects.

As per the reading of the above poem, Achchutha-Kalappaalar and his wife went to the temple in Thiru-Ven-Kaadu and did the penance and prayer for 48 days very diligently and with full devotion.

Soon thereafter, they begot a boy child. They named the child as 'Thiru-Ven-Kaadar'. He was also called Suvetha-Vanap-Perumal (சுவேத வனப் பெருமாள்), which is the name of the deity in Thiru-Ven-Kaadu Temple. The child was growing well to the admiration of everybody. The child's maternal uncle who lived nearby in Thiru-Vennai-Nalloor came to see his sister's child and was extremely happy to see the child. On his return, he took the child with him and nurtured the baby in the divine way of life.

One day, Thiru-Ven-Kaadar was playing in the street in front of his house in Thiru-Vennai-Nalloor. He was just two and a half years old then. At that time, Paranjothi Munivar was travelling in space from Mount Kailash to meet Saint Agasthiyar in Pothigai Hills in South India (Western Ghats)*.

This Saint Paranjothi, while travelling in space over Thiru-Vennai-Nalloor, sighted the boy - Thiru-Ven-Kaadar enwrapped in divine light (halo). Thiru-Ven-Kaadar, a Saamu-Sidhdhar (சாமு–சித்தர்) was a devotee of Lord Civan even at this young age with inborn enlightenment owing to the influence of his meritorious deeds in his previous births and had the full knowledge of reality (தத்துவஞானி).

---

* **Note:** Paranjothi Munivar is the fourth and last link in the Ahach-Chanthaana-Achaaryaas (அகச்சந்தான குரவர்கள்). These four Achaaryaas or Kuravargal received their spiritual instructions and got initiated into the mysteries of religion by communication of the manthraas from Lord Civa.

Geneology of the four Ahach-Chanthaana Kuravargal (Achaaryass)




(These four are celestial preceptors)

Realizing the high spiritual status of Thiru-Ven-Kaadar, Paranjothi Munivar landed by his side. He imparted spiritual initiation to him and explained the Sivagnaanam that was acquired by him from his preceptor Saint Sathya Gnaana Dharshni. He also gave him the Spiritual Name (Deeksha Name - தீட்சா நாமம்) as Mei-Kandaar (மெய்கண்டார்), which is the Tamil version of his preceptor's name. Thereafter, Paranjothi Munivar proceeded on his onward journey.

The young Mei-Kandaar went to the Ganesh temple nearby known as 'Pollap-Pillaiyaar Kovil' (பொள்ளாப் பிள்ளையார் கோவில்) and went on a long meditation recollecting the knowledge which was imparted to him by Paranjothi Munivar. Later on, he brought out a treatise on 'Sivagnaanam', which we now call as 'Sivagnaana Botham'. This is a treatise on Saiva Siddhanta Philosophy which represent the cream of Tamilian thought and Tamilian Self-Realisation. The philosophical details given therein, are unique in several aspects and go far beyond the limits which other well known systems have reached.

Mei-Kandaar's name and fame started spreading all around. Scholars gathered and listened to his philosophical exposition of Saiva Siddhanta.

In the meantime, the family preceptor (Sakala-Aagama-Pandithar) Arul-Nandhi-Civaa-chaariyaar came to know about the divine qualities of Mei-Kandaar and went to meet him in Thiru-Vennai-Nalloor. He had some egoistic feelings in his mind as to why the boy born out of his efforts and advice had not been brought to him to get his blessings. When he reached Thiru-Vennai-Nalloor many of his aspirants greeted him and offered worship to such a great scholar of eighty two years old. Even then Mei-Kandaar had not gone to receive and greet him. His egoism rose up further. Then he himself went to the Ganesh temple where Mei-Kandaar was preaching. Even on reaching the place, Mei-Kandaar did neither notice him nor went near him to prostrate. Arul-Nandhi-Civaa-chaariyaar's egoism reached its climax. With egoistic and perturbed condition of his mind, he suddenly addressed Mei-Kandaar and asked him 'What is the essential nature of Aanava Malam (ஆணவ மலம்)?'. Mei-Kandaar then only realized the presence of the old man. Instead of replying to his question by words of mouth, Mei-Kandaar pointed his forefinger towards the old man. That very moment, the old man's spiritual knowledge sparkled and he prostrated before Mei-Kandaar and begged him to take him as his

disciple. Thus, Arul-Nandhi-Civaa-chaariyaar became the foremost and leading out of forty-nine disciples to whom Mei-Kandaar imparted this great philosophical knowledge.

After some years, Mei-Kandaar reached the lotus Feet of Lord Civan. The fourteen *Siddhantha Shastras* are the authoratative works expounding the Saiva Siddhantha system of philosophy. They were codified during the 12th, 13th, and 14th Centuries.

The most important of the fourteen, is undoubtedly *Meikanda Deva's Sivagnana Bodham* (மெய் கண்ட தேவர் அருளிய சிவஞான போதம்). *Meikanda Deva* belonged to the first half of the thirteenth Century.

**Meikanda Deva* stands at the head of the *Purach-chanthaana Paramparai* (Religious teachers - புறச்சந்தான குரவர்கள்.) His preceptor, St. Paranjothi, is the last link in the celestial chain (called the Ahachandanam - அகச்சந்தான குரவர்கள்).

Of these fourteen *Shastras*, *Sivagnana Bodham*, *Sivagnana Siddhiyar* and *Civaprakasam* are the three that are mostly studied and referred to, by scholars. They form a class by themselves and are respectively called the Primary, Secondary, and the Derivative. It is for these three works that we find several commentaries. Of all the commentaries of the *Sivagnana Bodham*, the best one is the commentary of *Madhava Sivagnana Swamigal* (மாதவச் சிவஞான சுவாமிகள்) of Vickrama-singa-puram, Tirunelveli, Tamil Nadu, India.

These fourteen Shastras divide the Universe into three eternal categories, Pati, Pasu, Paasam (பதி, பசு, பாசம்). They co-exit for all times. Pati is God; Pasu is Soul; Paasam is Bondage.

Matter

---



These three have no beginning and no end. Of these Pati, or God has two aspects, i.e., the transcendental and the immanant. He has the following eight attributes:

| | |
|---|---|
| 1. Self control | 1. தன் வயத்தனாதல் |
| 2. Free from all impurities | 2. தூய உடம்பினன் ஆதல் |
| 3. Fountain head of wisdom | 3. இயற்கை உணர்வினன் ஆதல் |
| 4. Omniscience | 4. முற்றும் உணர்தல் |
| 5. Free from bondage | 5. இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல் |
| 6. Boundless Grace | 6. பேரருள் உடைமை |
| 7. Omnipotence | 7. முடிவில்லா ஆற்றல் உடைமை |
| 8. Boundless happiness | 8. வரம்பில்லாத இன்பம் உடைமை. |

All these are perfect and absolute in Him. He is the Supreme Lord of the universe and the Supreme Regulator of the destinies of the Soul. He is the Supreme Director of the five great cosmic action:

| | |
|---|---|
| 1. Creation | 1. படைத்தல் |
| 2. Protection or Sustentation | 2. காத்தல் |
| 3. Dissolution | 3. ஒடுக்கல் (அழித்தல்) |
| 4. Veiling or obscuration | 4. மறைத்தல் |
| 5. Bestowal of Grace | 5. அருளல் |

In all these actions, He is inseparably united to Chakthi (சக்தி). He is the efficient cause; the Chakthi is the instrumental cause; and Maayaa (மாயா) is the material cause. The soul, too is as eternal as God Himself. Similarly Pasu (Soul) and Paasam (Bondage) have no beginning and no end like Pati (God). These, and many other concepts about philosophy are found in all the fourteen Shastras but mainly in the *Sivagnana Bodham*.

The first commentary for these 216 words of 'Sivagnaana Botham' by Maadhava Sivagnana Munivar* runs to more than 500 pages. A few more books by different scholars are appearing in the market now and then giving commentary for Sivagnaana Botham as well for

* Maadhava Sivagnana Munivar known as Draavida Mahaa Bhaashyakaarar born in a village called Vikkramasingapuram situated in the river bed of Tambarabarani in Tamilnadu, South India. He attained Pari Pooranam in 1785 in the Tamil Month of Chithirai (April - May) in the star of Aailyam (9th Star). His exact birth date is so for not known. He is not only a tutelary deity of Thiruvaavaduthurai Aadheenam, but also he is the family deity of every true Saiva Siddhantin.

*Saiva Siddhantam* John H. Piet in his book 'A Logical Presentation of the Saiva Siddhanta Philosophy' writes as under:

> 'The Saiva Siddhanta means the conclusion of conclusions - that which speaks the last religious - philosophical word. It is the final authority, the terminus of philosophical thought, the capstone of religious beliefs. By its very name, it claims that nothing higher exists'.

Rev. H. W. Schomerus, a German Scholar, have also written about the Saiva Siddhanta Philosophy. In the year 1854, Rev. H. R. Hoisington was the first scholar to translate the Sivagnaana Botham into English even before it was printed in Tamil. Now, in the year 1948, one Rev. Gorden Mathews has brought out a translation of Sivagnaana Botham in such a detailed manner as to surpass all earlier editions.

The Thiruvaachakam is verily an illustration of the philosophical concepts immanent in the 8th aphorism of the *Sivagnana Bodham.* We, therefore, preferred to reproduce *Sivagnana Bodham* also in this book as to enable children to memorise these forty lines easily. Later in their life, they can study the commentary and understand the Philosophy. The twelve aphorisms of Tamil *Sivagnana Bodham* contains only 40 lines of 216 words. In these 216 words, they deal about God, Soul, Bondage (Malam), Maayaa, Karma and Liberation.

***Let the Holy Feet of Mei-Kandaar be hallowed for ever***

# சிவஞான போதம்

## மங்கல வாழ்த்து

### வஞ்சித்துறை

கல்லால் நிழல்மலைவு
இல்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

உரை: அருள் வடிவாகிய கல்லால மர நிழலின்கண் எழுந்தருளியிருந்து, தனது மாணவர்க்கு மலைவு தீர்த்து அருளிய முதலாசிரியர், மேன்மேலருள் செய்தற்பொருட்டு, சுயம்பு மூர்த்தியாகிய பிள்ளையாரது அறிவாற்றல், செயலாற்றல் என்ற இரண்டு திருவடிகளை மெய்யன்பர் தலைமேற்கொள்ளுவர்.

The good, will crown their heads with the two feet of Lord Ganesa who was begotten by the great teacher who sat under the sacred mountain banyan tree and removed the doubts of the great Nandhi.

### அவையடக்கம்

தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை உடைமை எமைஇகழார் – தம்மை
உணரார் உணரார் உடங்கு இயைந்து தம்மில்
புணராமை கேளாம் புறன்.

உரை: (உடைமைப் பொருளாகிய) தம்மியல்பினை உணர்ந்து தம்மை உடையனாகிய தலைவனை உணர்ந்தவர்கள், தமக்கு உடைமையாக எம்மை உடையவர்களாதலின், எம்மை அன்பாற் பாராட்டுவாரன்றி இகழமாட்டார். தம்மை உணராதவர்கள் தலைவனையும் உணராதவர்களே. அவர்கள் ஒருங்கு சேர்ந்து தம்முள் ஒற்றுமைப்பட மாட்டாராகலான், அவர்களது புறங்கூற்று மொழியை யாம் பொருளாகக் கொள்ளாம்.

Those who know their Lord from the knowledge of themselves (their true nature) will not revile me, and my word as I am their own slave. Those who do not know themselves, cannot know this, and of course cannot agree among themselves. Their abuse I hear not.

## பொது அதிகாரம்

### பிரமாண இயல்

### முதல் சூத்திரம்

அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்(து) உளதாம்;
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

உரை: அவன், அவள், அது என்று பகுக்கப்படும் உலகத் தொகுதி, தோன்றுதல், நிலைபெறுதல், ஒடுங்குதல் ஆகிய மூன்று தொழிலுடைமையால், அது ஒருவனால் தோற்றுவிக்கப்பட்டு, நிலை பெறுவதேயாம். அது, தான் ஒடுங்குதற்குக் காரணமான, கடவுளாலேயே தோன்றுவது. ஆணவமலம் தீர்ந்து ஒடுங்காமையால், அது ஒடுங்கியதோடு நில்லாது மீளவும் உண்டாவது. அதற்கு ஒடுக்கமாய் முடிவைச் செய்யும் அந்தமாகிய கடவுளே ஆதியுமாகின்றான் எனத் தருக்க நூலறிந்தோர் கூறுவர்.

As the seen universe, spoken of as He, She, and It, undergoes three changes (origin, development and decay); this must be an entity created by an efficient cause. This entity owing to its conjunction with *Aanava Mala* has to emanate from 'Hara' to whom it returns during Dissolution *(Samhaaram)*. Hence the learned say that 'Hara' is the first cause.

### இரண்டாம் சூத்திரம்

அவையே தானே ஆய் இரு வினையிற்
போக்கு வரவு புரிய, ஆணையின்
நீக்கமின்றி நிற்கும் அன்றே.

உரை: இறைவன் கலப்பினால் உயிர்களேயாயும், தன்னியல்பால் தானேயாயும், உயிர்களுடன் நின்று அறிவித்தலால், உடனாயும் நின்று, கட்டளை என்ற தனது ஞானசத்தியால் இருவினைப் பயனுக்கேற்ப இறத்தல் பிறத்தல்களை உயிர்கள் மேற்கொள்ளும்படி, அந்த ஞான சத்தியோடு பிரிவில்லாது நிற்பன்.

He is one with the souls (*Abetham*). He is different from them (*Betham*). He is one and different from them (*Bethabetham*). He stands in *Samavaya* union with his *Gnana Sakti* and causes the souls to undergo the processes of evolution (births) and return (*Samhaaram*) by inducing their good and bad acts (*Karma*).

### மூன்றாம் சூத்திரம்

உளது இலது என்றலின், எனது உடலென்றலின்,
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின், கண்படில்
உண்டிவினை யின்மையின், உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.

உரை: நான் இதுவல்ல, அதுவல்ல என்று கூறுவதொன்று உண்டாகலானும், எனது உடல் என உடலைக் கூறுவதொன்று உண்டாகலானும் ஐம்பொறியினையும் அவற்றின் நீக்கத்தையும் அறியும் அறிவுடையது ஒன்று இருத்தலானும், துயின்றபோது, உணவு, செயல், இல்லாதது ஒன்று இருத்தலானும், ஒன்றை உணரச் செய்யுங்காலை, உணர்வதொன்றி இருத்தலானும், மாயையால் ஆகிய கருவியாகிய உடம்பினுள், உயிரென்பது உடம்பின் வேறாய் உள்ளது.

It rejects every portion of the body as not being itself; it says my body; it is conscious of dreams; it exists in sleep without feeling pleasure or pain or movements; it knows from others; This is the soul which exists in the body formed as a machine from *Maayaa*.

## *இலக்கண இயல்*

### நான்காம் சூத்திரம்

அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்று அவை
சந்தித்த(து) ஆன்மாச் சகசமலத்(து) உணராது
அமைச்(சு) அர(சு) ஏய்ப்பநின்(று) அஞ்சு அவத்தைத்தே.

உரை: ஆன்மா, அகக்கருவிகளாய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அவைகளில் ஒன்று அன்று; அரசனுக்கு அமைச்சன் போல அவற்றைத் துணையாகக் கொண்டுளது ஆன்மா. தன்னோடு எப்போதும் உள்ள ஆணவ மலத்தினால் பொருள்களைத் தானே அறியமாட்டா. அவற்றின் துணைகொண்டு அறிந்து ஐந்து வகையான உணர்வு எல்லைகளை உடையது ஆன்மா.

The soul is not one of the four *Anthakarana*. It is not conscious when it is in conjunction with *Aanavamala*. It becomes conscious only when it meets the *Anthakarana*, just as a king understands through his ministers. The relation of the soul to the five *Avastha* is also similar.

### ஐந்தாம் சூத்திரம்

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்(கு)
அளந்தறிந்து அறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமிஅருள்;
காந்தங் கண்ட பசாசத் தவையே.

உரை: மேலே கூறிய உயிராலே, மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து பொறிகளும் தத்தம் விடயங்களை அளவிட்டறிந்தாலும் தம்மையும் தம்மைச் செலுத்தும் உயிரையும் அறிய மாட்டா. அப்பொறிகள்போல, உயிர்களும் தம்மையும் தமது அறிவிற்கு விளக்கந் தருபவனாகிய தனி முதல்வனது திருவருட் சத்தியையும் அறிய மாட்டா. உயிர்கள் முதல்வனால் அறிதல், காந்தத்தின்முன் வைத்த இரும்புபோல முதல்வன் சந்நிதிமாத்திரையில் நிகழும். ஆதலால் முதல்வன் விகாரப்படான்.

The senses while perceiving the object cannot perceive themselves or the soul; and they are perceived by soul. Similarly, the soul while perceiving cannot perceive itself (while thinking cannot think the thought) and God. It is moved by the *Arul Sakti* of God, as the magnet moves the iron, while Himself remains unmovable or unchangeable.

### ஆறாம் சூத்திரம்

உணருரு அசத்தெனின், உணரா தின்மையின்,
இருதிறன் அல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே.

உரை: இறைவன் அறியப்படும் இயல்பினன் எனின் உலகப் பொருள் போல நிலையிலாப் பொருள் ஆவான். அவன் எவ்வாற்றாலும் அறியப்படாதவன் எனின், அவன் சூனியம் ஆவான். ஆதலின் இரண்டு தன்மையும் இன்றி உயிர் அறிவால் அறியப்படாமையும், பதியறிவால் அறியப்படுதலுமாகிய இரண்டு வகையானும் இறைவன் சித்தாகிய சத்தாய் உள்ளவன் எனக்கூறுவர் மெய்யில் நிலைபெற்று உயர்ந்தோர்.

That which is perceived by the senses is *Asat* (changeable). That which is not so perceived does not exist. God is neither the one nor the other; and hence called Civa Sat or Chit Sat by the wise; Chit or Civa when not understood by the human intelligence and Sat when perceived with divine wisdom.

## உண்மை அதிகாரம்

### சாதன இயல்

### ஏழாம் சூத்திரம்

யாவையும் சூனியம் சத்(து)எதிர் ஆகலின்,
சத்தே அறியா(து); அசத்தில(து) அறியா(து);
இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா.

**உரை:** அசத்தாகிய உலகப் பொருள் எல்லாம் சத்தாகிய சிவத்தின்முன் பாழாம் ஆகலின், சத்து அசத்தை அறிதல் செய்யாது. அசத்தாகிய உலகம் அறிவிலதாகலின் ஒன்றையும் அறியும் தன்மை உடையது அன்று. சத்தையும் அசத்தையும் அறியும் இருவகைத் தன்மை உடையதாய்ச் சத்தேயாகவும் அசத்தேயாகவும் இல்லாத சதசத்தாகி உயிர் உளது என அறிக.

In the presence of *Sat*, every thing else (Cosmos-*Asat*) is *Sunyam* (சூனியம்) (is not apparent). Hence *Sat* cannot perceive *Asat*. As *Asat* does not have intelligence it cannot perceive *Sat*. That, which perceives both, cannot be either of them. This is the Soul called *Satasat* (சதசத்து).

### எட்டாம் சூத்திரம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்(டு)
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.

**உரை:** உயிர்களது தவ மிகுதியால், அவற்றிற்கு உள் நின்றுணர்த்திய முதல்வன் குருவடிவாய் எழுந்தருளி வந்து, நீ ஐம்பொறிகளாகிய வேடருள் அகப்பட்டு வளர்ந்து நின் பெருந்தன்மையை மறந்தாய் என்று உண்மை யறிவிக்க அறிந்து ஐம்புல வேடரை விட்டு நீங்கி, இறைவனோடு அந்நியமாகாத தன்மையில் நிலைபெற்று அவன் திருவடிகளை அணையும் என்றவாறு.

The Lord appearing as Guru to the Soul which has advanced in Tapas (Virtue and knowledge) instructs him that he has wasted himself by living among the savages of the five senses; and on this, the soul, understanding its real nature, leaves its former associates, and not being different from Him, become united to His Feet.

### ஒன்பதாம் சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி;
உராத் துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதி; விதி யெண்ணும் அஞ்செழுத்தே.

உரை: குறைவான அறிவாகிய பாசஞானத்தால் அறியப்படாத முதல்வனை அவனது திருவடி ஞானமாகிய கண்ணினால், அறிவின்கண்ணே ஆய்ந்தறிக. ஒருவரும் ஏறிச்செலுத்தாத விரைவுடைய பேய்த்தேராகிய கானல் போலப் பாசக்கூட்டம் நீங்கியொழிய இறைஞானமானது பிறவித்துயராகிய வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு, விளங்கும். அக்காட்சி சலியாமைப் பொருட்டு, அப்பொருள் பயக்குந் திருவைந்தெழுத்தை விதிப்படி தியானிக்க.

The soul, on perceiving in itself with the eye of *Gnanam*, the Lord who cannot be perceived by the human intellect or senses, and on giving up the world (*Pasa*) by knowing it to be false as a mirage, will find its rest in the Lord. Let the soul contemplate *Sri Panchatchara* (ஸ்ரீ பஞ்சாட்சரம் - சிவாய நம) according to Law.

## *பயன் இயல்*

### பத்தாம் சூத்திரம்

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க;
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

உரை: உயிர்கள் கட்டுற்ற காலத்திலே, இறைவன் உயிரோடு அத்துவிதமாய்க் கலந்து நின்ற அம்முறையே, உயிர் முதல்வனோடு ஒற்றித்து நின்று தானென வேறு காணப்படுமாறு இல்லாமல், இறைவன் கட்டளையில் வழுவாது நிற்கவே, ஆணவமலம், மாயை என்பவற்றோடு, கொடிய வினையும் இல்லையாய் ஒழியும்.

As the Lord becomes one with the Soul in human condition, so let the Soul become one with Him and perceive all its action to be His. Then will it lose all its *Mala*, *Maayaa* and *Karma*.

### பதினோராம் சூத்திரம்

காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்
காணஉள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

உரை: காட்டக் காணும் இயல்புடைய கண்ணுக்கு உருவத்தைக் காட்டித் தானும் காண்கின்ற உயிர்போல, உயிர் பொருள்களை அறியும்படி முதல்வன் அதனோடு இயைந்து நின்று அறிவித்து அறிந்து வருதலால், அந்த உபகாரத்தை மறவாது கடைபிடித்துச் செய்யும் அன்பாலே, முதல்வன் திருவடியாகிய சிவானந்த அனுபவத்தை எய்தும்.

As the soul enables the eye to see and itself sees, so *Hara* enables the soul to know and itself knows. And this *Adwaitha* knowledge and undying Love will unite it to His Feet.

### பன்னிரண்டாம் சூத்திரம்

செம்மலர் நோன் தாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மால்அற நேய(ம்) மலிந்தவர் வேட(மு(ம்)
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே.

உரை: சீவன்முத்தன் உடம்பில் வீடெய்தியவன் செந்தாமரை மலர்போல விரிந்து விளங்கிய முதல்வனது வலிய திருவடிகளை அணைய வொட்டாது மறத்தலைச் செய்விக்கும் மும்மல அழுக்கை ஞானநீரால் கழுவி, மறவா அன்பு செய்யும் அறிஞரோடு கலந்து மலமயக்கம் நீங்க, அன்புமிக்க அவரது திருவேடத்தையும் சிவன்கோயிலையும் முதல்வன் எனவே கண்டு வழிபடுவன்.

Let the *Jivatmaa* after washing off its *Mala* which separates it from the strong Lotus Feet of the Lord and mixing in the society of *Bhaktas* (*Jivan Muktas*) whose soul abound with love, having lost dark ignorance, Contemplate their Forms as well the Forms in the temples as His Form.

ஸ்ரீமெய்கண்ட தேவ நாயனார் திருவடி வாழ்க

# எடுத்தாண்ட நூல்கள்

## REFERENCES


1. திருவாசகம் – மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் எழுதிய நூலாராய்ச்சி, குறிப்புரைகளுடன் தருமை ஆதீனப் பதிப்பு எண் 202 – 1949.

2. திருவாசக வியாக்கியானம் – இரண்டாம் பகுதி – பதிகங்கள் – சீகாழித் தாண்டவராயர் – Madras Government Oriental Series – 1954.

3. திருவாசகம்–திருக்கோவையார் – குறிப்புரை ஆசிரியர் மகாவித்துவான் திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள் – தருமை ஆதீனப் பதிப்பு எண் 572 – 1966.

4. திருவாசகம் – திரு கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் உரையுடன் – B. இரத்தின நாயகர் சன்ஸ் – 1963.

5. திருவாசக விரிவுரை – நான்கு அகவல்கள் – உரையாசிரியர் மறைமலை அடிகள் – 1958.

6. திருவாசகம் – விளக்கவுரை – மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் – திருவாவடுதுறை ஆதீனப் பதிப்பு – 1964.

7. Thiruvaachakam - English Translation, Introduction and Notes by Rev. G. U. Pope, M.A., D.D. - Oxford University, England - 1900.

8. Thiruvaachakam - Translation in English Verse - by Thiruvaachakamani Sri K. M. Balasubramanian, B.A., B.L. - published by The Chennamalleeswarar and Chennakesava Perumal Devasthanam, Madras - 1958.

9. திருவாசகம் – ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் தபோவனப் பிரசுராலயம் – 1968.

10. Pathway to God through The Thiruvaachakam - by G. Vanmikanathan - Thirup-Panandal Sri Kasi Mutt Publication - 1980.

11. திருவாசகம் – மூலமும் பல ஆராய்ச்சி அகராதிகளும் – அகத்தியர் அருட்பணி மன்றம் – உரிமை சைவ சித்தாந்தப் பெருமன்றம் – 1992.

12. திருவாசகம் – விளக்கக் குறிப்புரை – மகாவித்துவான் திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள் – பொழிப்புரை – முனைவர் எம். சிவச்சந்திரன் அவர்கள் – தருமை ஆதீனப் பதிப்பு வெளியீடு எண் 994 – 1997.

13. Thiruvaachakam - The Hindu Testament of Love - by M.S. Ratna Ma Navaratnam, Jaffna, Ceylon, published by Bharathya Vidya Bhavan, Bombay - 1963.

14. திருவாசகம்–திருச்சதகம் – திரு. பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் இயற்றிய கதிர்மணி விளக்கம் – உரிமை மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை – 1965.

15. திருவாசகத் தேன் – தவத்திரு. குன்றக்குடி அடிகளார் – 1995.

16. திருவாசகம் – தெளிவுரை – புலவர் கருப்பூர் திரு. மு. அண்ணாமலை – 2000.

17. திருவாசகம்–சில சிந்தனைகள் – திரு. அ. ச. ஞான சம்பந்தன் – ஐந்து தொகுதிகள் – 1999.

18. Thiruvaachakam - Tamil Text and English Translation - by Sekkizhaar Adi-p-podi Sri T.N. Ramachandran, published by International Institute of Tamil Studies - 2001.

19. திருவாசகம் – மூலமும் உரையும் – டாக்டர் சாது. சு. ஸ்ரீனிவாஸ் – 2002.

20. Thiruvaachakam - Word Beatific - Translated into English by S.A. Sankara Narayanan - Sri Suriyanar Koil Aadheenam - 2001.

21. மெய்கண்ட சாத்திரம் – திரு. முத்து சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் – தருமை ஆதீனப் பதிப்பு வெளியீடு எண் 377 – 1942.

22. சிவஞான போதம் – வழித்துணை விளக்க உரையுடன் – முனைவர் ஆ. ஆனந்தராசன்.

23. Saiva Siddhantam - edited by Sekkizhaar Adi-p-podi Sri. T. N. Ramachandran - Volume 1 - 1984.

24. சிவஞான போதமும் சிவஞான பாடியமும் – திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் – வெளியீடு எண் 183 – 1936.

25. Civagnana Bodham - English Rendering and Commentary by J.M. Nallaswamy Pillai, Chennai - 1900.

திருவாசகம் இரண்டாம் தொகுதி முற்றிற்று.

Thiruvaachakam Second Volume ends.

